ௐ



ஸ்ரீ குருப்யோ நம:






உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்ச்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



இஃது

சமிவநக்ஷேத்திரமென்னும் கோயிலூர்,

ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர் மாணாக்கராகிய

ஸ்ரீமத் - த. அடைக்கல சுவாமிகள் இயற்றிய

ஆசிரியப்பா.



நீர்மலி வாரிதி நிலவிய தரங்கக்
கரங்களா லெற்றக் கறையிலார் முத்தம்
வாயில்க டோறும் வயங்கிக் குவியச்
சிற்றிடை மகளிர் சிறிய முச்சிலா
லெற்றிடு முழக்கமு மெந்நாட் டுள்ள
பல்வள பண்டம் பரித்திடு நாவாய்
தாழுறுந் துறையின் றனிதமுங்கூடி
விண்ணாட் டுள்ளவர் தம்மிரு கன்னமுஞ்
செவிடாம் வண்ணஞ் செய்துமேற் போகி
யண்டகடாக மதிர்த்திடும் வளனுடைத்
திருமந் திரபுர மெனச்சிறந் தோங்குந்
தூற்றுக் குடியிற் றூய வேளாண்மைத்
தொழிலுடை யவர்பாற் றோன்றிய சீரோன்
இந்திரன் பிரம ஞதிய வேனைத்.

"தேவர்த மின்ன நீர்தாக் கருதிப்
பாற்கடல் விடத்தைப் பருகிய மிடற்றுடை
மூர்த்தியே பொருளென முன்னுறு மதியோன்
பூதிசா தனங்கள் பூண்டிடு மடியா
ரெல்லாஞ் சிவமென வெண்ணுமெய் யன்பன்
சத்தியஞ் சாந்தந் தணிவிலாப் பொறுமை
யடக்கமே யாதிய வமைந்திடு குணத்தோ
னுலகோர் விதக்கு முத்தமக் கொடையோன்
மன்னிய மாணிக்க வாசக னென்னு
மருமை சான்ற வபிதா னத்தோ
னியன்றசித் தாந்த மெவற்றினுஞ் சூடா
மணியா மபேத முத்தி வழங்கும்
வேதாந் தத்தின் மெய்ப்பொருட் டுணிவில்
அத்தியா ரோப வபவா தங்களுந்
திகழ்தரு திருட்டாத் திருசி யங்களுஞ்
சார்தரு சான்று சாக்கி யங்களு
மாதிய வாக வறைந்திடு தத்துவம்
பதார்த்தசோ தனைக்குப் பரியுப யோக
மானசா தனங்க ளவற்றின் விசார
மின்றி யமையா வியல்பிற் றூய
மொழியின் பயிற்சி முதிர்ந்த நுண்மதிச்
சிஞ்ஞா சுகட்குச் சிறந்திடுஞ் சூத்திர
பாடியங் கீதா பாடிய மாதிய
பிரமே யத்தைப் பிரதிபா தித்திடு
நூல்க ளினுலு நுவன்றிடு மளவை
தம்மை யெடுத்துச் சாற்று மத்வைத
சித்தியே முதலாச் சிறந்திடு மாகம
வடைவி னனு மண்டந்திடு மதுதான்

முற்கூ றியதோர் பாடையின் முதிர்ச்சி
யின்றி யருளு மிரக்கமே முதலா
நற்குண நிறைந்த ஞான சீலர்க்குத்
தண்டமிழ் மொழியிற் றந்த விசார
சாகர மதனொடு தன்னேர் விருத்திப்
பிரபா கரமெனும் பெருமையுற் றிலங்குஞ்
சாத்திர மாதியாற் சார்ந்திடு மதுவே
மந்த மதியின் மயங்குந் தாத்துச்
சீல மில்லாச் சிறியேந் தமக்கோ
ரீடிலா விவேக மியலா தவற்று
லாகலி னுத்தம வருண்மிகு குணத்தோய்
தட்டுறு பந்தந் தகைந்திடு மேலா
முத்தம கைவல்ய மதனை யுதவுந்
தக்கநூன் மொழிபெயர்த் தருளுதி யென்னத்
திருவளர் மார்பன் றிருந்திய மனத்துப்
பொற்புட னிலங்கும் புவன மங்கைவெண்
முத்தணி மார்பிடை மொய்யுற வணிந்த
கருகதிர் மதாணி நாப்பட் குயிற்றிய
மண்ணிய நீல மணியெனத் திகழ்ந்து
பாயொளி நில்விய பணிபுனை மடவார்
மணியினை யெற்று மணிமுத் தாநதிப்
புனல்குடைந் தாடி வரும்வள ரேக்கி
மென்னடைக் கஞ்சிய பொன்சிறை யெகினஞ்
தாவுறு செயற்கை மான
வொளிவளர் கமலத் துட்புக வெருவி
வாட்ட நீட்டிள வாளைகள் வெடிபோய்
பைங்கமு கத்தின் பழுக்குலை யுகுத்தே
யந்தரத் தியங்க வருணன் செலுத்திய

சத்தமா வென்னுந் தனிப்பெயர் பூண்ட
குரகதந் தன்னைக் குலைதரப் புடைத்து
மீண்டடைந் துகளும் வியனக முடுத்த
தஞ்சைமா நகரிற் சாத முற்றுளோ
ஞன்ம கோடியா மறுகால் புகழ்நா
கவர்ந்து வந்தனுங் காட்சியை யுடையோன்
கரந்தலைக் குவித்துக் கண்ணீர் வார
விடையறா வன்பினை யெய்ந்த வகத்தியன்
பாணினி யிவர்க்குப் பான்மதிக் கங்கை
நதிச்சடை சேர்த்த நம்ப னருளிய
பாடைகண் முதலாப் பரவிய பாடைக
ளேய்தரக் கற்ற வீடிலாப் புலவன்
கற்றிலார் மடமையை யுற்றிடும் விதியுளி
யறைந்த கற்றிடு மரிதாமொழி நிபுண
னுபநிட தத்தி னுட்பொரு ளொன்றே
யறிதற் பாலதீ தன்றி மற்றொன்று
மன்றென வையந் திரிபற வறிந்தோன்
பிரமசா ரியமுதற் பிறங்கிடு நிலைக
ஞன்கனு ளிரண்டா நந்நிலை யதனி
லூற்றிடுந் தன்மைய ஞயினு மொன்றும்
பற்றிலா தோடைப் பங்கய நீர்போ
லெற்றினுந் தோயா திருந்திடு முக்தன்
கேட்பவர்க் கினிதாய்க் கிளத்திடு மொழியான்
கற்பவர்க் கினிய கற்பகம் போல்வா
னிலம்பா டெய்தி யிரந்தவர்க் கவர்பான்
மற்றவ ரேற்பினும் வல்லைபின் வழங்க
வுத்தம நிதிய முவந்தருள் வள்ளல்
சிவகா ருண்யத் தெள்ளமு தக்கடல்

பாசபந் தத்தைப் பறிக்க வேரோடுங்
கருதிவந் தடைந்தார் கருத்தின் வண்ணமே
பந்த மொழித்துப் பரிந்திடுந் தன்னை
யளிக்க வல்ல வற்புத குணத்தோன்
விரும்பினர்க் கின்ப மளித்திடு விசார
சந்திரோ தயமுந் தனியட யோக
தீபிகை யென்னுந் திருக்கிலா நூலுஞ்
சிவமே தானெனத் தெளிதற் பொருட்டா
வறைந்திடுந் தத்துவ மஸியா வாக்கிய
முபதேசித்திடு முண்மையா நூலுங்
கைதரு நெல்லிக் கனியினைப் போல
வறிவினைக் காட்டு மபரோட் சாநு
பூதியா நாமம் பொருந்தி விளங்கு
மாறிலா நூலும் மாறுபட் டோர்க்கு
வழக்கினை யொழிக்கும் வகையுறு தருக்க
கௌமுதி யதனொடு கரைந்திடு விருத்திப்
பிரபா கரமாம் பீடை நூலு
மொழிபெயர்த் தருளிய மூதறி வாளன்
பெருமைவாய் குப்பு ஸ்வாமிமெய்ப் பெயரோன்
காம வெகுளி மயக்கங் கடிந்து
தீதிலா ஞானச் செல்வம துற்றே
வந்தமில்பெருமை யடைந்திடுஞ் சுகிர்தன்
பிரம நிஷ்டனும் பீதாம்பரஜீ
பண்டிதப் பட்டம் பரித்திடு மேலோன்
ஹிந்தி மொழியி னியற்றிய பால
போதமா நூலைப் புரையிலா தறமைய

சிறப்புப் பாயிரம்

மொழிபெயர்த் தருளினன் முன்னூறு மெதுதா
னெம்மனோர்க் கெல்லா மினிய வானமுதே.

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.

---

## ஸ்ரீ பாலபோதம் இரண்டாம் பதிப்பின் முகவுரை.

இதில் முதற்பதிப்பிலும் அதிகமாக அகாராதி விஷய அட்டவணை சேர்க்கப்பட்டிருப்பதோடு சில திருத்தங்களும் செய்யப்பட்டிருக்கின்றது.

# ஸ்ரீபாலபோதம் விஷய அநுக்கிரமணிகை.

## க-கசு. முதல் உபதேசம்.

### கிரந்தத்தின் நான்கு அநுபந்தங்களின் வர்ணநம்.



முதல் உபதேசம் முடிந்தது.

## கஎ-உ0. இரண்டாம் உபதேசம்.

### சாமானிய வினவிடைகளின் வர்ணநம்.



இரண்டாவது உபதேசம் முடிந்தது.

---

## உக-நஎ. மூன்றும் உபதேசம்.

மூன்றும் உபதேசம் முடிந்தது.

---

## ருஅ-சஉ. நான்காம் உபதேசம்.

### பிரஹ்மாத்ம ஐக்கிய சாமாநிய நிருபணம்.

நான்காம் உபதேசம் முடிந்தது.

---

## சங-சகூ. ஐந்தாம் உபதேசம்.

### தேகத்திரய ஆத்மவிவேசன வர்ணநம்.



ஐந்தாம் உபதேசம் முடிந்தது.

---

## ௫௦-௬௧. ஆறாவது உபதேசம்.

### அவஸ்தாத்திரய ஆத்மவிவேசனம்.



ஆறவது உபதேசம் முடிந்தது.

---

## ௬௨-௬௪. ஏழாவது உபதேசம்.

### பஞ்சகோச ஆத்மவிவேசனம்.

ஏழாவது உபதேசம் முடிந்தது.

---

## சுரு-அO. எட்டாவது உபதேசம்.

### மகாவாக்கியார்த்த நிரூபணம்.

எட்டாவது உபதேசம் முடிந்தது.

---

## அ௧-௮௨௯. ஒன்பதாவது உபதேசம்.

சிஷ்யன் தன் அநுபவத்தை வெளியிடுதல், வீட்டிற்குச் செல்லுதல், சந்நியாசயோகத்தைக் கொள்ளுதல் என்பவற்றைச் சொல்லுதலோடு நூலை முடித்தல்.

ஒன்பதாவது உபதேசம்.

ஸ்ரீபாலபோத அநுக்கிரமணிகை

முடிந்தது.



# ஸ்ரீ பாலபோதம்.

---

## அகாராதி விஷய அட்டவணை.

### அ.

ஏ

## கா. வைராக்கிய லக்ஷணம். (உ)

"அர்ச்சுனா, பிரஹ்மலோக முதல் சர்வ லோகங்களும் புநராவிருத்தி (திரும்பி வருதலை)யுடையனவாயிருக்கின்றன" என்று பகவானது வாக்கியமிருத்தலால் இவ்வுலக முதல் பிரஹ்மலோக பரியந்தமாகிய சகல லோகங்களின் போகத்தையும் பிரமாணயுக்திகளால் தன் சித்தத்தில் அநித்தியமென்றறிந்து, அவற்றைக் காக்கைமலம்போலச் சித்தத்தினின்றும் விடல்வேண்டும். இப்படித் தோஷதிருஷ்டியினால் இகலோக பரலோக போகங்களின் இச்சையை விடுதல் எதுவோ அது வைராக்கியமாமென்று தனது புத்தியிற் கொள்க.

இங்கே காக்கையின் மலத்தைக் கொள்ளுதல் எதுவோ, அது மலத்தின் மலவடிவமாயிருத்தலால் மிகுந்த அருவருப்பு (தோஷ திருஷ்டி)க்கு விஷயமாமென்பதைக் குறிப்பிக்கும் பொருட்டாம்

இங்கே இது விசேஷமாய்:-விடுதலின் இச்சைக்கு அல்லது இச்சையில்லாதிருக்குந்தன்மைக்கு வைராக்கியமென்று பெயராம். அவ்வைராக்கியம் க-யதமானம், உ-வியதிரேகி,

ங-ஏகேந்திரியம், ச-வசீகாரமென்னும் பேதத்தால் நான்கு வகையாம்.

க-மந்தவிராகத்திற்கு யதமானமென்று பெயர்

உ-நாகுலியின் (கீரிபுரண்டான் பூண்டின்) ஆசிரயத்தால், சர்ப்பத்தோடு யுத்தஞ் செய்கின்ற நகுலத்தை (கீரியை)ப் போலச் சற்சங்கத்தின் ஆசிரயத்தால் துற்குணங்களை விடுவதிலும் நற்குணங்களைக் கொள்ளுவதிலு முண்டாகும் உற்சாகம் எதுவோ அது வியதிரேகீயாம்.

ங-இந்திரியங்களை யடக்குதலாகிய தமத்திற்கு ஏகேந்திரியமென்று பெயர்.

ச-மனத்தின் நிக்கிரகமாகிய சமத்திற்கு வசீகாரவைராக்கிய மென்று பெயர் அவற்றுள், வசீகாரவைராக்கியம் (க) மந்தம் (உ) தீவிரம் (ங) தீவிரதரமென மூன்று வகையாம்

(க) புத்திரன், திரவியம் முதலியவற்றின் நாசத்தால் "சை! ஈதென்ன சம்சாரம்" என்றுண்டாகும் க்ஷணிகபுத்திவிருத்தி மந்தவைராக்கியமாம்.

கோ



கௌ



ச

தீ.

அகாராதி விஷயானுக்கிரமணிகை முற்றிற்று.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ | ௩ | சமாபதிக்கு | சமாப்திக்கு |
| ௬ | ௧௯ | பிரதியேகி | பிரதியோகி |
| எ | ௧௪ | உடன | உடன் |
| ௧௪ | ௧எ | அநுபநத | அநுபந்த |
| ௧அ | ௧௧ | சிததம் | சித்தம் |
| ௧௯ | உ௬ | கண்டுகொளக | கண்டுகொள்க |
| உ௧ | உ௪ | ஞானம | ஞானம் |
| ௩0 | உ௩ | சமபததி | சம்பத்தி |
| ௩௩ | ௪ | தன்மைதாம் | தன்மையதாம் |
| ௩௪ | உ | லுணடாகும் | லுண்டாகும் |
| ௫௪ | ௧௯ | சர்வஞ்ஞாக | சர்வஞ்ஞர்க |
| ௬௪ | எ | டாகபபடுங் | டாக்கப்படுங் |
| ௬௧ | ௧௯ | ஆதலால | ஆதலால் |
| எஉ | உ0 | தமா(வேருயிரு | தமா (வேறு) யிருக் |
| எ௩ | ௧௪ | உத்தாம | உத்தாம் |
| அ௧ | ௧௯ | பயிறு | பயறு |
| அ௪ | ௬ | பூதங்தளி | பூதங்களி |
| அ௯ | ௧எ | புருவன் | புருஷன் |
| ௯0 | உ | சொரூபததில் | சொரூபத்தில் |
| ௯உ | ௧எ | பிரவேசம | பிரவேசம் |
| ௯௩ | ௧௫ | அநத | அந்த |
| ௧0அ | உ | திலேனும | திலேனும் |
| ௧௧எ | ௩ | பிரபஞ்சமு | பிரபஞ்சமும் |
| ௧௧அ | உ0 | அங்ககரி | அங்கீகரி |
| ௧௩௧ | ௩ | அரத்தத்தை | அர்த்தத்தை |
| ௧௪உ | ௫ | ஒன்றறகொண்று | ஒன்றற்கொன்று |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கசரு | கஉ | லர்ல் | லால் |
| கரஎ | கக | பெகமுமம | பேகமும் |
| கருo | உ | அபேதம | அபேதம் |
| கசுரு | கச | (கிராணண்) | (பிராணன்) |
| | கரு | செலலு | செல்லு |
| கசுசு | எ | ஜாக்கர | ஜாக்கிர |
| | உஉ | யென்து | யென்பது |
| கசுகூ | க | (நஷ்டமாகு | (நஷ்ட) மாகு |
| கஎரு | ங | காட (அ | காட (அழு |
| கஎசு | ரு | வித்துவாளுகிய | வித்துவாளுகிய |
| ககூo | உஉ | தனமையும | தன்மையும் |
| ககூஎ | கச | உபயோகஞ்ச | உபயோகஞ்க |
| உகக | க | எங்ஙனம | எங்ஙனம் |
| உகஉ | கரு | இரண்டும | இரண்டும் |
| உகங | கங | என்னுமஐந்துஅம | என்னும் ஐந்து அம் |
| உகசு | கூ | யம | யம் |
| உகஎ | ச | ழி ஞ | ழி வ |
| உககூ | கo | முன்னறே | முன்னரே |
| உஉo | ரு | மாணமாம | மாணமாம் |
| உஉச | உரு | சிதாபாசுனல் | சிதாபாசனல் |
| உஉரு | ச | முதவிய | முதவிய |
| | கரு | யிருத்தவின் | யிருத்தலின் |
| உஙஉ | சு | சுருதிகளுகுப் | சுருதிகளுக்கு |
| | கஅ | திற்குமுன | திற்குமுன் |
| உஅசு | உ | யாகினறுன் | யாகின்றுன் |
| உஅஅ | ரு | வஸ்துகளேயும். | வஸ்துக்களேயும் |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௯௪ | ௧௪ | செல்வனாய் | செல்வனாய |
| ௩0௧ | ௨0 | பணத்தைதக | பணத்தைக் |
| ௩0௨ | ௬ | தசிக்கப்படா | தகிக்கப்படா |
| ௩0௮ | ௧௬ | ஜன்மம் | ஜன்மம், |
| ௩௧௨ | ௮ | சாதனங்கள | சாதனங்கள் |
| ௩௧௩ | ௨௧ | ட்ருக்கின்றது | ட்டிருக்கின்றது |
| ௩௧௪ | ௧௧ | முதயமகிய | முதயமாகிய |
| ௩௧௭ | ௪ | கர்த்தவவிய | கர்த்தவ்விய |
| ௩௨0 | ௧0 | கிரநதிகளாம் | கிரந்திகளாம் |
| ௩௨௮ | ௬ | மத்தின் | த்தின் |
| ௩௩௨ | ௫ | தனமை | தன்மை |
| ௩௩௩ | ௧௩ | சச்சிதாநத்த | சச்சிதாநந்த |
| ௩௩௫ | ௨௧ | தனியங்கொண்டு | தானியங்கொண்டு |
| ௩௬௩ | [illegible] | கூா | கூா |
| ௩௬௨ | ௧ | அறிகினறேன் | அறிகின்றேன் |
| ௩௭௨ | ௬ | வனோடு | வரனோடு |
| ௩௭௬ | ௧௭ | ஃகம் | சுகம் |

## ஸ்ரீசங்கராசார்யஸ்துதி.

பறிதலை யருக ராதிப் பன்மதக் களைகட்டந்நா
ளருமதப் பயிர்க ளீனா மறிவது தழையும் வண்ணங்
கறைமிடற் றண்ண னானே கலியினிற் சங்கரப்பே
ருறவவ தரித்தா னன்னோ னுயர்கழல் மனத்துட்
[கொள்வாம்.

ஓம் கணேசாய நம:.

# ஸ்ரீ பாலபோதம்.

## முதல் உபதேசம்.

### க. நான்கு அநுபந்தவர்ணநம்.

#### நூன்மங்கலம்.

நூலாசிரியர் மந்தபுத்தியுடையவர்களது இதத்தின் பொருட்டு ஸ்ரீபாலபோதமென்னும் நூலை ஆரம்பிக்கின்றவராய், முதலில் அத்வி தீய (இரண்டாவதற்ற) ஆநந்தரூபப் பிரஹ்ம த்தினது யதார்த்த சொரூபத்தின் ஸ்மரண ரூப (நினைவு வடிவினதாய) * க. மங்கலத் தைச் செய்கின்றார்:—

அத்துவி தத்தி னோடே யபார மா நந்த மாகு
மெத்துய ரமுமில் லாத வியல்பினை யுடைய வஸ்தே
உத்தம குரவன் கூறு முண்மையா முறையி னாலு
மெய்த்திட வுணர்வி னாலு மேவுதற் குரிய தாமே.

---

* க. விக்கினத்துவம்ஸத்திற் கநுகூலமானவியா பாரத்தை மங்கலமென்பர். விக்கினமென்றால் இரங்

(இ-ள்) எது அத்துவிதமும், அநந்தமும், சுகரூபமுமாகின்றதோ, அந்த எவ்வகைத்துன்

---

தத்தின் சமாபதிக்குப் பிரதிபந்தகமாயுள்ள * பாபம்; அதன் துவம்ஸ (நாச) மென்றால் நிவிருத்தி; அதில் அநுகூலமான வென்றால் உபயோகமுள்ள; வியாபார மென்றால் மனோவாக்குக்காயங்களின் கிரியை; அது மங்கல மெனப்படும். அம்மங்கலம் நூலாசிரியாது மன முதலியவற்றாற் செய்யப்பட்டதாய், கிரந்த சமாப்தியின் நிர்விக்கினத்தன்மைக்கு ஏதுவா யிருக்கின்றது. என்றாலும், நூலாசிரியரிடத்துண்டாகும் நாஸ்திகத் தன்மையின் பிராந்தி நீங்கி ஜிஞ்ஞாசுக்கள் நூலிற் பிரவிருத்திக்கும் பொருட்டும், நூலின் முதலிலும் நடுவிலும் கடையிலும் மங்கலஞ் செய்யவேண்டியதாமென்று சீடர்களுக்கு உபதேசிக்கும் பொருட்டும், சிஷ்ட புருஷர்களது ஆசாரத்தால் (ஆன்றோரொழுக்கத்தால்) அடையப்பட்ட மங்கலம் யாதோ அது நூலினும் எழுதத்தக்கதாம். அம்மங்கலம் (க) வஸ்து நிர்த்தேசரூபம் (உ) ஆசீர்வாதரூபம் (௩) நமஸ்காரரூப மென்னும் பேதத்தால் மூன்றுவகையாம். அவற்றின் அவாந்தர பேதங்கள் இருபத்தேழாம். அவை போதசத்நாகரமென்னும் நூலில் எழுதப்பட்டிருக்கின்றன அவற்றுள்இங்கே நிர்க்குணவஸ்து நிர்த்தேசரூபமங்கலம் எழுதப்பட்டிருக்கிறது.

---

* வாவ ம், ஷாவம், ஷு ஷூம், ஷு ஷே, ஷு ஷ என்பன முறையே இந்நூலில் பாபம், பாவம், பிரஹ்மம், பிரம். பிரஜைஎன்று மொழிபெயர்க்கப்பட்டன.

பமும் இல்லாத தன்மையினையுடையவஸ்துவே (பிரஹ்மமே) மேன்மையினையுடைய தேசிகன் சொல்லும் சத்தியமான உபதேசத்தினுலும், உண்மையான திட அநுபவத்தினுலும் ஞானவிருப்புடையோரால் அடைதற்குரியதாகும் எ - று.

ஈண்டு ஸஜாதீய விஜாதீய சுவகதபேதமில்லாத தென்பார் அத்துவித மென்ருர்.

க. ஸமான ஜாதியுடையதோடுள்ள பேதம் ஸஜாதீயபேதம். எங்ஙனம்: பிராஹ்மணனுக்கு மற்ருேர் பிராஹ்மணனேடுள்ள பேதம் ஸஜாதீயபேதம்.

உ. அந்நியஜாதியுடையவர்களோடுள்ளபேதம் விஜாதீயபேதம். எங்ஙனம்: பிராஹ்மணனுக்குச் சூத்திராதியரோடுள்ளபேதம் விஜாதீயபேதம்.

௩. தனது அவயவங்களோடுள்ள பேதம் சுவகதபேத மெனப்படும். எங்ஙனம்: பிராஹ்மணனுக்குத் தனது அவயவங்களாகிய கை கால் தலை முதலிய அங்கங்களோடுள்ள பேதம் சுவகதபேதம்.

க. எல்லாவற்றிற்கும் தானே தானுகிய (சொரூபமாகிய) பரப்பிரஹ்மம் ஒன்ருயிருப்

பதனுல் அதற்கு ஸஜாதீயமான வேறு பிரஹ்ம மில்லை. பிரஹ்மசேதனத்தினிடத்துத் தோற்றும் அந்தரியாமி சூத்திரான்மா விராட்டு பிரஹ்மா விஷ்ணு சிவன் என்றற்றொடக்கத்துப் பேதங்கள் உபாதிபேதத்தாலாகியனவாம்; சொரூபமாயின்று. ஆகலின் பிரஹ்மம் ஒன்றும். எதனுல் ஒன்றே அதனுல் அதுஸஜாதீய பேத மின்றியதாம்.

௨. பிரஹ்மசேதனத்திற்கு வேருய ஜடப்பிரபஞ்சம் பிரஹ்மத்தினும் விஜாதீயமாய்த் தோற்றுகின்றது. அது சத்திய மாகுமேல் பிரஹ்மத்தில் விஜாதீயபேதம் சம்பவிக்கும். பிரஹ்மத்தின் வேருகிய ஜடப்பிரபஞ்சமோ சத்தியமன்று. ஆனுல் பழுதையிற் பாம்புபோலும், கண்ணுடியில் நகரப் பிரதிபிம்பம்போலும், சொப்பனவுலகுபோலும் பிரஹ்மத்தில் கற்பிதமா யிருத்தலால் மிததையாம் எது மித்தையாகிய பொருளோ அது வாஸ்தவமாகிய அதிஷ்டானத்தினும் வேருகாது. ஆதலால் பிரஹ்மம் விஜாதீயபேதமுமில்லாததாம்

௩. பிரஹ்மம் நிர்விசேஷ (விலக்ஷணத் தன்மையின்றிய) ஏகரசமா யிருத்தலின் அதற்கு அவயவமின்று சத்து, சித்து, ஆநந்த

முதலிய பிரஹ்மத்தின் தர்மங்கள் பிரஹ்மத்தின் அவயவங்களாகா. ஆனால் அவை சந்தனத்தின் கைப்பு மணம் குளிர்ச்சி என்னும் குணங்களைப்போலும், மலரின் பரிசம் உருவம் இரசம் கந்தமென்னும் குணங்களைப்போலும், அக்கினியின் தாகம் பிரகாசமென்னும் குணங்களைப்போலும் பிரஹ்மத்தின் சொரூபமாம்; விசாரிக்கின் பரஸ்பரம் அல்லது பிரஹ்மத்தினும் வேறாகா. ஆதலால் அவை பிரஹ்மத்தின் சொரூபமேயாம் எதனால் அவை பிரஹ்மத்தின் சொரூபமோ அதனால் பிரஹ்மம் நிரவயவமாம். இதனாலேயே அவற்றாகிய சுவகதபேதமும் பிரஹ்மத்திலில்லை. ஆதலால் பிரஹ்மம் சுவகதபேதமு மின்றியதாம்.

இவ்வாற்றால் பிரஹ்மம் ஸஜாதீய விஜாதீய சுவகதபேதமின்றியதாம்; ஆதலால் அத்வைதமாம்.

பிரஹ்மம் தேச கால வஸ்துக்களின் பேதத்தாலாகிய மூவகைப் * உ. பாரமு (அந்தமு)

---

* உ. பாரம் அந்தம் டரிச்சேதம் என்னும இம்மூன்றும் ஒன்றற்கே பெயர்களாம். அவற்றுள்

மின்றியதென்பார் அபாரமென்றார். மூவகை அந்தமின்மை:—

---

க. அத்தியந்தாபாவத்திற்கு (முழுது மின்மைக்கு)ப் பிரதியோகித்தன்மை எதுவோ அது தேசபரிச்சேதமெனப்படும். பிருதிவிமாத்திரத்தி லிருக்கும் கந்தகுணத்திற்கு ஜல முதலியவற்றில் அத்தியந்தாபாவமிருக்கிறது. அதற்குப் பிரதியோகி கந்தகுணமாம். அதில் அதற்குப் பிரதியோகித்தன்மை யிருக்கின்றது. அது தேசபரிச்சேதமாம். ஆதலால் கந்தகுணம் ஏகதேசத்தி லிருப்பதா யிருத்தலால் தேசபரிச்சேதமுடையதாம்.

உ. பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்களின் பிரதியோகித்தன்மை எதுவோ அது காலபரிச்சேதமெனப்படும். மண்ணின் காரியமாகிய கடத்தின் உற்பத்திக்கு முன் பிராகபாவமும் கடத்தின் நாசத்திற்குப்பின் பிரத்துவம்சாபாவமு மிருக்கின்றன. அவற்றிற்குப் பிரதியோகி கடமாம். அதனிடத்து (கடத்தினிடத்து)ப் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்களின் பிரதியோகித் தன்மை யிருக்கின்றது. அதுவே காலப்பரிச்சேதமாம். ஆகையால் கடம் உற்பத்திநாச முடையதா யிருத்தலால் காலபரிச்சேதமுடையதாம்.

ங. அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மை வஸ்துபரிச்சேத மெனப்படும். கடபடங்களுக்கொன்றற்கொன் றுள்ள பேதமாகிய அந்நியோந்நியாபாவம் எதுவோ அதற்குப் பிரதியோகி கடமும் படமுமாம். அவற்றில் அதன் பிரதியோகித்தன்மை

க. எந்தப் பொருள் எங்கும் வியாபகமாகாது யாதானும் ஓரிடத்திருப்பதாகின்றதோ, அதற்குத் தேசத்தினால் அந்தமுண்டாகின்றது. குடம் எங்கும் வியாபகமாகாது யாதானும் ஓரிடத்திருக்கின்றதாகலின் அது தேசத்தான் அந்த முடையதாகின்றது.

பிரஹ்மம் யாதானும் ஓரிடத்திருப்பதன்று; எங்கும் வியாபகமாம். எல்லாவிடமும் பிரஹ்மத்தில் மாயையினால் கற்பிக்கப்பட்டதாம். ஆதலால் பிரஹ்மத்திற்குத் தேசத்தினால் அந்தமின்று

உ. எப்பொருள் பிறப்பிற்கு முன்னும் அழிவிற்குப் பின்னும் இல்லாதிருக்கின்றதோ, அது காலத்தினால் அந்தமுடையதாம். உடனமுதற் பொருள்கள் பிறப்பிற்கு முன்னும் அழிவிற்குப் பின்னும் இல்லாதிருக்கின்றன. ஆதலால் அவைகாலத்தினால் அந்தமுடையனவாம்.

பிரஹ்மம் பிறப்பிறப்பில்லாததாயிருத்தலால் நித்தியமாம். எதனால் நித்தியமோ, அதனால் அது காலத்தினால் அந்தமுடையதன்று.

---

யிருக்கின்றது. அது வஸ்துபரிச்சேதமாம்; அப்பேதத்தை யுடைய கடபடங்கள் வஸ்துபரிச்சேதமுடையனவாம்.

௬. எந்தப் பொருளுக்குப் பிறபொருளோடு பேதமிருக்கின்றதோ, அது வஸ்துவினால் அந்தமுடையதாம். கடத்திற்கு வஸ்திரத்தோடு பேத மிருத்தலால் கடத்திற்கு வஸ்திரமாகிய வஸ்துவினால் அந்தம் சொல்லப்படுகின்றது.

பிரஹ்மத்தில் ஜடசேதனங்களாகிய சர்வ வஸ்துக்களும் கற்பிதமாம். எது எதன்கண் கற்பிதமோ அது அதன் சொரூபமேயாம். மண்ணிற் கற்பிக்கப்பட்ட குடம் மண்ணின் சொரூபமும், பொன்னிற் கற்பிக்கப்பட்ட குண்டல முதலியன பொன்னின் சொரூபமுமேயாம். அதுபோலச் சகல வஸ்துக்களும் பிரஹ்மத்தில் கற்பிதமாகலான் அவை பிரஹ்ம சொரூபமாம். இதனானே பிரஹ்மம் சர்வாத்மாவாம். பிரஹ்மம் சர்வாத்மாவாயிருத்தலால் பிரஹ்மத்திற்கு ஒரு வஸ்துவினோடும் பேதமில்லை. எதனால் பிரஹ்மத்தில் ஒரு வஸ்துவினோடும் பேதமில்லையோ, அதனால் பிரஹ்மத்திற்கு ஒரு வஸ்துவினாலும் அந்தமில்லை. இவ்வாற்றால் பரப்பிரஹ்மம் தேசகால வஸ்துக்களாலாகிய அந்த மில்லாததாம்; ஆகலின் அபாரமாம்.

மிகுந்த பிரேமைக்கு எது விஷயமோ அது சுகம் எனப்படும். அதனையே ஆநந்தமென்பர். பிரஹ்மம், எறும்புமுதல் பிரஹ்மாபரியந்தமான சகல பிராணிகளுக்கும் விரும்பிய விஷயத்தின் அடைவினால், இச்சைமறைதலாகிய நிமித்தத்தால் ஏகாக்கிரமாகிய சித்தத்தில் தனது பிரதிபிம்பமாகிய விஷயாநந்தத்தைக் கொடுப்பதாயும் எல்லாவற்றிற்கும் பிரத்தியகான்மாவாயு மிருக்கின்றது. ஆதலால் அது மிகுந்த பிரியத்திற்கு விஷய (இட) மாம்; இதனானே சுகரூபமாம்.

ஈண்டு, முற்கூறப்பட்ட பிரதிபிம்பமாகிய விடயசுகத்தினும் அதன் சாதனமாகிய சந்தனம், புஷ்பம், ஸ்திரீ முதலியவற்றிலும் பிரியமுண்டாகுதலான் அவைகளும் பிரியத்திற்கு விடயமாம்; இதனானே அவை பிரியமாம்; அவற்றில் சொரூபசுகத்தினது இலக்ஷணத்தின் அதிவியாப்தி யுண்டாமென்னும் சங்கையுண்டாகும்

அதனை நீக்குதற்பொருட்டு அச்சுகம் துக்கசம்பந்தமில்லாத தென்பார் எத்துயரமு மில்லாத வியல்பினையுடையவஃ தென்றார்.

க. முற்கூறப்பட்ட விஷயசுகமும் அதன் சாதனமும் அநந்த துக்கங்களால் மறைக்கப்

பட்டுள்ளன வாகலின் துக்கசம்பந்தமுள்ளன வாயிருக்கின்றன. இச்சொரூபசுகமோ அத்தன்மையதன்று. ஆனால் துக்கமும் அதன் சாதனமுமாகிய இவற்றின் கற்பனைக்கு அதிஷ்டானமா யிருத்தலால், கற்பிதசர்ப்பத்தின் சம்பந்தமின்றிய இரஜ்ஜுவைப்போல துக்கசம்பந்தமில்லாததாம். ஆதலின் விஷயசுகத்திற்கும் அதன் சாதனங்கட்கும் விலக்ஷணமா யிருத்தலால் சொரூப சுகத்திற்கு அவற்றில் அதிவியாப்தியில்லை.

௨ அல்லது விஷயசுகத்தின் சாதனங்கள் தாமே பிரீதிக்கு விஷயமாகா. ஆனால் விஷய சுகத்திற்கு ஏதுவாயிருத்தலின் பிரீதிக்கு விடயமாம். ஆதலால் அவை பிரியமெனப்படுகின்றன. விஷயசுகம் எதுவோ அது பரமப்பிரீதிக்கு விஷயமாகாது; ஆனால் பிரீதிமாத்திரத்திற்கு விஷயமாம்; ஆதலின் பிரியதரமெனப்படுகின்றது. சொரூபசுகமோ பரமப்பிரீதிக்கு விஷயமாதலான் பிரியதம மெனப்படுகின்றது. ஆதலால் விஷயசுகத்திலும் அதன் சாதனத்திலும் சொரூப சுகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியில்லை. (பிரீதி, பிரியம், பிரேமை என்பன ஒரு பொருட்கிளவிகள்).

ஈண்டுச் சுகமென்னும் சொல் சத்து சித்து முதலியவற்றிற்கும் * ரு. உபலக்கணமாம். உத்தமகுரவன் என்றதனால் பிரஹ்ம நிஷ்டையும் சாஸ்திரவுணர்ச்சியு முள்ளவர் என்பது பெறப்படுகின்றது. சந்தேக விபரீத மின்றிய திடாபரோக்ஷஞானவடிவமாய அநுபவமென்பார் மெய்த்திடவுணர்வென்றார்.

ஈண்டுப் பிரஹ்மம் சர்வான்மாவா யிருத்தலின். அதற்கு யான் என்னும் சொற்பொரு

* ரு. இலக்ஷியத்தின் ஏகதேசத்திலிருந்துகொண்டு இலக்ஷிய முழுவதையும் அறிவிப்பது எதுவோ அது உபலக்ஷணமெனப்படும். அல்லது அஜஹதீ லக்ஷணை (வாய்ச்சியார்த்தத்தை விடாமல் அதன் சம்பந்தமுள்ள அதிக அர்த்தத்தை அறிவிக்கும் இலக்ஷணை) யினால். அர்த்தத்தை அறிவிக்கும் சொல் எதுவோ அது உபலக்ஷணமெனப்படுகின்றது. அந்த உபலக்ஷணத்தினால் அறிவிக்கப்படும் அர்த்த மெதுவோ அது உபலக்ஷிதமெனப்படும். காக முள்ளது தேவதத்தனது வீடென்னுமிடத்துக் காகம் வீட்டின் ஏகதேசத்திலிருந்துகொண்டு வீடுமுழுவதையும் அறிவிப்பதாயிருக்கின்றது. ஆதலால் அது உபலக்ஷணமாம். அல்லது இங்கே "சுகம்" என்னும் சொல் எதுவோ அது அஜகத்லக்ஷணை (விடாதலக்கணை) யினால், சத்து சித்து முதலிய அதிக அர்த்தத்தை அறிவிப்பதாயிருத்தலின், அவற்றிற்கு (சத்து சித்து முதலியவற்றிற்கு) உபலக்ஷணமாம்.

ளாகிய பிரத்தியகான்மாவோடு சிறிதும் பேத மில்லை. ஆகலின் "யான் சர்வான்மாவாகிய பிரஹ்மம்" என்னும் இக்கூட வபிப்பிராயம் அர்த்தத்தால் அறியப்படுகின்றது. (கூடம்-இரகசியம்.) இதுவே வஸ்துநிர்த்தேசரூப மங்கலமாயிற்று. இதனுனே ஈண்டுப் பிரஹ்மான்ம ஐக்கியமாகிய நூலின் விஷயம் சாமானியமாகக் குறிப்பிக்கப்பட்டது. (க)

இனிச் செய்யுளின் முற்பாதியால், ஜிஞ்ஞாசுக்களுக்கு நூலிற் பிரவிர்த்தி யுண்டாதற் பொருட்டு, சர்வ துன்பங்களின் நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய நூலின் பயனைச் சூசிப்பிக்கின்றவராய் வஸ்துநிர்த்தேசரூப மங்கலத்தைச் சமாப்திசெய்து, பிற்பாதியால் குருபக்தி ஞானத்திற்குச் சாதனமா மென்பதைச் சூசிப்பிக்கின்றவராய்க் குருபக்தி பூர்வகமாய் நூலாரம்பத்தின் பிரதிஞ்ஞையைச் செய்கின்றார்:—

சகலதுன் பங்க டாமுந் தவிர்தரு மிடத்த தாய
விகலிலா வின்பந் தானே யியம்புமங் கலம தாகும்
நகையருட் குரவன் செய்ய தாண்மலர் தலைமேற் [கொண்டு
பகருவேன் பாலபோதம் பாலர்களுணரு மாறே.

(இ-ள்) அவித்தையும் அதன் காரியமுமாகிய சகல அநர்த்தங்களும் நீங்கிய இடத்தினையுடையதாகிய விரோதமில்லாத ஆனந்தரூபப் பிரஹ்மமே (விஷ்ணுமுதலிய சர்வதேவர்களுக்கும் அதிஷ்டானமாயிருத்தலால்) சொல்லப்படும் மங்கலவடிவமாகும். பிரஹ்ம உபதேசஞ் செய்யுந் தகுதியினையுடைய கிருபாநிதியாகிய ஆசாரியனது செம்மையாகிய பாததாமரைகளைச் சிரத்திற்கொண்டு, (சம்ஸ்கிருத நூல்களையும் மற்றைப் பெரிய தமிழ் நூல்களையும் பயிலச் சக்தியற்ற மந்தபுத்தியுள்ள) பாலர்களறியும் வண்ணம் பாலபோதமென்னும் நூலைச் சொல்லுகிறேன் எ-று.

விருக்ஷத்தின் வேரில் ஜலத்தை வார்த்தலால் விருக்ஷத்தின் கிளைகள் முதலிய சகல அங்கங்களும் திருப்தி யடைகின்றன. பிராணனுக்கு ஆகாரம் கொடுத்தலால் சகல இந்திரியங்களுக்கும் திருப்தி உண்டாகின்றது. அங்ஙனமே பிரஹ்மத்தை ஸ்மரித்தலால் சகல தேவர்களின் ஸ்மரணமும் உண்டாகின்றது.

குருபக்தி ஞானத்திற்கு முக்கிய சாதனமென்பது ஈண்டுக் குறிப்பிக்கப்பட்டது.

உ. வீட்டிற்கு நான்குபாதங்களுமில்லா விடின் வீடு நிலையாததுபோல, சகல கிரந்தங்களுக்கும் நான்கு அநுபந்தங்களு மில்லாவிடின் கிரந்தம் அமையாது. அவற்றை யறிந்தாலொழிய விவேகிகளுக்குக் கிரந்தத்தில் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால் கிரந்தத்தி னாரம்பத்தில் நான்கு அநுபந்தங்களும் அவசியம் சொல்லவேண்டியனவாம். இந்நூல் வேதாந்தத்தின் பிரகரணமா யிருத்தலால், வேதாந்தத்திற்கு எவை அநுபந்தங்களோ அவையே இதற்குமாம். அங்ஙனமாயினும், ஜிஞ்ஞாசுக்கள் அறியும் பொருட்டு நான்கு அநுபந்தங்களும் சுருக்கமாகச் சொல்லவேண்டியனவாம். அவ்வநுபந்தங்களை இப்போது பிரயோஜன பூர்வமாகச் சொல்லுகின்றோம்.

அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜன மென்னும் இந்நான்கிற்கும் அநுபந்த மென்று பெயர். [தன்னை யறிந்த பின்னர் முமுக்ஷுவைக் கிரந்தத்தோடு பொருத்துவது எதுவோ அது அநுபந்த மெனப்படுகின்றது.] இந்நான்கு அநுபந்தங்களையும் அறிந்தாலொழிய விவேகிக்கு நூலிற் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை. இந்நான்கு அநுபந்தங்களையும் அறிந்து விவேகியானவன் கிரந்தத்தைப்

பார்க்கிறான். ஆகையால் இந்நான் கருபந்தங்களும் நூலின் ஆரம்பத்தில் அவசியம் சொல்லத் தக்கனவாம்.

## ங. அதிகாரிவர்ணனம்.

ஸ்தூலதேகத்தில் வாதம் பித்தம் கபமென மூன்றுதோஷங்கள் இருக்கின்றன. அவற்றை நீக்குதற் பொருட்டுத் தன்வந்தரி முதலியோர் ஆயுள்வேதத்தைச் செய்திருக்கின்றார்கள். அதுபோல அந்தக்கரணத்திலும், க. மலம், உ. விக்ஷேபம், ங. அஞ்ஞானமென மூன்று தோஷங்க ளிருக்கின்றன. அவற்றை நீக்குதற்பொருட்டுக் கர்மகாண்டம், உபாஸனா காண்டம், ஞானகாண்டமென்னும் மூன்று காண்டங்களோடுகூடிய நான்குவேதங்களையும் பரமேசுவரன் செய்திருக்கின்றார்.

க. மலமென்பது பாபத்திற்காம். அந்தப் பாபம் ஜன்மாந்தரங்களிற் செய்யப்பட்ட அசுபகர்மத்தி (தீவினையி)னு லுண்டாகிய அதர்மம் அபூர்வம் அதிருஷ்டமென்னும பெயர்களோடுகூடிய சம்ஸ்கார(வாசனை)வடிவமாயிருத்தலால் அதிசய (மிகச்) சூக்ஷ்மமாயிருக்கின்

றது. ஆதலால் பிரத்தியக்ஷமாகப் பார்க்க வருகிறதில்லை. என்றாலும் அசுபவாசனையின் வாயிலாக அதன் அநுமான முண்டாகிறது.

எந்தப் புருஷனுக்கு நிஷித்தகர்மங்களி லாவது விஷயங்களிலாவது இச்சை யுண்டா கின்றதோ, அவனுடைய சித்தத்தில் அசுப வாசனை யிருக்கின்றது. இதனாலேயே அவன் மலதோஷத்தோடு கூடியவனென அறியப்படு கின்றான். ஆகையால் நிஷ்காம கர்மத்தையா வது சர்வ ஜீவர்களிடத்தும் இரக்கத்தையா வது அல்லது ஈசுவரநாம உச்சாரண முதலிய வற்றையாவது செய்யவேண்டும். ஏனெனின், நிஷ்காமகர்மத்தினாலாவது சர்வ பூதங்களிடத் தும் வைக்கு மிரக்கத்தினாலாவது ஈசுவரநாம உச்சாரணத்தினாலாவது மலதோஷம் நிவிரு த்தி யாகின்றது. அவற்றுள் ஈசுவர நாமத் தைக் * ௪. கிரமப்படி உச்சரித்தல் எதுவோ

---

* ௪. இங்கே ஈசுவரநாமத்தை ஜபிக்கும் கிரமம் இதுவாம்:—

௧ - சாதுக்கள் நிந்தை.

௨ - அசத்புருஷர்களிடத்து நாமத்தின் வைபவத் தைச் சொல்லுதல்.

௩ - சிவ விஷ்ணுக்க (அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட கணேசன் சூரியன் தேவி யென்பவர்க) ளிடத்துப் பேதபுத்தி.

௪ - வேதவாக்கியங்களில் அசிரத்தை (விசுவாச மில்லாமை).

௫ - சாஸ்திர வசனங்களில் அசிரத்தை.

௬ - குருவாக்கியங்களில் அசிரத்தை

௭ - ஈசுவரநாம மகாத்மியத்தில் அர்த்தவாதப் பிரமம் (யஞ்ஞத்தின் கம்பம் ஆதித்தியனும் என்பதைப்போல ஸ்துதியை அறிவிப்பதாமென்னும் மயக்கம்).

௮ - நாமம் ஸர்வபாபத்தையும் கெடுப்பதாம் என்னும் புத்தியால் நிஷித்த கர்மங்களை யாசரித்தல்.

௯ - மகத்தான புண்ணியத்தை யுண்டாக்குவது நாமமா மென்னும் புத்தியால் விகித கர்மங்களை விடுதல்.

௧௦ - அந்நிய தர்மங்களோடு நாமம் சமமாமெனல் இப்பத்தும் நாமத்தின் அபராதங்களாம்.

இவற்றை (இந்த அபராதங்களை) விட்டு, [௧] பிராதக்காலம், [௨] மாத்தியானகாலம், [௩] சாயுங்காலம், [௪] மத்தியராத்திரிகாலமென்னும் இந்நான்கு காலங்களிலும் பிரித்து இலக்ஷம் அளவேனும் அல்லது அதனின் அதிகமாகவேனும் ஈசுவரநாமத்தை யுச்சரித்து அதனிடத்துச் சித்தவிருத்தியை நிறுத்த வேண்டும். இது ஈசுவரநாமத்தை ஜபிக்கும் சாமானியக்கிரமம். இதன் விசேஷக்கிரமம் குருமுகமாக அறியத்தக்கதாம்.

னும் இருவகை மலத்தையும் நாசஞ் செய்வதா யிருக்கின்றது. மற்றக் கர்மமுதலியன பாப வடிவமான மலத்தை மாத்திரம் நாசஞ்செய் வனவா யிருக்கின்றன.

உ. சித்தத்தின் சஞ்சலத்தன்மைக்கு விக்ஷேபமென்று பெயர். எவனுடைய சித்தம் வேதாந்த சிரவண முதலியவற்றிலாவது அல் லது மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய சுவ சொரூபத்திலாவது ஸ்திரமாகாமல் அந்நிய விஷயங்களில் சுழன்றுகொண் டிருக்கிறதோ, அவனுடைய சித்தம் சஞ்சலமாம். இதனாலே யே அந்தப்புருஷன் விக்ஷேபதோஷத்தோடு கூடியவனென் றறியப்படுகின்றான்.

(க) ஆகையால் அவன் ஈசுவரநாம உச்சா ரணம் அல்லது * ரு. அஜபாமந்திரோச்சார

*ரு. "ஸோஹம்" என்னும் மந்திரத்தை அஜபா மந்திரம் அல்லது அஜபாகாயத்ரி யென்பர். இதன் ஜபத்தை அஜபாஜப மென்பர். இதை நான்காவது டிப்பணியிற் கூறிய பிரகாரம் ஜபித்தலும் சித்த சுத் திக்கு ஏதுவாம். அல்லது வெகுகாலம் வரையில் ஜபித்துக்கொண்டிருக்க எப்போது விருத்தி அந்தர் முகமாகின்றதோ, அப்போது சுவாசம் வெளிப்படும் போது ஸகாரத்தை (ஸோ என்பதை)யும் சுவாசம் உட்பிரவேசிக்குங்கால் ஹகாரத்தை (ஹம் என்பதை)

ணம் ஈசுவரமூர்த்தித் தியானம் அல்லது நிர்க்குணப் பிரஹ்மத்தைச் சிந்தித்த லென்னும் இவை முதலிய உபாசனைகளைச் செய்யவேண்டும். ஏனெனின், உபாசனையினால் சித்தத்தின் ஏகாக்கிரதத்தன்மை யுண்டாய் விக்ஷேப தோஷத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது.

(உ) அல்லது சரீரம் வாக்கு மனம் தனமென்பவற்றால் ஈசுவரபுத்தியாகச் செய்யப்

---

யும் தியானிக்கவேண்டும். இது அஜபாகாயத்திரியாம். இதற்கு முக்கியமாக நிவிருத்திபரனாகிய சந்நியாசியே அதிகாரி. இது ஸோபாதிகத்தியானம். இதினின்றும் ஸகார ஹகார மென்னும் மெய்யெழுத்துக்களை எடுத்துவிட மிஞ்சியிருக்கும் 'ஓம்' என்னும் எழுத்து எதுவோ அதன் உபாசனை நிருபாதிகமாம். 'ஸோஹம்' 'ஓம்' என்னும் இரண்டு சொற்களுக்கும் பொருள் பிரத்தியகாத்மாவிற் கபின்னமான பிரஹ்மம் ஒன்றே. அது சுத்தமாயிருத்தலால் நிருபாதிகமாம். என்றாலும் ஓமென்னு மகாரத்தில் ஸகார ஹகார மென்னும் உபாதிகளின் சேர்க்கையால் "ஸோஹம்" என்னும் சொல்லுண்டாகின்றது. அது ஸோபாதிக மெனப்படுகின்றது. ஓங்காரத்தின் உபாசனைக் கிரமம் விசார சாகரத்தின் ஐந்தாவது தரங்கத்திலும் அப்படியே பதார்த்த மஞ்ஜூஷாவிலும் விஸ்தாரமாக எழுதப்பட்டிருக்கின்றது. அதனை யறிய விரும்புவோர் ஆங்கே கண்டுகொள்க.

பட்ட பற்றின்றிய * சு. குருவின் சேவை எதுவோ அதனால் கர்மோபாசனைக ளில்லாமலே

---

* சு. இங்கே இது இரகசியம் :—ஈசுவரசேவையினால் புண்ணியத்தின் உற்பத்தி வாயிலாக அதிருஷ்டபலப் பிராப்தி யுண்டாகின்றது. ஈசுவரபுத்தியினால் செய்யப்பட்ட குருசேவையினால் மூற்கூறிய அதிருஷ்டபலப் பிராப்தியும், குருவின் பிரசன்னத்தன்மையின் வாயிலாக உபதேசவடிவமான திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலப் பிராப்தியு முண்டாகின்றன. அந்த (குரு) சேவை சரீரம், மனம், வாக்கு, தனமென்பவற்றின் அர்ப்பணத்தால் உண்டாகின்றது. குருவின் ஆணையைப்பரிபாலித்தல் சரீரஅர்ப்பணம். குருவினிடத்து ஈசுவரபாவமும் அவரது வடிவத்தைத் தியானித்தலும் மன அர்ப்பணம். குருவை நிந்தியாது துதித்தல் வாக்கின் அர்ப்பணம். கிருகஸ்தனாகிய குருவினிடத்துச் சகல தனங்களையும் அர்ப்பணம் செய்தல் அல்லது துறந்த குருவையடையும்பொருட்டுச் சர்வ தனத்தையும் விடல் தன அர்ப்பணம். தலையுள்ள ஓர் குருவானவர் மூற்கூறிய சேவையில்லாமலே பிரசன்னராய் உபதேசம் செய்து விட்டாலும், சித்த சுத்தியுடைய அதிகாரிக்குக் கல்யாணம் (நன்மை) உண்டாகும். அவற்றுள், சரீரம் வாக்கு தனம் எனபவற்றின் அர்ப்பணத்தாலுண்டாகும் குருசேவையினால் மலதோஷ நிவிருத்தியும், மன அர்ப்பணத்தாலுண்டாகும் குருசேவையினால் விக்ஷேபதோஷ நிவிருத்தியும். உண்டாகின்றன.

சித்த சுத்தியும் ஏகாக்கிரத்தன்மையு முண்டாகின்றன.

(ரு) அல்லது எவனுக்கு மந்தஜிஞ்ஞாஸையினு (ஞானவிருப்பத்தா)லும் *எ. வேதாந்த சிரவணத்திலேலனும் அப்பியாசத்திலேனும் பிரீதிபூர்வமாகப் பிரவிருத்தி யுண்டா

---

* எ. இங்கே இது இரகசியமாம்:—எவனுக்குத் திட ஞானமுண்டாயிருக்கின்றதோ, அவனுக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லை. எவனுக்குத் தீவிர ஜிஞ்ஞாஸையு (ஞானவிருப்பமு) ண்டாயிருக்கின்றதோ, அல்லது மந்தஞான முண்டாயிருக்கின்றதோ, அவனுக்குச் சிரவணாதிகள் செய்யவேண்டியனவாம்; கர்மோபாசனைகள் செய்யவேண்டியதில்லை. எந்தச் சுபுத்தி (நற்புத்தியுடையவனு)க்கு மந்த ஜிஞ்ஞாஸையினால் வேதாந்த சிரவணத்தில் பிரவிருத்தி யுண்டாகின்றதோ அவனுக்கும் சிரவணம் செய்யவேண்டியதாம். எவனுக்கு மந்த ஜிஞ்ஞாஸையிருந்தும் வேதாந்த சிரவணத்தில் பிரவிருத்தியுண்டாகவில்லையோ, அவனுக்கு நிஷ்காமகர்மமும் உபாசனையும் செய்யவேண்டியனவாம். எவனுக்கு வைராக்கியலேசமின்மையால் மந்த ஜிஞ்ஞாஸையுமில்லையோ, அவனுக்கு ஸகாம கர்மோபாசனைகள் செய்யத்தக்கனவாம். இது பாகவதத்தின் ஏகாதசஸ்கந்தத்தின் உo-வது அத்தியாயத்திற் கூறிய ஞானம் பக்தி கர்மமென்னும் மூன்று யோகங்களின் வியவஸ்தையாம்.

யிருக்கின்றதோ, அவனுக்கும் கர்மோபாசனைகளில்லாமலே சித்த சுத்தியும் ஏகாக்கிரத்தன்மையு முண்டாகின்றன. ஏனெனின் 'சிரத்தை பக்தி குருசேவை யென்பவற்றோடு வேதாந்தத்தைக் கேட்டலால் பிரதிதினமும் அ௦-கிருச்ரத்தின் பலமுண்டாகின்றது" என்பதனால் பாபமாகிய மலம் நிவிருத்தியாதலோடு சித்தசுத்தியு முண்டாகின்றது நீண்ட காலம் நித்தியம் இடைவிடாமல் அன்போடு வேதாந்தத்தின் சிரவண அப்பியாசத்தால் திருஷ்டாந்த இதிகாச முதலியவற்றால் நாடகத்தைப் பார்ப்பதினால் எப்படி விநோதமுண்டாகின்றதோ, அப்படிப் புத்திக்கு விநோதமுண்டாகின்றது. இதனால் விக்ஷேபமாகிய மலத்தின் நிவிருத்தி பூர்வமாகச் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை யுண்டாகின்றது என்பது அபிப்பிராயம்

௩. "பிரஹ்மமாகிய ஆத்மாவை யான் அறியவில்லை" என்னும் * அ. வியவகாரத்திற்கு எது ஏதுவோ அது * ௬ அஞ்ஞானம்.

---

* அ சொல்லுதலையும் தோற்றுதலையும் வியவகாரமென்பர்

* ௬ ஆவரணசக்தி விக்ஷேபசக்திகளையுடைய அநாதி ஸதஸத்விலக்ஷணமாய் அநிர்வசநீய பாவரூபம் அஞ்ஞானபதார்த்த

எவனுடைய சித்தத்தில் இவ்வாறு தோற்ற முண்டாகின்றதோ, அவன் அஞ்ஞானி. அவனுக்குத் தத்துவஞானத்தைச் சம்பாதித்தல்

---

மாம். பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் மறைத்தல் ஆவரணமாம். அதனை (ஆவரணத்தை)ச் செய்யும் சக்தி (சாமர்த்தியம்) ஆவரணசக்தியாம். பிரபஞ்சமும் அதன் ஞானமும் விக்ஷேபமாம். அதனையுண்டாக்கும் சாமர்த்தியமெதுவோ அது விக்ஷேபசக்தியாம். உற்பத்தியில்லாததை அநாதியென்பர். கடமுதலிய காரியங்களின் பிராகபாவத்தைப்போல அஞ்ஞானத்திற்கு உற்பத்தியில்லை ஆதலால் அஞ்ஞானம் அநாதியாம். சத்தசத்திற்கு விலக்ஷணமா(பாதிக்கத்தக்க சொரூபமுடையதா)யிருத்தலால் அஞ்ஞானம் அநிர்வசநீயமாம். இதனையே மித்தையென்பர் இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு எது எதுவோ அது பாவரூபமாம். எதனால் அஞ்ஞானம் ஜகத்திற்கு உபாதானமாயிருத்தலால் இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு எதுவாயிருக்கிறதோ அதனால் அது பாவவடிவமாம். அநிர்வசநீயமாயிருந்து எதுபாவரூபமாயிருக்கிறதோ அது அநிர்வசநீயபாவரூபமெனப்படும். இவ்வஞ்ஞானத்தையே காரணதேகம், அவித்தைமுதலிய பெயர்களாற் சொல்லுகின்றார்கள். இதற்கு அநேக பேதங்கள் (பெயர்கள்) இருக்கின்றன. அவை பஞ்சதசியின் உரையில் எழுதப்பட்டிருக்கின்றன; விஸ்தார பயத்தால் இங்கு எழுதப்படவில்லை.

தகுதியாம். ஏனெனின், தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நிவிருத்தி யாகின்றது; மற்றச் சாதனங்களால் நீங்குகிறதில்லை. ஆனால் அந்தத் தத்துவஞானம் அதிகாரிக்குக் கிடைக்கும். அவ்வதிகாரி இவனவன்:—எவனுக்கு இந்த ஜன்மத்திலாவது ஜன்மாந்தரத்திலாவது செய்த நிஷ்காமகர்ம உபாஸனைகளினால் மலவிக்ஷேபதோஷங்கள் நாசமாய் மூன்றாவதான அஞ்ஞானதோஷம் மிஞ்சியிருக்கிறதோ, அதனாலேயே எவன் விவேகமுதலிய நான்கு சாதனங்களோடு கூடியவனாயிருக்கின்றானோ, அந்தப் புருஷன் இந்நூலிற்கும், இந்நூலின் விசாரவாயிலாக ஆத்மஞானத்திற்கும், ஆத்ம ஞானவாயிலாக மோக்ஷத்திற்கும் அதிகாரியாவன்.

## ச. நான்கு சாதனங்களின் பெயர்.

முதலாவது விவேகம்; இரண்டாவது விராகம்; மூன்றாவது ஷட்சம்பத்தி; இதனை ஜிஞ்ஞாசுவானவன் தரித்து நான்காவதாகிய முமுக்ஷுத்தன்மையை விரும்புவன். இவை நான்கு சாதனங்களாம்.

## ரு. விவேக லக்ஷணம். (க)

ஆத்மா நித்தியமும் (அவிநாசியும்) கிரியையில்லாததும் (அசலமு)மாயிருக்கின்றது; ஜகத்து

அநித்தியமும் (விநாசியும்) சலமு (கிரியையுள்ளது)மா யிருக்கின்றது என்று அறிந்து பாலையும் நீரையும் வேறுபிரிக்கும் அன்னத்தைப் போல, சாரமாகிய ஆத்மாவையும் அசாரமாகிய அநாத்மாவையும் திடமாக விசாரித்தல் (வேறுபிரித்தறிதல்) விவேகமாம். இப்படி மனதில் நிச்சயம் செய்க

சங்கை:—விவேக காலத்தில் "ஜகத்து அநித்தியம் அதாவது மித்தை" என்று எப்போது அறியப்பட்டதோ, அப்போது மறுபடியும் பிரபஞ்சத்தினது பாதத்தின் பொருட்டுள்ள உத்தர (பிற்) சாதனங்களோடு கூடிய ஞானத்திற்கு என்ன பிரயோஜனமிருக்கின்றது ?

சமாதானம்:—விவேககாலத்தில் சாஸ்திரத்தினுலும் யுக்தியினுலும் பரோக்ஷத்தன்மையாக ஜகத்தை மித்தையென் றறிந்தபோதினும், அபரோக்ஷமாக மித்தையென் றறியவில்லை. ஆதலால் பிரபஞ்சத்தின் அபரோக்ஷ பாதத்தின்பொருட்டு உத்தரசாதனங்களோடு கூடிய ஞானம் பிரயோஜனமாகின்றது.

## சா. வைராக்கிய லக்ஷணம். (உ)

"அர்ச்சுனு, பிரஹ்மலோக முதல் சர்வ லோகங்களும் புநராவிருத்தி (திரும்பி வருதலை)யுடையனவா யிருக்கின்றன" என்று பகவானது வாக்கியமிருத்தலால் இவ்வுலக முதல் பிரஹ்மலோக பரியந்தமாகிய சகல லோகங்களின் போகத்தையும் பிரமாணயுக்திகளால் தன் சித்தத்தில் அநித்தியமென்றறிந்து, அவற்றைக் காக்கைமலம்போலச் சித்தத்தினின்றும் விடல்வேண்டும். இப்படித் தோஷதிருஷ்டியினுல் இகலோக பரலோக போகங்களின் இச்சையை விடுதல் எதுவோ அது வைராக்கியமாமென்று தனது புத்தியிற் கொள்க.

இங்கே காக்கையின் மலத்தைக் கொள்ளுதல் எதுவோ, அது மலத்தின் மலவடிவமாயிருத்தலால் மிகுந்த அருவருப்பு (தோஷ திருஷ்டி)க்கு விஷயமாமென்பதைக் குறிப்பிக்கும் பொருட்டாம்

இங்கே இது விசேஷமாம்:-விடுதலின் இச்சைக்கு அல்லது இச்சையில்லாதிருக்குந்தன்மைக்கு வைராக்கியமென்று பெயராம். அவ்வைராக்கியம் க-யதமானம், உ-வியதிரேகி,

௩-ஏகேந்திரியம், ௪-வசீகாரமென்னும் பேதத்தால் நான்கு வகையாம்.

௧-மந்தவிராகத்திற்கு யதமான மென்று பெயர்

௨-நாகுலியின் (கீரிபுரண்டான் பூண்டின்) ஆசிரயத்தால். சர்ப்பத்தோடு யுத்தஞ் செய்கின்ற நகுலத்தை (கீரியை)ப் போலச் சற்சங்கத்தின் ஆசிரயத்தால் துற்குணங்களை விடுவதிலும் நற்குணங்களைக் கொள்ளுவதிலு முண்டாகும் உற்சாகம் எதுவோ அது வியதிரேகியாம்.

௩-இந்திரியங்களை யடக்குதலாகிய தமத்திற்கு ஏகேந்திரியமென்று பெயர்.

௪-மனத்தின் நிக்கிரகமாகிய சமத்திற்கு வசீகாரவைராக்கிய மென்று பெயர் அவற்றுள், வசீகாரவைராக்கியம் (௧) மந்தம் (௨) தீவிரம் (௩) தீவிரதரமென மூன்று வகையாம்

(௧) புத்திரன், திரவியம் முதலியவற்றின் நாசத்தால் "சை! ஈதென்ன சம்சாரம்" என்றுண்டாகும் க்ஷணிகபுத்திவிருத்தி மந்த வைராக்கியமாம்.

(உ) இவ்வுலகத்துப் புத்திரன்முதலியவற்றின் சம்பந்தமாகிய சுகத்தின் விருப்பமின்மை எதுவோ அது தீவிரவைராக்கியமாம்.

(ங) புநராவிருத்தியுடையவைக ளென்றறிந்து சர்வ லோகங்களின் இச்சையையும் விடுதல் தீவிரதரவைராக்கியமாம். அவற்றுள், ஞானத்திற்குக் காரணமாயுள்ள தீவிரதரத்தை முமுக்ஷுவானவன் * க0. சம்பாதிக்கவேண்டும்.

## எ. ஷட்சம்பத்திகளின் பெயர். (ங)

சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சமாதானம், விசுவாசம், (சிரத்தை) என்னும் இவ்வாறின் அடைவைப் பண்டிதர்கள் ஷட்சம்பத்தியென்பர்.

---

* க0. மந்ததீவிர வைராக்கியங்களிலும் இகலோக பரலோகங்களின் விருப்பம் அந்தர்கதமா (அடங்கி) யிருக்கின்றது. அது ஞானத்தின் பிரதிபந்தகமாம். தீவிரதர வைராக்கியத்தில் இகலோக பரலோகங்களின் விருப்பமாகிய பிரதிபந்தகமில்லை. ஆதலால் அது ஞானத்திற்குச் சாதகமாயிருத்தலால் ஜிஞ்ஞாசுவானவன் அதனைச் சம்பாதித்தல் உசிதமாம்.

## அ. சமதமங்களின் லக்ஷணம். [க-உ]

க. விஷயவாசனையாகிய பலத்தினால் உன்மத்தமாகிய மனமென்னும் யானை எதுவோ அதனை விஷயங்களில் அத்தியந்த தோஷ திருஷ்டிவடிவமாகிய அங்குசத்தினால் ஜயித்தல் (சுவாதீனஞ் செய்தல்) சமமாமென்றறிக.

உ. சப்தமுதலிய ஐந்து விஷயவடிவமான மார்க்கத்தில் பிரீதியுடைய இந்திரியங்களின் சமுதாயவடிவமான குதிரைகள் எவைகளோ, அவைகளை விஷயங்களில் தோஷ திருஷ்டி பூர்வமாகச் சாஸ்திரசிந்தனநிரூப சாட்டையினால் ஜயித்தல் தமமாமென்றறிக.

இங்கே இது இரகசியமாம்:—சரீரம் இரதம்; அதற்கு இந்திரியங்கள் குதிரைகள்; மனம் கடிவாளம்; புத்தி சாரதி; அவ்விரதத்திலிருக்கும் ஆத்மா இரதிகன்.

(க) எந்த இரதிகனுடைய புத்தியாகிய சாரதி பிரமாதியா (மறதியுள்ளவனு)யிருக்கின்றானோ, அவனுடைய இந்திரியங்களாகிய அசுவங்கள் குமார்க்கத்தி (கெட்டவழியி)ற் செல்லுகின்றன. அவ்விரதிகனை நரகமுதலிய துக்கவடிவமாகிய குழியிற் றள்ளுகின்றன.

(உ) எந்த இரதிகனுடைய புத்தியாகிய சாரதி அப்பிரமாதியா யிருக்கின்றானோ, அவனுடைய இந்திரியங்களாகிய குதிரைகள் நன்மார்க்கத்திற் செல்லுகின்றன அந்த இரதிகனைச் சுவர்க்கமுதலியவடிவ அல்லது மோக்ஷவடிவ வீட்டிற் சேர்ப்பிக்கின்றன.

எதனால் இப்படி இருக்கிறதோ, அதனால் முமுக்ஷுவுக்குத் தனது புத்திவடிவமாகிய சாரதியின் இஷ்டப்படி நடத்தல் இஷ்டப்படி பேசுதல் இஷ்டப்படி சாப்பிடுதலென்னும் பிரமாதத்தை நீக்கி, அதன்வழியாய் இந்திரியங்களென்னும் குதிரைகளைச் சன்மார்க்கத்திற் பொருத்துதல் தகுதியாம்.

இங்கே புத்தியாகிய சாரதியை வசஞ்செய்தல் சமமும், இந்திரியங்களாகிய குதிரைகளை வசஞ்செய்தல் தமமுமாம் ஆகையால் சாரதியின் அதீனமாய்க் குதிரைகளும் குதிரைகளின் அதீனமாய்ச் சாரதியு மிருத்தல்போலப் புத்திக்கும் இந்திரியங்களுக்கும் ஒன்றற்கொன்று அதீனத்தன்மை யிருக்கின்றது. ஆதலால் முற்கூறிய சமதமங்கள் ஒன்றற்கொன்று சாபேக்ஷமாம். இப்படி * கக. ஷட்சம்பத்தி முழுவ

* கக ஷட்சம்பத்தியாகிய சமாதிகள் ஒன்றற்கொன்று துணையாதலை விசாரசாகரத்தினது முதல் தரங்கத்தின் டிப்பணியிற் காண்க.

தும் ஒன்றற்கொன்று சாபேக்ஷமா மாகலின் ஒரு சாதனமாக எண்ணப்பட்டிருக்கின்றன வென்றறிக.

## ௯. உபரதி திதிக்ஷைகளின் லக்ஷணம். [௩-௪]

௩. [வீடு மனைவி புத்திரன் தனமுதலியனவாக முன்னரே கிடைத்துள்ள விஷயங்களில் தோஷ திருஷ்டியினால் மலத்திலாவது வாந்தியிலாவது இச்சையில்லாதிருத்தல்போல இச்சையில்லாதிருத்தல் வைராக்கியமாம். இவ்வைராக்கியமுண்டானபின் முன்னுள்ள விஷயங்களை விடுதலாகிய சந்நியாச முண்டாகின்றது.] அந்த வைராக்கியத்திற்கு விலக்ஷணமாய் முன்விடப்பட்டு மறுபடியும் வந்து சேருகின்ற விஷயங்களை நீக்கிய மலத்தைப்போலாவது வாந்தியைப்போலாவது தியாகஞ் செய்தல் (அங்கீகரியாதிருத்தல்) அதாவது மறுபடியும் அதில் தீனமா (இஷ்டமுண்டா)காதிருத்தல் எதுவோ அதனை வைராக்கியத்தின் பலமாகிய உபரதி யென்பர்.

௪. சிரவணாதிகளைச்சாதிக்குங்கால் அவற்றிற்கு விரோதமுள்ள சீதம் உஷ்ணம் (பசி தாகம் சுகம் துக்கம் இலாபம் நஷ்டம்) முதலிய

துவந்துவ (இருமைத்) தர்மங்களைச் சகித்தலைச் சாதுக்கள் திதிக்ஷை யென்பர்.

முற்கூறிய திதிக்ஷையைவிட்டுத் துவந்துவ தர்மங்களை நீக்குதலிற் றற்பரனுயுள்ள முமுக்ஷுவுக்கு வேதாந்த சிரவண முதலியவற்றில் வியவதானம் (அந்தராயம்-மறைப்பு) உண்டாகும். ஆகையால் திதிக்ஷையும் சிரவணத்தில் உபயோகமா யிருத்தலால் சிரவணத்திற்குச் சாதனமாம், இவ்வாறு மற்ற விவேகமுதலியனவும் சிரவணத்திற்குச் சாதனங்களா மென்பதறிக.

## ௯0. சமாதான சிரத்தைகளின் லக்ஷணம். [ரு-சா]

ரு. பிரஹ்மமாகிய லக்ஷியத்தில் சித்தம் ஏகாக்கிரமா (தற்பரமா) யிருத்தலைச் சமாதான மென்பர்.

சா. வேதாந்த சாஸ்திர வசனத்திலும் குருவாக்கியத்திலு முண்டாகும் விசுவாசம் (ஆஸ்திகத்தன்மை- நம்பிக்கை) எதுவோ அது சிரத்தையாம். முன் உபாசனையினுலுண்டாகும் சித்தஏகாக்கிரத்தன்மை யெதுவோ, அது சகுணப் பிரஹ்மத்திலாவது அல்லது அதனைக்

குறிப்பிக்கும் பிரதிமை முதலியவற்றிலாவது உண்டாவதாம். இங்கே கூறிய சித்த ஏகாக்கிரத்தன்மையோ நிர்க்குணப் பிரஹ்மத்தில் சித்தம் தற்பரமாகுந் தன்மைதாம். இஃது அவற்றின் பேதம்.

இங்கே ஷட்சம்பத்திகளின் மத்தியில் சிரத்தையைக் கடைசியிற் கூறியதின் அபிப்பிராயம் இதுவாம்:—விருக்ஷத்தின் பல மெதுவோ அது அந்தத்தில் (கடைசியில்) உண்டாகின்றது. ஆகையால் விருக்ஷத்தின் சர்வ அங்கங்களிலும் பலம் சிரேஷ்டமாம். இதனாலேயே அது முக்கியமாம். அதுபோல ஞானத்தின் சாதனங்களாகிய விவேகம் வைராக்கியம் சமமுதலிய எல்லாவற்றுள்ளும் சிரத்தை சிரேஷ்டமாம் இதனாலேயே அது முக்கியமாம். ஆகையால் அது கடைசியில் சொல்லப் பட்டிருக்கின்றது.

பலத்தின் உற்பத்திக்குப் பின் பலத்தின் பரிபாக அவஸ்தை யுண்டாகிறதுபோலச் சிரத்தையின் உற்பத்திக்குப் பின் முமுக்ஷுத்துவமுண்டாகின்றது. ஆகையால் முமுக்ஷுத்துவம் சிரத்தையென்னும் பலத்தின் பரிபாக அவஸ்தையாம். இதனாலேயே அது சிரத்தைக்குப் பின் சொல்லப்பட்டது.

இங்கே இது இரகசியம்:—சாஸ்திரம் குரு முதலியவற்றின் வாக்கியங்களி லுண்டாகும் சிரத்தையானது ஈசுவரன் குரு முதலியோர் களின் பக்தியின்றி யுண்டாகாது. எவனுடைய சித்தத்தில் முதலில் ஈசுவரன் குரு மற்ற இருஷிகள் முனிகள் பிரஹ்மநிஷ்டர்க ளென்னு மிவர்களிடத்தில் பூஜ்ய (பூஜிக்கப்படுபவரென்னும்) புத்தியாகப் பிரீதிவடிவமான பக்தியுண்டாகின்றதோ, அவனுக்கே வேத முதலிய சாஸ்திரங்களிலும் குரு முதலியோர் வாக்கியங்களிலும் பக்தியநுசாரமாக (எப்படிப் பக்தியோ அப்படி)ச் சிரத்தை யுண்டாகின்றது. ஆதலால் பக்தி எதுவோ, அது ஞானத்திற்கும் ஞானத்தின் சர்வ ஸாதனங்களுக்கும் முக்கிய காரணமாம். இதனாலேயே சிரத்தை *௧௨. பக்தி பூர்வகமா யிருத்தலால் சர்வ சாதனங்களிலும் முக்கிய சாதனமாம்.

இங்கே இது உருவகம்:—

௧. மோக்ஷ சாதனங்களின் சம்பத்தி (அடைவு) விருக்ஷமாம்.

---

* ௧௨. இங்கே "பக்தி பூர்வமாக" என்னும் பதத்திற்கு பக்தி யென்னும் விதையோடு கூடியதென்பது பொருள்.

உ. அதற்கு நிஷ்காம கர்ம முதலிய பிர யத்தினங்களாற் செய்யப்பட்ட சுத்த சித்தம் நிலமாம்.

௩. ஈசுவரன் குரு முதலியோர்களின் பக்தி விதையாம்.

௪. மந்தவிவேகம் முளையாம்.

௫. திடவிவேகம் அடிமரமாம்.

௬. விவிதமான வைராக்கியம் சாகை(கிளை) களாம்.

௭. சமமுதலிய வைந்து சாதனங்கள் புஷ் பங்களின் கொத்துக்களாம்.

௮. குருவாக்கிய சிரவணம் அதன்பேரி லுண்டாகும் * ௧௩. ஆண்விருக்ஷத்தின் சை யோகமாம்.

---

*௧௩. நிஷ்பல விருக்ஷத்தை ஆண்விருக்ஷ மென்றும், ஸபல விருக்ஷத்தைப் பெண்விருக்ஷ மென்றும் கூறுவர். அருநெல்லி பனை முதலிய சில பெண் விருக்ஷங்களின் பேரில் எப்போது ஆண் விருக்ஷங்களின் அல்லது அதன் புஷ்பங்களின் சையோக முண்டாகின்றதோ, அப்போது அவை பலிக்கின்றன. இது உலகப்பிரசித்தம்.

௯ * ௧௪. சிரவண மனன நிதித்தியாஸன முதலிய அந்நிய சாதனங்கள் அப்பழ சம்பந்தியான அந்நியப் பிரயத்தினங்களாம்.

௧௦. சிரத்தை பழமாம்.

௧௧. முமுக்ஷுத்துவம் பழத்தின் பரிபாக தசையாம்.

௧௨ ஞானம் அப்பழத்தின் இரசமாம்.

௧௩. அப்பழத்திலும் நிஷ்பிரயோஜனமாகிய பக்தியென்னும் பீஜமிருக்கின்றது.

அப்பழத்தின் ஞான மென்னும் இரசமெதுவோ அது சிரத்தையென்னும் பழத்தின் அதீனமாம். ஏனெனில், முற் கூறிய சிரத்தை என்னும் பழம் உலர்ந்து போனால் அதன் ஞானமாகிய இரஸமும் உலர்ந்து போகும். ஆதலால் ஞானமென்னும் இரஸம் சிரத்தை யென்னும் பழத்தின் அதீனமாம். அப்

* ௧௪. சிரவணம் ஜலம்விடுதலாம்; மனனம் சம்சயமுதலிய புற்பூண்டுகளை நீக்குத (களையெடுத்த) லாம். நிதித்தியாசனம் காவற்காறனால் பேதவாதி பாமரபுருஷன் காமமுதலிய பசு பக்ஷிகளினின்றும காத்தலாம. பதார்த்த சோதனை காய்ந்த சாகை முதலிய குப்பைக் கூளங்களை நீக்குதலாம். இவை முதலியன கற்பிக்கத் தக்கனவாம்.

பழத்தைப் * கரு. புசித்தல் வாயிலாக * கசு. வயிற்றில் ஸ்தாபிக்கவே, அதனிரஸமும் வயிற்றில் நிலைபெறும். ஆதலால் ஜீவித்திருக்குமளவும் வித்துவான்களது சித்தத்தில் சாஸ்திர குருவாக்கியங்களால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தில் சுபாவமான சிரத்தையிருக்கும். அது பரியந்தம் ஞானநிஷ்டையு மிருக்கும்

அப்பழத்தை அநபிஞ்ஞ (அறிவின்றிய) புருஷன் பக்தி யென்னும் உருசியுள்ளவிதையின் உபேக்ஷையோடு பக்ஷணஞ்செய்கிறான். அவனுக்கு அதிக உருசி யுண்டாகிறதில்லை அபிஞ்ஞ (அறிவுள்ள) புருஷன் பக்தியென்னும் விதையோடும் ஞானமாகிய இரஸத்தோடும் அப்பழத்தைச் சாப்பிடுகின்றான். அவனால் அதன் அதிக உருசி அநுபவிக்கப்படுகின்றது.

இவ்வாற்றான் முற் கூறிய சிரத்தையென்னும் பழத்திற்கு ஜீவன்முக்தி உருசியாம்

---

* கரு. விசாரத்தினால் தாரணைவாயிலாக அதாவது தாற்பரியத்தினால் நிச்சயித்தலாகிய நிஷ்டைவாயிலாக.

* கசு. சாஸ்திர குருவாக்கியங்களால் நிச்சயிக்கப்பட்ட பாமார்த்தமாகிய அத்வைத அர்த்தத்தில்.

விதேகமுக்தி அதனுலாகியபசியை நிவர்த்தித்தல் பூர்வகமான திருப்தியாம்.

## ௧௧. முமுக்ஷுத்துவத்தின் லக்ஷணம் (௪)

பசியுள்ள புருஷன் எப்படி அன்னத்தை இச்சிக்கின்றானே அது போலவே மோக்ஷத்தின் தீவிர இச்சை எதுவோ, அதனைப் பண்டிதர்களும் நற்குண முடையவர்களுமாகிய முநிசிரேஷ்டர் (சந்நியாசிகளாகிய ஆசாரியர்) கள் முமுக்ஷுத்துவ மென்று கூறுவர்.

சொல்லப்பட்ட முமுக்ஷுத்துவம் சர்வ சாதனங்களுக்கு முன்னரும் மந்த ரூபமாய் உண்டாகின்றது. ஏனெனின்,

" ப்ரயோஜநமநுத்திஶ்ய ந மந்தோऽபி ப்ரவர்ததே ||

பிரயோஜனத்தை யுத்தேசிக்காமல் மந்தனும் பிரவிருத்திக்கிறதில்லை" என்னும் நியாயத்தால் மோக்ஷமாகிய பலத்தி னிச்சையின்றி நிஷ்காம கர்மமுதலிய சாதனங்களில் ஒருவனுக்கும் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால் மந்த முமுக்ஷுத்துவமோ சகல சாதனங்களுக்கு முன்னரு முண்டாகின்றது. ஆனால் அது தீவிரமாயில்லை.

மற்றச் சாதனங்கள் சித்தித்த பின்னர்த் தீவிர முமுக்ஷுத்துவ முண்டாகின்றது. அதுவே குருவைச் சரணடைதல் பூர்வகமான சிரவணமுதலிய பிற்சாதனங்களிற் பிரவிருத்தித்தற்கு ஏதுவாகின்றது.

## ௧௨. அதிகாரியினிடத்துக் கர்த்தவ்வியத்தைக் குறிப்பித்தல்.

இப்படிச் சொல்லப்பட்ட அதிகாரிஎவனோ அவன் சற்குருவின் சரணங்களில் தலைவணங்கி * ௧௭. விதிப்படி சரணமடைவன்.

"தத்விஜ்ஞாநார்த்தம் ஸத்குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் | ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஶ்ரத்தாந்வித: ஸமாஹிதோ ஹ்யஸ்வாऽऽத்மநாத்மாநம் பஶ்யேத் ||

அந்தபிரஹ்மத்தை அறியும்பொருட்டு அவ்வதிகாரி சமித்பாணியா (பத்திர புஷ்ப பலாதி

* ௧௭. இங்கே குருவைச் சரணடையுந் தன்மையை அறிவிக்கும் சாஸ்திரவசனம் விதி யெனப்படும். இந்த "விதிப்படி" என்னும் சப்தத்தின் அர்த்தம் அதைட்போலவாம் (அதையநுசரித்தாம்). குருவைச் சரணமடையும் கிரமம் மேல் இரண்டாவது உபதேசத்தில் ௧௭-வது விஷயத்தில் எழுதப்படும்.

களைக் கையிற் கொண்டவனாய், சாந்த (சமமுடையவ)னாய், தமமுடையவனாய், திதிக்ஷையுடைவனாய், சிரத்தையுடையவனாய், சமாதானத்துடன் கூடியவனாய், சுரோத்திரிய (சுருதியுணர்ந்தவ)ரும், பிரஹ்மநிஷ்டருமாகிய குருவையே அடைந்து பிரஹ்மமாகிய ஆத்மாவினிடத்திலேயே கூடஸ்தராகிய ஆத்மாவை ஏகரூபமாய்ப் பார்க்கக் கடவன்'' என்னும் சுருதியினால்.

## ௧௩. குருலக்ஷணம்.

௧. பிரஹ்மநிஷ்ட (வழியின் அநுபவமுள்ளவனாய் வழியைக் காட்டும் புருஷனைப்போல பிரஹ்மத்தினிடத்து நிஷ்டையுடையவ)ராயும்,

௨. சுரோத்திரிய (வழியின் அடையாளங்களை யறிந்து வழிகாட்டும் புருஷனைப்போலச் சுருதிகளின் அர்த்தத்தை யுணர்ந்தவ)ராயும்,

சரணடைந்த சிடனுக்கு வழிகாட்டும் புருஷனைப்போல அத்வைதப் பிரஹ்மத்தை யுபதேசிப்பவர் எவரோ, அவரே ஸ்ரீமானாகிய (பிரஹ்மவித்தையாகிய இலக்ஷ்மியையுடைய) குருதேவனாவர்.

ஆதலால் சரணடைந்த சிடன் அந்தக் குருவிற்கு எப்போதும் சேவை செய்யவேண்டும்

ஞானத்திற்குமுன் செய்யும் ஈசுவர குரு வேதாந்த சாஸ்திரங்களின் சேவையானது ஞானம் சித்திக்கும் பொருட்டாம். ஞானமுண்டாகியபின் செய்யும் இம்மூன்றின் சேவை செய்ந்நன்றிமறத்தலென்னும் தோஷம் நீங்கும் பொருட்டாம். இவ் வபிப்பிராயத்தினாற்றான் இங்கே "எப்போதும் சேவை செய்யவேண்டு" மென்பது கூறப்பட்டது.

## கசு சம்பந்த வர்ணநம் உ.

இந்நூல் பிரஹ்மத்தின் பிரதிபாதகமு (பிரஹ்மத்தைச் சொல்லுவது) ம், பிரஹ்மம் இந்நூலாற் பிரதிபாத்தியமு (சொல்லப்படுவது)மாம். இவ்விரண்டற்கும் ஒன்றற்கொன்று பிரதிபாதகப் பிரதிபாத்தியபாவரூப சம்பந்தம் பிரசித்தமாயிருக்கின்றது.

க. பிரதிபாதனஞ்செய்வது எதுவோ அது பிரதிபாதக மெனப்படும். இந்நூல் பிரஹ்மத்தைப் பிரதிபாதனஞ் செய்வதா யிருத்தலால் பிரதிபாதகமாம்.

உ எது பிரதிபாதனம் செய்யப்படுகின்றதோ அது பிரதிபாத்திய மெனப்படுகின்றது. பிரஹ்மம் இந்நூலாற் பிரதிபாதனம் செய்யப்படுவதா யிருத்தலால் பிரதிபாத்தியமாம்.

இது முதலாக மற்றும் அநேகவித சம்பந்தங்களைக் கூறுவர். அவற்றை விஸ்தாரமாமென்னும் பயத்தால் எழுதவில்லை.

இங்கே சம்பந்தமாகிய அநுபந்தத்தைக் கற்பித்தற்கு இது பிரயோஜனமாம்:—எந்த வஸ்துவிற்கு எதனோடு சம்பந்தமிருக்கிறதோ அந்த வஸ்துவிற்கு அதில் உபயோகமிருக்கின்றது குயவன் முதலியோர்க்குக் குடத்துடன் சம்பந்த மிருக்கின்றது. அதனால் அவர்கள் கடத்தில் உபயோகமாகிறார்கள். எந்த வஸ்துவிற்கு எதனோடு சம்பந்தமில்லையோ, அந்த வஸ்துவிற்கு அதனிடத்து உபயோகமுண்டாகிறதில்லை நேத்திரத்திற்கு வாயுவினோடும் ஆகாயத்தினோடும் சம்பந்தமில்லை ஆதலால் நேத்திரத்திற்கு வாயுவினிடத்தும் ஆகாயத்தினிடத்தும் உபயோகமுண்டாகிறதில்லை. அது போலக் கிரந்தத்திற்கும் பிரஹ்மத்திற்கும் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) சம்பந்தமில்லாவிடின், கிரந்தத்திற்குப் பிரஹ்மத்திலும் பிரஹ்மத்திற்குக் கிரந்தத்திலும் யாதொரு உபயோகமும் சித்தியாது. ஆகையால் பரஸ்பரத்தின் உபயோகம் பரஸ்பரத்தில் நிச்சயிக்கும் பொருட்டு அவற்றின் சம்பந்தம் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. இப்படியே மற்றச் சம்பந்தங்களிலும்

அறிந்துகொள்க. பிதாவிற்குப் புத்திரன் ஜந்நியனாதலின் பிதாவிற்குத் தனது ஜந்நியமான புத்திரனோடு ஜந்நியத்தன்மைச் சம்பந்தமிருக்கிறது. அதுபோலக் கிரந்தத்திற்குப் பிரஹ்மம் பிரதிபாத்தியமா யிருத்தலால் கிரந்தத்திற்குத் தனது பிரதிபாத்தியமாகிய பிரஹ்மத்தோடு பிரதிபாத்தியத்தன்மைச் சம்பந்தமிருக்கிறது. புத்திரனுக்குப் பிதா ஜநகனாயிருத்தலால் புத்திரனுக்குத் தனது ஜநகனாகிய பிதாவோடு ஜநகத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. அங்ஙனமே பிரஹ்மத்திற்குக் கிரந்தம் பிரதிபாதகமாம்; அதனால் பிரஹ்மத்திற்குத் தனது பிரதிபாதகமாகிய கிரந்தத்தோடு பிரதிபாதகத்தன்மைச் சம்பந்தமிருக்கிறது.

எங்ஙனம் பிதாவிற்கும் புத்திரனுக்கும் ஒருவருக்கொருவர் ஜந்நிய ஜநகத்தன்மைச் சம்பந்த மிருக்கிறதோ, அங்ஙனமே கிரந்தத்திற்கும் பிரஹ்மத்திற்கும் ஒன்றற்கொன்று பிரதிபாத்தியப் பிரதிபாதகத்தன்மைச் சம்பந்த மிருக்கிறதென்பது சித்தித்தது.

### கரு. விஷயவர்ணநம் ௩.

ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் இந்நூலிற்கு விஷயமாமென்று பண்டிதர்கள் வேதமாகிய சமுத்

திரத்தைக் கடைந்து நிச்சயஞ்செய்திருக்கிறார்கள்.

இங்கே "ஜீவன்" என்னுஞ் சொல்லால் "ஜீவ" பதத்திற்கு இலக்ஷியார்த்தமாகிய கூடஸ்த ஆத்மாவென்னும் ஜீவசாக்ஷி கொள்ளப்படுகின்றது.

இங்கே இது சங்கை சமாதானமான விசேஷ அர்த்தமாம்

சங்கை:— பிரஹ்மாத்ம ஐக்கியம் இந்நூலிற்கு விஷயமெனக்கூறியது பொருந்தாது. ஏனெனின், சகல சரீரங்களிலும் ஆத்மா ஒன்றாயிருக்குமாயின், அதற்கு ஏகமாகிய பிரஹ்மத்தினோடு ஐக்கியம் சம்பவிக்கும். எதனால் சகல சரீரங்களிலும் ஆத்மா ஒன்றாகாது நாநாவாயிருக்கின்றதோ, அதனால் அதற்கு ஏகமாகிய பிரஹ்மத்தினோடு ஐக்கியம் பொருந்தாது.

சமாதானம்:—க. சர்வ சரீரங்களிலும் ஆத்மா நாநாவாயிருக்கின்றது என்னும் அர்த்தத்தில் ஒரு * கஅ. பிரமாணமும் கிடையாது.

---

* கஅ. யதார்த்த அநுபவத்தைப் பிரமையென்பர். பிரமையின் கரணத்தைப் பிரமாணமென்பர். அந்தப் பிரமாணம் பிரத்தியக்ஷம் அநுமானம் உபமானம் சப்தம் அர்த்தாபத்தி அநுபலப்தி யென்னும் பேதத்தால் ஆறுவிதமாம்.

உ. அஞ்ஞானிகளுக்குஇந்திரியமாகியபிரத்தியக்ஷப்பிரமாணத்தால் எந்தப் * கக பேதம் தோற்றுகிறதோ, அந்தப் பேதத் தோற்றம் தேகத்தை விஷயம் செய்வதாம்; ஆத்மாவை விஷயஞ்செய்வதன்று. ஏனெனின், ஆத்மா சுருதிக்கு வேறான பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களுக்கு விஷயமாகாததாயிருத்தலால்.

ஆகையால் சகல சரீரங்களிலும் ஆத்மா நாநாவன்று. ஆனால் அநேக கடங்களிற் பொ

---

* கக அந்நியோந்நியாபாவத்தைப் பேதமென்பர். ஒன்றில் ஒன்று இல்லாமையை அந்நியோந்நியாபாவமென்பர். கடத்தில் படத்தின் அபாவமும் படத்தில் கடத்தின் அபாவமும் அவற்றின் அந்நியோந்நியாபாவமாம், அதுவே அவற்றின் பேதமாம். அந்தப் பேதம் ஸஜாதீயபேதம் விஜாதீயபேதம் சுவகதபேதமென்னும் பேதத்தால் மூன்று வகையாம். அது இந்நூலின் முதற்செய்யுளுரையில் உதாரணத்துடன் எழுதப்பட்டிருக்கின்றது. அல்லது:-அந்தப் பேதம் ஐந்துவகையாம். இது (ஐந்துபேதம்) விசாரசந்திரோதயத்தின் ஆறாவது கலையிலும் விசாரசாகரத்தின் மூன்றாவது தரங்கத்திலும் அதன் டிப்பணத்திலும் கண்டனயுக்தியோடு எழுதப்பட்டிருக்கின்றது. பேத கண்டனத்தின் பிரபலயுக்தி விசாரசாகரத்தின் ஆறாவது தரங்கத்திலுள்ள சாங்கியமதத்தின் பிரசங்கத்தால் டிப்பணத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.

ருந்தியுள்ள ஆகாசத்தைப்போலச் சர்வ சரீ ரங்களிலும் ஆத்மா ஒன்றும். அதனால் அத ற்கு ஒன்றாகிய பிரஹ்மத்தோடு ஐக்கியம் பொருந்தும்.

சங்கை:—"ஆத்மா நாநாவென்பதில் ஒரு பிரமாணமுங் கிடையாது" என்று (சித்தாந்தி யாகிய) தாம் கூறியது பொருந்தாது. ஏனெ னின், ஆத்மா நாநாவென்னும் பொருளில் பிர த்தியக்ஷாதிப் பிரமாணங்களெல்லாம்இவ்வாறு சித்திக்கின்றன:—

க. எங்கெங்கே அகம் பிரத்தியயத்தின் (நானென்னும் விருத்தியின்) பேதமிருக்கின் றதோ, அங்கங்கே ஆத்மாவிற்குப் பேதமிருக் கின்றது.

(க) எதனால் தேகங்கள்தோறும் "நான் பிராஹ்மணன் நான் க்ஷத்திரியன்" என் றிவ் வாறு அகம்பிரத்தியயத்தின் பேதம் பிரத்தி யக்ஷமாகத் தோற்றுகின்றதோ,

(உ) சர்வ தேகங்களிலும் ஆத்மா ஒன்றா யிருக்குமாயின் "நீ, நான், இது" என்னு மிவை முதலிய வியவகாரங்களுக்கு லோப முண்டாகுமோ, அதனால் ஆத்மாவின் பேதத்

தில் * உ0. பிரத்தியக்ஷப் பிரமாண மிருக்கின்றது.

உ எதனால் ஆத்மாவிற்குப் பேதமில்லாவிடின் "நீ, நான், இது,, என்னு மிவை முதலிய வியவகாரம் சித்தியாதோ, அதனால் வியவகாரசித்தி பேதமின்றிச் சம்பவியாமையால் ஆத்மாவின்பேதத்தில் * உக. அர்த்தாபத்திப் பிரமாணமும் சித்திக்கின்றது.

ஈ. (க) ஆத்மா எதுவோ அது சரீரங்கள் தோறும் பின்ன பின்னமாம்; சரீரவடிவ வியக்திகள் பின்னமாயிருத்தலால்; கோ. (ஆ) முதலிய பசுக்களைப்போல.

(உ) ஆத்மா எதுவோ அது சரீரங்கள் தோறும் பின்ன பின்னமாகவேயிருக்கின்றது; சரீரங்கள் தோறும் அகம் பிரத்தியயத்தின் பேதமிருத்தலால்; கடாதிகளைப்போல என்

*உ0. பிரத்தியக்ஷப் பிரமையின் காரணம்(சாதன வடிவ பஞ்சேந்திரியங்கள்) பிரத்தியக்ஷப்பிரமாணமெனப்படும்.

* உக ஓர் புஷ்டியுள்ள புருஷன் பகலில் சாப்பிடுகிறதில்லை; அங்கே இராத்திரி போஜனமின்றிப் புஷ்டி (பருமன்) சம்பவியாதென்னும் ஞானத்தால் இராத்திரியில் புசிப்பானென்னும் கற்பனையுண்டா

னும் இவை முதலிய * உஉ. அநுமானப் பிரமாணங்களும் ஆத்மாவின் பேதத்தில் சித்திக்கின்றன.

ச. (க) "அதிதி, தேவன், கந்தருவன், மனிதன், பிதிரன், அசுரன்," என்றிவ்வாறு தேவர் முதலியோர்களின் பேதத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியும்

---

கின்றது. இங்கே போஜனமின்றிப் புஷ்டி சம்பவீயாதென்னும் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமாம். அந்த ஞானத்தினாலுண்டாகும் இராத்திரி போஜனத்தின் கற்பனை எதுவோ, அது அர்த்தாபத்திப்பிரமையாம். இதற்கு அநேக பேதங்களிருக்கின்றன அவை விருத்திரத்நாவலி யென்னும் நூலில் எழுதப்பட்டிருக்கின்றன.

* உஉ. இலிங்கத்தின் ஞானத்தாலுண்டாகும் ஞானம் அநுமிதிப்பிரமையாம். அதன் சாதனமாகிய லிங்கத்தின் ஞானமெதுவோ அது அநுமானப்பிரமாணமாம். பர்வதத்திலுள்ள புகையாகிய அக்கினியின் லிங்கமுளது. அதன் (லிங்கத்தின்) பிரத்தியக்ஷ ஞானத்தால் இம்மலை அக்கினியுடையது என்னும் நிச்சயமாகிய பரோக்ஷஞானமுண்டாகிறது. அங்கே புகையின் ஞானம் அநுமானப்பிரமாணமாம். அதனாலுண்டாகும் அக்கினியின் ஞானம் அநுமிதிப்பிரமையாம். இதன் விசேஷக்கிரமம் விருத்திரத்நாவலியில் எழுதப்பட்டிருக்கிறது.

(உ) "தேவன், தானவன், கந்தருவன், யக்ஷன், இராக்ஷதன், கின்னரன்" என்னு மிவை முதலிய புராண வசனங்களும் ஆத்மா வின் பேதத்தில் * உ௩. பிரமாணங்களாம்.

ரு. சித்தாந்தி! தாம் எப்போது ஆத்மா வின் ஐக்கியத்தை அங்கீகாரஞ் செய்கிறீரோ; அப்போது உம்முடைய வேதாந்த சித்தாந்தத் தில் சுகதுக்க முதலியவற்றிற்கு வியவஸ்தை சித்தியாது. ஏனெனின்,

(க) ஒருவன் துக்கி அல்லது சுகியானல் எல்லோரும் துக்கிகள் அல்லது சுகிகளாவர்.

(உ) ஆத்மாவிற்கு ஏகத்துவ மிருந்தால் சகல ஜனங்களும் சர்வஞ்ஞராவர். அதனல் விதி நிஷேத வடிவமான சாஸ்திரங்கள் வியர்த்தமாகும்; சர்வஞ்ஞர்களை முன்னிட்டு விதி நிஷேத மில்லாமையால்.

(௩) ஒருவன் பத்த (பந்தமுடையவ)ன னல் எல்லோரும் பத்தராவர் அல்லது ஒருவன் முத்தனனல் எல்லோரும் முத்தராவர்.

ஆதலால் ஆத்மா அநேகமென்பது பிர மாண சித்தமாம்.

---

* உ௩. இது சாப்திப்பிரமையின் காரணமாகிய சப்தப்பிரமாணமாம்.

சமாதானம்:—பிரதிவாதி ; ஆத்மா அநேக மென்பதில் நீ கூறிய பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்கள் சம்பவியா. ஏனெனின்,

க. வியாப்தியின் வியபிசாரத்தினால் பிரத் தியக்ஷப் பிரமாணம் சித்தியாமையால்.

(க) "எங்கெங்கே அகம் பிரத்தியயத்தின் பேதமிருக்கின்றதோ, அங்கங்கே ஆத்மாவிற் குப் பேதமிருக்கின்றது" என்னும் நியமமா (உடனிகழ்ச்சியா)கிய வியாப்தி எதுவோ அது வியபிசாரத்தை (பிறழ்ச்சியை) யடைகின்றது. நான் சிசு, நான் குமாரன், நான் யௌவனன், நான் விருத்தன், என்றிவ்வாறு சிசுத்துவமுத லிய அவஸ்தைகளின் பேதத்தால் அகம் பிர த்தியயத்திற்குப் பேதமிருந்தாலும் சிசு முத லிய அவஸ்தைகளையுடைய அகம் பிரத்தியயத் தின் அர்த்தமாகிய ஆத்மாவிற்குப் பேதம் காணாமையாலும், ஆத்மாவிற்குப் பேதமிருந் தால் பாலியாவஸ்தைமுதல் விருத்தாவஸ்தை வரையில் செய்த காரியங்களின் நினைவு சம்பவி யாமையினாலும், ஆத்மாவின்பேதத்தில் பிரத்தி யக்ஷப் பிரமாணம் சித்தியாது.

(உ) எங்ஙனம் ஒரே தேகத்தில் அவயவங் களின் பேதத்தை யாசிரயித்துத் தலை கை

கால் என்னும் இவை முதலிய வியவகாரங்க ளுண்டாகின்றனவோ, அங்ஙனமே சரீரங்கள் எல்லாவற்றினும் ஆத்மா ஒன்று யிருக்கினும் சரீரபேதத்தை யாசிரயித்து "நீ, நான், இது" என்னுமிவை முதலிய வியவகாரம் சித்திக் கின்றது.

உ. அந்த வியவகாரம் ஆத்மாவின் பேத த்தை யபேக்ஷிக்கிறதில்லை இப்படி வியவ காரம் சித்திக்கவே ஆத்மாவின் பேதமின்றி வியவகாரம் சம்பவியாதென்பதில்லை ஆத லால் ஆத்மாவின் பேதத்தில் அர்த்தாபத்திப் பிரமாணமும் சித்திக்கவில்லை.

ந. சரீரமாகிய வியக்திகளின் பேதத்தி னும் அகம் பிரத்தியயத்தின் பேதத்தினும் ஆத்மாவிற்கும் பேதமிருக்கின்றது என்னும் அநுமானப் பிரமாணமும் சித்தியாது. ஏனெ னின், ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணமென்னும் மூன்று தேகங்களுக்கும் ஜாக்கிர சொப்பன தேகங்களுக்கும் பேதமிருந்தும் அகம் பிரத் தியயத்தின் அர்த்தமாகிய ஆத்மாவிற்குப் பேதமில்லாமையால்.

ச. (க) முற்கூறிய சுருதியானது ஆத்மா வின் உபாதியாகிய தேவாதி தேகங்களின்

பேதத்தைக் கூறுகின்றது; ஆத்மாவின் பேதத்தை யன்று. ஏனெனின், சகலதேகங்களிலும் சைதன்னியம் ஏகரூபமா யிருத்தலால் ஆத்மாவிற்குப் பேதம் சம்பவியாது. ஆதலால் முற்கூறிய சுருதி சரீர பேதத்தைப் பிரதிபாதித்தலில் தாற்பரிய முடையதாம்; ஆத்ம பேதத்தைப் பிரதிபாதித்தலில் தாற்பரிய முடையதன்று என்பது சித்தித்தது. அது போலவே,

(உ) முற்கூறிய புராண வசனத்தையும் தெரிந்துகொள்க.

௫. (க) பிரதிவாதி! ஆத்மா அபேதமாலல் சுக துக்க முதலியவற்றின் வியவஸ்தை சித்தியாதென்று நீ கூறியதும் பொருந்தாது. ஏனெனின், அந்தச் சுக துக்கங்களின் வியவஸ்தை பிராரப்த கர்மங்களின் அதீனமாயிருத்தலாலும், ஒரே தேகத்தில் கர்மபேதத்தால் சுகதுக்க முதலியவற்றின் * உச. விசித்திரத்

---

* உச. இங்கே இது இரகசியமாம்:—ஒருதேகத்திலோ ஆத்மா ஒன்றே ஒப்பவேண்டியதாகும். அங்ஙனமாகவே பாதத்திலுண்டாகும் வருத்தத்தைச் சரீரமுழுவதினும் அநுபவிக்கிறதில்லை; பாதத்தில் மாத்திரம் அநுபவிக்கிருன். அதுபோலச் சிரசிலுண்டாகும் சுகத்தைச் சரீரமுழுவதிலும் அநுபவிக்கிற

தன்மையைக் காணுதலாலும், சுகதுக்கங்கள் புண்ணிய பாவங்களின் காரியமா யிருத்தலால் அவற்றிற்குப் பேத மிருத்தலாலும், சிதாபாச ஞோடுகூடிய அந்தக்கரணமாகிய போக்தாவின் பேதமிருத்தலாலும், சுகம் துக்க முதலியவற் றின் வியவஸ்தை சம்பவிக்கின்றது.

(உ) பிரதிவாதி! ஆத்மா ஒன்றாகவே

---

தில்லை; சிரசில்மாத்திரம் அநுபவிக்கிறான். எப் போது ஒருதேகத்திலும் கர்மபேதத்தினல் சுக துக் கங்களினது விலக்ஷணத்தன்மையின் அநுபவமுண் டாகின்றதோ, அப்போது பின்ன பின்ன சரீரங் களில் கர்மபேதத்தால் சுக துக்கங்களினது விசித்தி ரத்தன்மையின் அநுபவமுண்டாகிற தென்பதில் என்ன சொல்லவேண்டிய திருக்கிறது? இது கைமுதிக நியாயம். இப்படிச் சொல்வதினல் சர்வ சரீரங்களிலும் எப்போது ஆத்மா ஒன்றாயிருக்கிறதோ, அப்போது ஒருசரீரத்தின் கிரியை சகல சரீரங்களி லும் உண்டாகவேண்டுமென்னும் சங்கைக்கும் சமா தானமாயிற்று. ஏனெனின், எப்போது ஒரேசரீரத் தில் சுரோத்திரம் துவக்குமுதலிய இந்திரியங்களின் கிரியை பின்னபின்ன மாகின்றதோ, ஒன்றன்கிரியை மற்றொன்றினு லாகிறதில்லையோ, இப்படிக் கிரியை யின் விலக்ஷணத்தன்மை யிருக்கின்றதோ அப் போது பின்னபின்ன சரீரங்களில் கிரியையின் வில க்ஷணத்தன்மை உண்டாகின்ற தென்பதில் என்ன சொல்லவேண்டியதிருக்கிறது?

சகல ஜனங்களும் சர்வஞ்ஞர்களாவர்; அத
னுல் விதி நிஷேதரூப சாஸ்திரங்கள் வியர்த்த
மாகும் என்று நீ கூறியதும் பொருந்தாது.
ஏனெனின்,

எங்கும் எப்போதும் ஆத்மாவே அறிகிற
தாயிருந்தாலும், அந்தந்தத் தேகத்தில் அந்
தந்தப் புத்தியைக்கொண்டுதான் அறிகிறது.
எதனுல் தேகபேதத்தினுல் புத்தியின் பேதம்
நியமிதமா யிருக்கின்றதோ, அதனுல் தேகங்
கள் தோறும் ஞானத்தின் பேதமிருக்கின்றது.

அல்லது எதனுல் வஸ்து அறியப்படுகின்ற
தோ, அப்படிப்பட்ட புத்தி விருத்தியாகிய
ஞானம் பரிச்சின்னமாம். ஆதலால் நேத்திரத்
தைப்போலத் தனது சம்பந்தமுள்ள வஸ்து
மாத்திரத்தைப் பிரகாசஞ்செய்யும் புத்திவிரு
த்திக்குச் சகல பதார்த்தங்களோடும் சம்பந்தம்
பொருந்துகிறதில்லை. அதற்கு எல்லாப் பதார்
த்தங்களோடுஞ் சம்பந்த மிருக்குமாயின் சர்வ
ஜனங்களும் சர்வஞ்ஞாகளாவர். எதனுல் புத்தி
விருத்திக்குச் சகல பதார்த்தங்களோடும் சம்
பந்தமில்லையோ, அதனுல் சகல ஜனங்களுக்
கும் சர்வஞ்ஞத்துவம் சித்திக்கிறதில்லை.

அல்லது சப்தத்தின் உற்பத்திக்கு ஏதுவா
கிய வியாபகமாகிய ஆகாசம் எதுவோ, அத

ற்கு எங்கும் பேரி மத்தளம் முதலியவற்ருேடு சையோகம் உண்டாயிருந்தாலும், எங்கே தண்ட முதலியவற்ருல் பேரி முதலியவற்றிற் குத் தாடனம் (அடித்தல்) உண்டாகிறதோ அவ்விடத்திற்ருன் சப்தத்தின் உற்பத்தியுண் டாகின்றது ; எங்கும் உண்டாகிறதில்லை. அது போலவே ஏகமாகிய பரிபூரண ஆத்மாவின் ஞானமும், எவ்விடத்தில் புத்தி விருத்திக்குப் பதார்த்தத்துடன் சம்பந்த முண்டாகின்ற தோ அவ்விடத்திற்ருன் உதயமாகின்றது ; மற்ற இடங்களில் உண்டாகிறதில்லை. ஆதலால் புத்தி விருத்திகள் அநேகமா யிருத்தலாலும் அவ்வியாபகமா யிருத்தலாலும் சகல ஜனங் களுக்கும் சர்வஞ்ஞத்துவம் சம்பவியாது என் பது சித்தித்தது.

அதனுல் அற்பஞ்ஞ ஜனங்களின் பொருட் டுப் பிரவிருத்தி நிவிருத்திசகு ஏதுவாயிருத் தலால், விதி நிஷேதரூபமாகிய சாஸ்திரங்கள் பிரயோஜன முடையனவேயாம்.

(ங) பிராணிகளுக்குச் சர்வஞ்ஞத்துவ மில் லாமையால் வேதாந்த சிரவண ஜந்நிய ஞானத் தினுல் பிரத்திய கபின்ன பரப்பிரஹ்மத்தைச்

சுவசொரூபமாக எவன் * ௨௫. அறிகிருனோ அவனுக்கே முக்தி யுண்டாகின்றது; மற்ற

*௨௫. ஈண்டு எவன் என்றது அந்தக்கரணத்தில் சேதனத்தின் பிரதிபிம்பனுகிய சிதாபாசனை. எனெனின் [க] பிரஹ்மமாகிய ஆத்மாவை நான் அறியேன்என்னும் அஞ்ஞானமும். [௨] ஆத்மா இல்லை, தோற்றவில்லை யென்னும் இருவகைஆவரணமும். [௩] ஸ்தூலசூக்ஷ்மப் பிரபஞ்சத்தோடுகூடிய சிதாபாசனும் அவன் தர்மங்களாகிய பிறப்பு முதலியன பசி முதலியன பார்த்தல் முதலியன கருத்திருத்வ முதலியன என்பவைகளும், அவற்றின் அவஸ்தையாகிய ஜாக்கிர முதலியனவும் அவற்றின் ஞானமுமாகிய இவை முதலிய சம்சாரமாகிய விக்ஷேபமும். [௪] "பிரஹ்மம் இருக்கிறது" என்னும் பரோக்ஷஞானமும். [௫] நிஷ்பிரபஞ்சமாகிய பிரஹ்மம் நான் என்னும் அபரோக்ஷஞானமும். [௬] அதிஷ்டானப்பிரஹ்மமாகிய என்னிடத்தில் பரமார்த்த சத்தையாகப் பிரபஞ்சத்திற்கு மூன்று காலத்திலும் அத்தியந்த அபாவமிருக்கிறது. வியாவகாரிக அல்லது பிராதிபாஸிக சத்தையினுல் தோற்றுகின்ற பிரபஞ்சத்திற்கு மித்தியாத்துவ மிருக்கின்றது என்னும் நிச்சயமுமாகிய விக்ஷேபநாசமும். [௭] பரமாநந்தமாகிய பிரஹ்மபாவத்தின் பிராப்தியினுல் அத்தியந்தஹர்ஷ. (சந்தோஷ) மாகிய இவ்வேழு அவஸ்தைகளும் சிதாபாசனுடையனவா மெனப்படுகின்றன. அவற்றினுள் இந்த ஞானமு மிருக்கின்றது. ஆகையால் அதுவும் சிதாபாசனுடைய அவஸ்தையாம்.

வனுக் குண்டாகிறதில்லை. அதனால் பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையும் பொருந்து கின்றது. இவ்வாற்றான் ஆத்மாவின் ஐக்கியத் தில் முற்கூறிய தோஷங்களுக்கு அவகாச மில்லை. ஆதலால் பிரஹ்ம ஆத்ம ஐக்கியமாகிய இந்தக் கிரந்தத்தின் விஷயம் எதுவோ, அது அநேக யுக்திப் பிரமாணங்களால் சித்தமாகின் றது.

## கசு. பிரயோஜன வர்ணனம் ச.

அவித்தையும் அதன்காரியமாகிய ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்சமும், அதன் தர்மமாகிய ஜனன மரண முதலிய சம்சாரமுமாகிய அவை யாவும் துக்கத்திற்கு ஏதுவா யிருத்தலால் அநர்த்தமெனப்படும்.

அவற்றின் அத்தியந்த நிவிருத்தியும் பர மாநந்தமாகிய பிரஹ்மம் எதுவோ அதன் பிராப்தியுமே இந்நூலிற்குப் பரமப்பிரயோ ஜன (பல) மாம்

உ அந்தப் பரமப்பிரயோஜனத்தின் சா க்ஷாத் சாதனமாகிய திடஞானம் எதுவோ அது இந்நூலிற்கு அவாந்தர (மத்திய)ப் பிர யோஜன மெனப்படுகின்றது.

(க) எந்தப் பலத்தினது பிராப்தியின் இச்சை புருஷனுக்கு உண்டாகின்றதோ அது பரமப்பிரயோஜனமாம்.

(உ) பரமப்பிரயோஜனத்திற்குச் சாதனமெதுவோ அது அவாந்தரப் பிரயோஜனமாம்

இங்கே இது சங்கை:—க சர்வ அநர்த்தங்களின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியுமாகிய மோக்ஷம் எதுவோ, அது ஞானத்தினால் ஜந்நியமா (உண்டாகியதா)? அல்லது அஜந்நியமா? ஜந்நியமெனின், மோக்ஷத்திற்கு அநித்தியத்துவ முண்டாகும். அஜந்நியமெனின் ஞானமின்றியே சகல புருஷர்களும் முக்தர்களாகவேண்டும். ஆகையால் சாதனத்தோடு ஞானத்தைச் சம்பாதித்தல் வியர்த்தமாம்.

சமாதானம்:—வியாவகாரிக இரஜ்ஜுவிலிருக்கும் பிராதிபாஸிக சத்தையுடைய சர்ப்பம் எதுவோ அதற்குத் தனது அதிஷ்டானமாகிய இரஜ்ஜுவில் பாரமார்த்திக சத்தையாகவாவது அல்லது வியாவகாரிக சத்தையாகவாவது மூன்று காலத்திலும் எந்த அத்தியந்தாபாவமிருக்கிறதோ, அது அந்தச் சர்ப்பத்தின் நித்தியநிவிருத்தியாம். அதுவே விஷயரூபநிவி

ருத்தி என்றும் சொல்லப்படும். முற்கூறிய நித்திய நிவிருத்தியினையுடைய பிராதிபாஸிக சர்ப்பம் எதுவோ அது நித்தியநிவிருத்தமெனப்படும். அந்த நித்திய நிவிருத்தமாகிய சர்ப்பத்திற்குத் தனது அதிஷ்டானமாகிய இரஜ்ஜுவின் அபரோக்ஷ ஞானத்திற்குப் பின் "இரஜ்ஜுவினிடத்துச் சர்ப்பத்திற்கு மூன்று காலத்திலும் அத்தியந்தாபாவம் அல்லது மித்தியாத்துவம் இருக்கின்றது" என்னும் வடிவினதாகிய முன்னமே சித்தித்துள்ள விஷயீரூப நித்திய நிவிருத்தியின் நிச்சயமாகிய எந்தப் பாதம் உண்டாகின்றதோ, அந்தப் பாதம் பரமார்த்த சத்தையாக வாவது அல்லது வியவகார சத்தையாக வாவது சர்ப்பத்தின் மூன்று காலத்திலும் இல்லாமையை விஷயஞ் செய்வதாயும் பிராதிபாஸிக சத்தையாகச் சர்ப்பத்தின் மித்தியாத்துவத்தை விஷயஞ் செய்வதாயு மிருக்கின்றது அந்த நிச்சய சொரூபமான விருத்திஞானமாகிய பாதமே நித்திய நிவிருத்தமாகிய சர்ப்பத்தின் நிவிருத்திரூபமா யிருக்கின்றது. அதுவே விஷயீரூபநிவிருத்தியென்றும் சொல்லப்படும். இவ்வாறு நித்தியநிவிருத்தமாகிய சர்ப்பத்தின் நிவிருத்தியுண்டாகின்றது. அதுபோலச் சிருஷ்டி திருஷ்டி (மூன்று சத்தையுடைய) வாதத்தின் கிரம

மாக வியாவகாரிக சத்தையுடையதும், திருஷ்டி சிருஷ்டி (இரண்டுசத்தையுடைய) வாதத்தின் கிரமமாகப் பிராதிபாஸிக சத்தையுடையதுமாகிய சர்வாநர்த்தரூபமான அஞ்ஞானமும் அதன் காரியமுமாகிய பிரபஞ்சம் எதுவோ அது பரமார்த்த சத்தையுடைய பிரஹ்மத்தில் அத்தியஸ்தமாயிருக்கிறது. ஆகையால், அதற்குத் தனது அதிஷ்டானமாகிய பிரஹ்மத்தில் சுருதி யுக்திகளாலும் வித்வான்களது அநுபவத்தினாலும் நிச்சயிக்கப்பட்ட பரமார்த்த சத்தையாக மூன்றுகாலத்திலும் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. அது அந்தப் பிரபஞ்சத்தின் நித்தியநிவிருத்தியாம். அதுவே விஷயரூபநிவிருத்தி யென்றும் சொல்லப்படும். முற்கூறிய நித்திய நிவிருத்தியினையுடைய வியாவ காரிக அல்லது பிராதிபாஸிகப் பிரபஞ்சம் எதுவோ அது நித்தியநிவிருத்தமெனப்படும். அந்த நித்தியநிவிருத்தமாகிய பிரபஞ்சத்திற்குத் தனது அதிஷ்டானமாகிய பிரஹ்மத்தின் திட அபரோக்ஷ ஞானத்திற்குப் பின் "பிரஹ்மத்தில் பிரபஞ்சத்திற்கு மூன்று காலத்திலும் அத்தியந்தாபாவம் அல்லது மித்தியாத்துவ மிருக்கின்றது" என்னும் வடிவினதாகிய முன்னமே சித்தித்துள்ள விஷயரூபமான நித்தியநிவிருத்தியின் நிச்சயமாகிய எங்

தப் பாதம் உண்டாகின்றதோ, அந்தப் பாதம் பரமார்த்த சத்தையாகப் பிரபஞ்சத்தின் மூன்று காலத்தின்மையை விஷயஞ் செய்வதாயும், வியாவகாரிக அல்லது பிராதிபாஸிக சத்தையாகப் பிரபஞ்சத்தின் மிததியாத்துவத்தை விஷயஞ் செய்வதாயு மிருக்கின்றது. அந்த நிச்சய சொரூபமான விருத்திஞானமாகிய பாதமே நித்திய நிவிருத்தப் பிரபஞ்சத்தின் நிவிருத்திரூபமாம். அதுவே விஷயீரூபநிவிருத்தியென்றும் சொல்லப்படுகிறது.

இங்கே இது விவேகமாம்:—விஷயம் விஷயீ பேதத்தால் நிவிருத்தி இரண்டுவிதமா யிருக்கின்றது. கடத்தைப்போலவாவது அல்லது ரூபத்தைப்போலவாவது பிரகாசஞ் செய்யத் தக்கதாய் முன்னமே சித்தித்துள்ள நிவிருத்தி எதுவோ அது விஷயரூபநிவிருத்தி யெனப்படும். இப்படி அதிஷ்டானத்தின் ஞானத்தினால் முன்னமே சித்தித்துள்ள பிரபஞ்சத்தின் மூன்றுகாலத் தின்மை அல்லது மித்தியாத் தன்மையிருக்கின்றது. தீபத்தைப் போலவாவது அல்லது நேத்திரத்தைப் போலவாவது முன்னமே சித்தித்துள்ள விஷயரூபமான நிவிருத்தியைப் பிரகாசஞ் செய்யும் விருத்திஞானம் எதுவோ அது விஷயீரூபநிவிருத்தி யென

ப்படும். இவ்வாறு பூர்வ சித்த நித்திய நிவிருத்தியின் நிச்சய ஞானமாகிய பாதமிருக்கின்றது. இவ்வாற்றல், அநர்த்தத்தின் விஷயரூப நிவிருத்தி யெதுவோ, அது ஞானத்திற்கு முன்னமே சித்தித் திருத்தலால் நித்தியமாம். அதனால் மோக்ஷத்தின் முதல் அம்சம் அநித்தியமா மென்னும் பிரசங்கமில்லை. விஷயீரூப நிவிருத்தியாகிய விருத்திஞானம் எதுவோ அது அதிஷ்டான ஞானத்தினல் உண்டாகியதாம். அதனல் சகல புருஷர்களுக்கும் மோக்ஷத்தின் முதல் அம்சத்தினது பிராப்தியின் பிரசங்கமில்லை

வீட்டிற் புதைக்கப்பட்டிருக்கும் நிதி நித்தியப் பிராப்தமாயிருந்தாலும், எதுவரையில் அறியப்படாததா யிருக்கின்றதோ, அதுவரையில் அடையப் படாததுபோ விருக்கின்றது. பின்னர் எப்போது ஓர் ஆப்த (உண்மையுரைக்கும்) புருஷனது உபதேசத்தால் அந்த நிதியின் ஞானம் உண்டாகின்றதோ, அப்போது அடைந்ததுபோ லாகின்றது. இவ்வாற்றல் இது நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாம். அது போலப் பரமாநந்தரூபப் பிரஹ்மம் அகம் பிரத்தியயத்திற்கு (அகம் விருத்தி அகம் சப்தங்களுக்கு) விஷயமாயிருத்தலால் எங்கும்

தோற்றுகின்றது; அதனால் சர்வாத்மாவாம் (எல்லாவற்றின் சொரூபமாம்). இதனாலேயே நித்தியப்பிராப்தமாம் என்றாலும், எதுவரை யில் அறியப்படாததா யிருக்கின்றதோ, அது வரையில் அடையப் படாததைப் போலத் தோற்றுகின்றது. பின்னர் எப்போது சாஸ் திர குரு உபதேசங்களினால் "நான் பிரஹ்மம்" என்னும் திடநிச்சயமாகிய தத்துவஞான முண் டாகிறதோ, அப்போது "பரமாநந்த வடிவ மான பிரஹ்மம் நான்" என்று பிராப்தத்தி (அடையப்பட்டத)னைப்போலத் தோற்றுகின் றது. அதனால் இது நித்தியப்பிராப்தப்பிரஹ் மத்தின் பிராப்தியாம்.

இங்கும் விஷய விஷயி பேதத்தால் பிரா ப்தி இரண்டுவகையாக விருக்கிறது:—க. முன் னமே சித்தித்துள்ளதும் சமீபத்தி லுள்ளது மாகிய அஞ்ஞாத (அறியப்படாத) வஸ்துவின் பிராப்தி எதுவோ அது விஷயரூபப்பிராப்தி யாம். அஞ்ஞான காலத்திலுள்ள முற்கூறிய நிதியின் பிராப்தியும் அஞ்ஞான தசையிலுள்ள சர்வாத்மாவாகிய பிரஹ்மத்தின் பிராப்தியும் விஷயரூபப் பிராப்தியாம். உ முன்னமே சித் தித்துள்ளவஸ்துவின் ஞானமாகிய பிராப்தி யெதுவோ அது விஷயீரூபப் பிராப்தியாம்.

முற்கூறிய நிதியின் ஞானமாகிய பிராப்தியும் பிரஹ்மத்தின் ஞானமாகிய பிராப்தியும் விஷயிரூபப் பிராப்தியாம். இதனையே நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியென்றும் கூறுவர். இவ்வாற்றால் பிரஹ்மத்தின் பிராப்தியாகிய இரண்டாவது அம்சத்திற்கும் ஞானத்தினால் உண்டாகப்படுந் தன்மை இல்லாமையின் அநித்தியத் தன்மையின் அடைவில்லை அதன்ஞானமாகிய பிராப்தி ஜந்நியமா யிருத்தலால் சகல புருஷர்களுக்கும் பிரஹ்மப் பிராப்தி யில்லாமையால் சாதனங்களுடன் ஞானம் வியர்த்தமாமென்பதுமில்லை. அன்றியும், பிரஹ்மப்பிராப்தியாகிய மோக்ஷத்தின் இரண்டாவது அம்சத்திற்கு முற்கூறிய நித்திய நிவிருத்தி பின்னமன்று. அதனால்மோக்ஷத்தில் துவைதாபத்தியு (மோக்ஷம் இரண்டாதலு) மில்லை.

இங்கு ஓர் விசேஷமிருக்கின்றது. அது விஸ்தார பயத்தால் எழுதப்படவில்லை.

அதிகாரிமுதலிய நான்கு அநுபந்தவிசேஷங்களையும் சொல்லுதலாகிய இந்நூலின்

முதல் உபதேசம் முடிந்தது.



# இரண்டாம் உபதேசம்.

## ௧௭. குரு சிஷ்ய சம்வாதப் பிரசங்க பூர்வகமான சாமானியப் பிரசிநோத்தரம்.

(வினாவிடை.)

சம்சாரமாகிய தாவாநலமென்னும் காட்டுத் தீயினால் தபிக்கப்பட்ட ஓர் புருடன் முற்கூறிய நான்கு சாதனங்களோடு கூடியவனாய் ஜலமின்றி வியாகூலப்படும் மீனைப்போலப் பவமாகிய சம்சாரத்தினின்றும் முக்தனாக விரும்புகிறான் அந்தப்புருடன் சற்குருவினிடத்துச் சரணமடைந்து, புருஷனைப் பிரேரிக்கும் (நடத்தும்) பிரமாண வடிவ சாஸ்திரமாகிய விதியை அநுசரித்து, குருவின் பாதங்களிற் றலை வணங்கி, மனதை ஏகாக்கிரம்செய்து (ஒருமைப்படுத்தி) குருவை நோக்கி மோக்ஷசாதனத்தைக் கேட்கின்றான்.

இங்கே விதியை யநுசரித்து என்னும் வாக்கியத்திற்குப் பொருள் இதுவாம்:—அதிகாரியாகிய புருடன் சந்திப்பிற்குரிய பதார்த்தங்களைக் கையிற் கொண்டு குருவினிடம் சென்

று சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, "பக வானே! எனக்கு உபதேசம் செய்வீராக" என்று உச்சரித்து, இவரே எனது புகலிட (ஆசிரய) மென்றும் நம்பிக்கையுடன் அவரிடத் தில் குருபாவம் செய்யவேண்டும். இது குரு வைச் சரணடையும் விதியாகிய சாஸ்திரம். இதனையே உபசத்தியென்றும் கூறுவர்.

## கஅ. சிஷ்யன் கேட்கின்றான்.

கிருபாநிதியாகிய குருவே! மோக்ஷம் எந் தச் சாதனத்தினாலுண்டாகும்? இதைத்தாம் கிருபைசெய்து சொல்லவேண்டும். எதனால் நான் சம்சாரமாகிய வனத்தினது அக்கினி யின் தாபத்தால் துக்கியாயிருக்கிறேனோ, அப் பிராப்தப் பிரஹ்மமாகிய வஸ்துவை யடையும் இச்சையினால் தீனனாயிருக்கின்றேனோ, அஞ் ஞானியாய்ச் சுவயமாக ஒன்று மறியாதவனா யும் மற்றுமோர் மதவாதிகளின் சங்கத்தைச் செய்யாதவனாயு மிருக்கின்றேனோ, அதனா லேயே தம்மைச் சரணடைந்தேன். ஆதலால் தாம் கிருபைசெய்து கங்காஜலத்தின் சீதலத் திற்குச் சமானமாகிய சாந்தியின் உபாயத்தைச் சொல்லவேண்டும்.

## கசு. குரு சொல்லுகின்றார்.

சிஷ்யனே! பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தினால் மோக்ஷமுண்டாகின்றது. எனெனின்.

“ஜ்ஞாநாதேவ து கைவல்யம்

ஞானத்தினாலேயே கைவல்ய (மோக்ஷ) முண்டாகின்றது”

“தேவம் ஜ்ஞாத்வா ஸர்வபாசாபஹாநி:—

தெய்வத்தை (ஆத்மாவை) அறிவதனால் சகலபாசங்களின் ஹானியு (நாசமு) முண்டாகின்றது”

“தமேவ விதித்வா(அ)திம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதே(அ)யநாய—

அந்தப் பரமாத்மாவையே யறிந்து சம்சாரமாகிய மிருத்தியுவைக் கடக்கிறான். மோக்ஷத்தை யடையும்பொருட்டு வேறு மார்க்கமில்லை” என்னும் இவை முதலிய சுருதிகளாலும்; திருசியமாயிருத்தலால் மித்தையாகிய அகங்காராதிப் பிரபஞ்சரூப பந்தத்திற்கு அதிஷ்டானத்தின் ஞானமாகிய விழிப்பினால், சொப்பனம் விழிப்பினால் நிவிர்த்தியாவதுபோல நிவிர்த்தி சம்பவிக்கின்றது; அன்றியும், ஆத்

மாவாயிருத்தலால் நித்தியப் பிராப்தமாகிய பிரஹ்மம் எதுவோ அதன்பிராப்தி ஞானத்தினுல் சம்பவிக்கின்றது என்னும் இவை முதலிய யுக்திகளினுலும் மோக்ஷம் ஞானத்தினுற் சம்பவிக்கின்றது. அந்த ஞானம் மேற் சொல்லப்படும் விசாரத்தினுலேயே யுண்டாம். ஏனெனின், யாஞ்ஞவல்கிய முனியானவர்சொல்லுகின்றுர்:—

"𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾𑌽𑌰𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑍋 𑌨𑌿𑌦𑌿
𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 ||

மைத்திரேயி! ஆத்மா நிச்சயமாகப் பார்க்கத்தக்கதாம்." எந்த எந்தச் சாதனங்களினுலெனின், "சிரவணஞ் செய்யத்தக்கதாம்; மனனஞ் செய்யத்தக்கதாம்; நிதித்தியாசனஞ் செய்யத்தக்கதாம்" என்னுமிவைமுதலிய சுருதிகளாலும்,

"𑌘𑍃𑌤𑌮𑌿𑌵 𑌪𑌯𑌸𑌿 𑌨𑌿𑌗𑍂𑌢𑌂 𑌭𑍂𑌤𑍇 𑌭𑍂𑌤𑍇 𑌚
𑌵𑌸𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | 𑌸𑌤𑌤𑌂 𑌮𑌨𑍍𑌥𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂
𑌮𑌨𑌸𑌾 𑌮𑌨𑍍𑌥𑌾𑌨𑌭𑍂𑌤𑍇𑌨 ||

பாலில் நெய்போல் பூதங்கள் தோறும் விஞ்ஞான மிருக்கின்றது. அது சுத்தமனதா

கிய மத்திஞல் விசாரமென்னும் கடைதற்கு விஷயமாகத்தக்கதாம்.” என்னும் தேவிபாகவதத்தின் வாக்கியத்திஞலும்,

“ 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌨𑍇𑌤𑌰𑌤𑍍 | 𑌅𑌵𑌿𑌚𑌾𑌰𑍋𑌽𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌕𑌃 ||

பரோக்ஷஞானத்தை அசிரத்தை பிரதிபந்திக்கின்றது; வேறில்லை; அவிசாரம் அபரோக்ஷ ஞானத்தின் பிரதிபந்தகமாம்.” என்னும் பஞ்சதசியிலுள்ள தியானதீபிகையின் வாக்கியத்திஞலும், விசாரத்திஞல் இரஜ்ஜு முதலியவற்றின் ஞானமுண்டாதல்போல விசாரத்தால் அபரோக்ஷஞான முண்டாதல் பிரசித்தமா யிருத்தலாலும், பிரஹ்மத்தின் யதார்த்த திடஅபரோக்ஷஞானமும் சிரவணுதிரூப விசாரத்தால் உண்டாகின்றது. ஆகையால் ஞான மின்றி இந்த மோக்ஷத்திற்கும், விசாரமின்றி இந்த ஞானத்திற்கும் வேறு உபாயமில்லை. ஆதலால் இப்போது ஞானவாயிலாக மோக்ஷத்திற்கு ஏதுவாயுள்ள அந்தவிசாரத்தையே நீ கேட்பாயாக.

## ௨0. விசாரசொரூப வர்ணநம்.

நான்யார்? ஜகத்து யாது? ஈசுவரன் யார்? என்னும் விசாரத்தினால் தற்காலம் ஜன்ம முதலிய சம்சாரம் நஷ்டமாகின்றது.

இம்மூன்று வஸ்துக்களின் விசாரம் எதுவோ அது உத்தமமாம். ஏனெனின்,

"अविचारकृतो बन्धो विचारेण निवर्तते । तस्माज्जीवपरात्मानौ सर्वदैव विचारयेत् ॥

அவிசாரத்தினாலாகிய பந்தம் விசாரத்தினால் நிவிர்த்தியாகின்றது. ஆதலால் ஜீவனையும் பரமாத்மாவையும் எப்போதுமே விசாரிக்கவேண்டும்" என்னும் பஞ்சதசியிலுள்ள நாடகதீபிகையின் வாக்கியத்தினாலும்,

"कोऽहं कथमिदं जातं को वा कर्तास्य विद्यते । उपादानं किमस्तीह विचारः सोऽयमीदृशः ।

நான் யார்? இப்பிரபஞ்சம் யாது? இதற்கு கர்த்தா யாவன்? இதற்கு உபாதானம் யாது? என்னும் அந்த இது இவ்வித

விசாரமாம்." என்னும் அபரோக்ஷாநுபூதி வாக்கியத்தினாலும், உபாதியாகிய ஜகத்தையும் பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் விசாரித்தல் உத்தமமாம்; அற்பசிரமத்தினால் ஞானத்திற்கு ஏதுவாயிருத்தலால்.

இங்கே "நான்" என்னுஞ் சொல்லால், "அகம் சப்தத்தின் வாச்சியார்த்தமாகிய ஜீவனும், லக்ஷியார்த்தமாகிய" கூடஸ்த" ஆத்மாவும் கொள்ளப்படுகின்றன. "ஈசுவர" சப்தத்தினால் அதற்கு (ஈசுவரத் தன்மைக்கு) அதிஷ்டானமாகிய பிரஹ்மமென்னும் "தத்" பதத்தின் லக்ஷியார்த்தமும் கொள்ளப்படுகின்றது.()

குருசிஷ்ய சம்வாதமாகிய சாமானியப்
பிரசிநோத்தரத்தைச் சொல்லுதல் என்னும்
இரண்டாம் உபதேசம் முடிந்தது.



# மூன்றும் உபதேசம்.



## ௨௧. ஆத்மா ஈசுவரன் சிருஷ்டி என் பவைற்றின் விஷயமான பிரசிநோத்தரம்.

பகவானே! சுருதியாகிய வேதத்தின்படி நான் யார்? என்பதைச் சொல்லவேண்டும். தேவதத்தன் முதலிய பெயர், பிராஹ்மணாதி வர்ணம், பிரஹ்மசாரி முதலிய ஆசிரமமென்னும் இத்தர்மங்களோடுகூடிய சரீரம் நான் என்று எனக்குத்தோற்றுகின்றது.

இங்கே "சரீரம்" என்னும் சொல்லால் மூன்றுசரீரங்களும், "பெயர்" முதலிய சப்தங்களால் மூன்று சரீரங்களின் தர்மங்களும் கொள்ளப்படும்.

## ௨௨. ஸ்ரீ குரு சொல்லுகின்றார்.

சிஷ்யனே! பெயர் வர்ணம் ஆசிரமமென்னுமிவற்றால் உபலக்ஷிக்கப்பட்ட மூன்று சரீரங்களின் தர்மங்கள், இவற்றோடு கூடிய மூன்று சரீர மென்னு மிவற்றிற்கு நீ நிச்சயமாக அதீதமா (வேறா யிருக்கின்றாய். ஆதலால் சத்து சித்து ஆநந்த வடிவமான துவம்பத லக்ஷியார்த்த ஆத்மா நான் என்று நீ நிச்சயஞ்செய்.

## உரு. சிஷ்யன் கேட்கின்றான்.

க. குருவே! ஜகத்திற்குக் கர்த்தாவாகிய ஈசுவரன் யார்? உ. இவருடைய நிஜவடிவம் யாது? இதனை (ஈசுவரனையும் அவரது நிஜவடிவத்தையும் கிரமமாக ஜகத்திற்குக் கர்த்தாவாகவும் தானாகவும்) அறிந்து என்னுடைய பிராந்தி மயமான (பிராந்திவடிவமான க்ாரியத்தோடுகூடிய) அஞ்ஞானமாகிய கூபம் நஷ்டமாகும் வண்ணம் சொல்லவேண்டும்.

சிஷ்யன் இப்படி இரண்டு பிரசினங்களைச் செய்தான்.

## உச. ஸ்ரீ குரு சொல்லுகின்றார்.

இப்போது முற்கூறிய இரண்டு பிரசினங்களுக்கும் உத்தரம் கூறுகின்றார்.

எதனைச் சமஷ்டிரூபமான ஈசுவரனது காரணசரீரமென்பரோ, எதன் அம்சபூதமான வியஷ்டி அஞ்ஞானம் ஜீவர்களது காரணசரீரமா யிருக்கின்றதோ, அந்தச் சமஷ்டி அஞ்ஞானமாகிய * உரு. மாயாசக்தியோடுகூடிய

* உரு. இங்கே இது அவச்சேதவாதத்தினபடி ஈசுவரனது லக்ஷணம் சொல்லப்பட்டது. ஆபாசவாதத்தின்படி சிதாபாசனோடு கூடிய மாயாசக்தியைக் கொள்ளவேண்டுமென்பது விசேஷம்.

சச்சிதாநந்தப் பிரஹ்மம் எதுவோ, அது ஜகத்திற்குக் கர்த்தாவாகிய ஈசுவரனும்; அந்த ஈசுவரன் எங்கும் பரிபூரணர். அவரை வந்தனஞ் செய்க.

இங்கே "பூரண" ரென்னும் ஈசுவரனது விசேஷணமெதுவோ, அது மற்றைச் சர்வஞ்ஞத்துவமுதலிய தர்மங்களின் உபலக்ஷண (சூசக)மாம். ஆதலால் அவ்வீசுவரன் பரிபூரணரும் சர்வஞ்ஞரும், சர்வசக்திமானும், சமர்த்தரும், சுவதந்திரரும், பரோக்ஷரும், நித்தியமுத்தருமாவர். அன்றியும், "பூரண" ரென்னுஞ் சொல்லால் நிரபேக்ஷ வியாபகப் பிரஹ்மமாகிய ஈசுவரனது நிஜரூபம் கூட அபிப்பிராயத்தினாற் சொல்லப்பட்டது.

இங்கே வந்தனவடிவமாகிய பக்தி யெதுவோ அது மற்றச் சிரவணம் கீர்த்தன முதலிய எட்டுவித பக்தியையும் கொள்ளுதற் பொருட்டாம். ஆதலால் ஈசுவரன் சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம் (பூஜநம்), வந்தனம், தாசபாவம், சகாபாவம் (தோழமை), ஆத்மநிவேதனம் (தேகாதிக ளெல்லாவற்றையும் சமர்ப்பித்தல்) என்னும் ஒன்பதுவிதமான பக்திக்கும் விஷயமாகத்தக்கவர்.

## சிஷ்யன் கேட்கின்றான்.

கவிஜநங்களுக்கு இராஜாவாகிய சற்குருவே! ஜீவத்தன்மைக்கு உபாதியாகிய வியஷ்டி தேகாதிகளுக்கு வேறாயுள்ள ஆத்மாவையும், ஈசுவரனது சொரூபத்தையும், நான் * உஎ. நிச்சயஞ் செய்தேன். இப்போது தாம் ஈசுவரனது தேகாதிகளைச் சொல்லுவீராக. அதனால் அவற்றிற்கு வேறாகிய என்னுடைய பிரஹ்மசொரூபம் எதுவோ அது அறியப்பட வேண்டும்.

## ஸ்ரீ குருவானவர் சொல்லுகின்றார்.

சிஷ்யனே! ஈசுவரனது தேகாதிகள் எவைகளோ அவற்றின் விசாரத்தை என்னிடத்திற் கேட்பாயாக. அவற்றின் ஞானத்தினால் ஈசுவரனது நிச்சயம் உண்டாம்.

க. ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லய மென்னும் இம்மூன்றும் ஈசுவரனது அவஸ்தைகளாம்.

---

* உஎ. சம்க்ஷேபமாக இவ்வுபதேசத்தின் உஙவது பிரசங்கம் வரையில் நிச்சயம் சொல்லப்பட்டது. விசேஷமாக மேல் ஐந்தாவது முதல் ஏழாவது உபதேசம் வரையில் அது (ஆத்மா) நிச்சயம் செய்யத்தக்கதாம்.

உ. விராட்டு, சூத்திராத்மா, அவ்வியாகிருதம் (மாயை) என்னும் இம்மூன்றும் ஈசுவரனது தேகங்களாம்.

ந. சத்துவாதி மூன்று குணங்களும் வஸ்துக்களாம் அதாவது குயவனுக்கு மண் சாமக்கிரியாதல்போல ஜகத்தினது சிருஷ்டியின் சாமக்கிரிகளாம்.

ச. குலாலனுக்குப் பூமி முதலியன இடமாதல்போல மாயை ஈசுவரனுக்கு இடமாமென்றறிக.

ரு. வைசுவானரன், இரணியகர்ப்பன், ஈசுவரன் (அந்தரியாமி), என்னும் இம்மூவரும் ஈசுவரத்தன்மைக்கு உபாதியாகிய மூன்று தேகத்திற்கும் கிரமமாக அபிமானிகளாவர்.

சு. "ஏகமாயிருக்கும் நான் அநேகரூபமாவேன்" என்னும் ஈக்ஷணை (பார்வை) முதல் ஜீவரூபமாக வியஷ்டி சரீரத்திற் பிரவேசித்தல் பரியந்தமாகிய சிருஷ்டி எதுவோ அது ஈசுவரனது காரியமாம்.

எ. சர்வஞ்ஞத்துவ முதலியன ஈசுவரனது தர்மங்களாம்.

ஆதலால் முற்கூறிய சாமக்கிரிகளோடு கூடிய மாயையும், மாயையிற் பிரதிபிம்பித்த சிதாபாசனும், அதனோடு கூடிய பிரஹ்ம சேதனமும் ஈசுவரபதத்திற்கு வாச்சியார்த்தமாம்.

இவ்வெல்லாச் சாமக்கிரி (சாதனங்)களோடு கூடிய மாயையையும் சிதாபாசனையும் மித்தியாத்துவ புத்தியினால் விட்டு, மிஞ்சிய பிரஹ்ம சேதனம் எதுவோ அது ஈசுவரபதத்தின் இலக்ஷியார்த்தமாம். இதுவே ஈசுவரனது நிஜரூபமாம். இது முன் கூட அபிப்பிராயமாகக் கேட்கப்பட்ட இரண்டாவதுவினாவிற்கும் விடையாம்.

## உரு. சிஷ்யன் கேட்கின்றான்.

ஐயனே! ஈசுவரன் எந்தச் சிருஷ்டியை (சிருஷ்டிவிஷயமாகிய ஜகத்தை) உண்டுபண்ணினாரோ, அது எந்தக் கிரமமாக வுண்டாயிற்று? எத்தனை விதமாம்? அந்தச் சிருஷ்டி (உற்பத்தி) க்கு விஷயமாகத் தோற்றுகின்ற ஜகத்து மித்தையா? அல்லது சத்தியமா? இவ்வபிப் பிராயத்தை எனக்குச் சொல்லவேண்டும். (இம்மூன்று பிரசினங்களும் சிஷ்யனாற் செய்யப்பட்டன.)

## உகூ. குருவானவர் சொல்லுகின்றார்.

இவ்வாறு முன் உச-வது பிரசங்கம் வரையில் ஈசுவரனது சொரூபத்தைக் கூறி, இப்போது அவராலாகிய சிருஷ்டியின் கிரமத்தைக் கூறுகின்றார்:—

ஜீவர்களது கர்மபல போகத்தின் பொருட்டு "ஏகமாயிருக்கும் நான் அநேகமாவேன்" என்பதாக ஈசுவரனுக்கு இச்சையுண்டாயிற்று. அப்போது ஈசுவரத்தன்மைக்கு உபாதியாகிய மாயையினிடத்துக் காரியத்திற்கு எதிர்முகமாந்தன்மையாகிய க்ஷோபமுண்டாய்க் கிரமமாகச் சர்வப்பிரபஞ்சத்தின் சமுதாயமும் உண்டாயிற்று.

அந்தப் பிரபஞ்சத்தின் உற்பத்திக் கிரமம் இதுவாம்:—அவ்வியக்தம், அக்ஷரம், அஞ்ஞானம், பிரதானம், சக்தி, முக்குணங்களின் சாம்மியாவஸ்தையாகிய பிரகிருதி யென்னும் இவை முதலிய பெயர்களாற் பிரசித்தமாயுள்ள மாயையினின்றும் *உஅ. மாயாவிசிஷ்ட (மாயையோடு கூடிய) சேதனமாகிய

---

* உஅ. இங்கு மாயை யென்னுஞ் சொல்லால் மாயையிலுள்ள சிதாபாசனும் கொள்ளப்பட்டவன்.

ஈசுவரனது இச்சையினால் சமஷ்டிபுத்தியாகிய மகதத்துவ முண்டாயிற்று. அம்மகதத்துவமானது க. இராஜசம், உ. சாத்துவிகம், ௩. தாமதமென்னும் பேதத்தால் மூன்றுவிதமான அகங்காரத்தை உண்டாக்கினது.

க. இராஜச அகங்காரத்தி னின்றும் சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சக்ஷு (கண்), சிங்குவை (நா), ஆக்கிராணம் (மூக்கு) என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்குப், பாணி, பாதம், உபஸ்தம், குதம் என்னும் ஐந்து கன்மேந்திரியங்களும் உண்டாயின. ஏனெனின், இந்திரியங்கள் விஷயத்தோடும் கிரியையோடும் பிரவர்த்தித்தலாகிய இராஜோ குண சுபாவமுடையனவா யிருத்தலால்.

உ. சாத்துவிக அகங்காரத்தினின்றும் அந்தக்கரண சப்தத்திற்கு வாச்சியமாகிய மனமும்; திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவனிகுமார ரென்னும் ஐந்து ஞானேந்திரியங்களின் தேவதைகளும்; அக்கினி, இந்திரன், வாமனன், பிரஜாபதி, இயமன் என்னும் ஐந்து கன்மேந்திரியங்களின் தேவதைகளும்; மனதின் தேவதையாகிய சந்திரனு முண்டானார்கள்.

அல்லது, மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்னும் பேதத்தால் மனமென்னுஞ் சொல் லிற்கு வாச்சியார்த்தமாகிய அந்தக்கரணம் நான்கு விதமாம். அவற்றுள் மனத்திற்குத் தேவதை சந்திரன், புத்திக்குத் தேவதை பிரஹ்மா, சித்தத்திற்குத் தேவதை வாசுதே வன், அகங்காரத்திற்குத் தேவதை உருத் திரன். இவர்கள் யாவரும் சாத்துவிக அகங் காரத்தினின்று முண்டானார்க ளென்றறிக. ஏனெனின், அந்தக்கரணமும் தேவதைகளும் பிரகாசவடிவ சாத்துவிக சுபாவ முடையனவா யிருத்தலால்.

௩. தாமத அகங்காரத்தினின்றும் சப்த முதலிய (சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்த மென்னும்)ஐந்துதன்மாத்திரைகளுமுண் டாயின. இதனையே சூக்ஷ்மபஞ்சபூதமென்றும் அபஞ்சீகிருத பஞ்சபூதமென்றும் கூறுவர்.

இதுவரையிலுமுண்டாகிய சிருஷ்டி யெது வோ, அது முழுவதையும் ஒன்றுபடுத்திச் சூத்திராத்மா வென்றும் இரணிய கர்ப்பன் என்றும் சொல்லுவர். அது ஈசுவரனது சமஷ்டி லிங்கசரீரமாம். அதிற்றானே பதி னேழு தத்துவ வடிவமாகிய ஜீவர்களது

வியஷ்டி லிங்க தேகங்களும் அடங்கியிருக்கின்றன.

உஎ. அப்பஞ்சதன்மாத்திரையாகிய சூக்ஷ்ம பூதங்களுக்குப் பஞ்சீகரண முண்டாய்ப் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களாயின.

பஞ்சீகரணமாவது :— ஆகாய முதலிய சூக்ஷ்மபூதங்களினின்றும் ஒவ்வொன்றை இரண்டிரண்டு பாகஞ்செய்ய அவைகள் பத்தாயின. அவற்றினின்றும் ஐந்து அரையரைப் பாகத்தை உள்ளபடியே நிற்கவிட்டு, மற்ற ஐந்து பாகங்களினின்றும் ஒவ்வொன்று நந்நான்காக்கப்பட்டது. அந்த நந்நான்கு பாகங்களும் நிறுத்திவைக்கப்பட்ட தத்தம் அரையரைப் பாகத்தை விட்டு, மற்றப் பூதங்களின் நான்கு அரையரைப் பாகங்களில் சேர்க்கப்பட்டன. அதனால் ஒவ்வொரு பூதமும் ஐந்தைந்து விதமாயின.

ஒவ்வொரு சேர் அளவுள்ள கோதுமை, அரிசி, பச்சைப்பயிறு, உளுந்து, கடலை, என்னும் ஐந்து வகை அன்னத்தை அரையரைப் பாகஞ் செய்யப் பத்து அரைச்சேர்களாயின. அவற்றில் ஐந்து அரைச்சேர்கள் உள்ளபடியே நிறுத்திவைக்கப் பட்டன. மற்ற ஐந்தும்

நந்நான்காக்கப்பட்டன. அந்நான்கு பாகங் களும் தத்தம் அரைச்சேரை விட்டு, மற்ற அன்னங்களின் அரைச் சேர்களிற் சேர்க்கப் பட்டன. படவே ஒவ்வொரு அன்னமும் ஐந்து ஐந்து விதமாயின. அதுபோல, ஒவ் வொரு பூதமும் முற்கூறியபடி ஐந்து ஐந்து விதமாயின.

இவ்வாறு சூக்ஷ்ம பஞ்சபூதங்களுக்கு ஈசு வரனது இச்சையால் ஒன்றற்கொன்றுண்டான கலப்பைச் சாஸ்திரங்களிற் பஞ்சீகரண மென் பர். எந்தப் பூதங்களுக்குப் பஞ்சீகரண முண் டாயிற்றோ அவற்றைப் பஞ்சீகிருதபூத மென் பர். அவற்றையே ஸ்தூலபூத மென்றும் கூறு வர்.

க. அப்பஞ்சீகிருத பஞ்சபூதங்களினின் றும் ஒன்றற்கொன்று கலத்தல் வாயிலாகப் பிரஹ்மாண்டமுண்டாயிற்று.

உ. அந்தப் பிரஹ்மாண்டத்தினுள் ஜீவர் களது வாசத்தின் பொருட்டுப் பிருதிவிக்குக் கீழுள்ள அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாலம் என்னும் ஏழும், பிருதிவிக்கு மேலுள்ள பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம்,

ஜனலோகம், தபலோகம், சத்திய (பிரஹ்ம) லோகமென்னும் ஏழுமாகிய பதினான்குஉலகங்களு முண்டாயின.

௩. அவற்றில் தேவர் மனிதர் முதலிய ஜராயுஜ சரீரங்களும், பக்ஷி முதலிய அண்டஜ சரீரங்களும், விருக்ஷ முதலிய உற்பிஜ்ஜ சரீரங்களும், பேன்முதலிய சுவேதஜ சரீரங்களுமாகிய நால்வகை யோனி ஸ்தூல சரீரமாகிய போகாயதனம் (போகத்திற்கிடம்)உண்டாயின. அந்தந்த லோகங்களில் அந்தந்தச் சரீரங்களுக்கு உபயோகமுள்ள போக சாதனமாகிய அன்ன முதலிய போக்கிய பதார்த்தங்கள் உண்டாயின.

௨அ. தைத்திரீய உபநிஷத்திலுள்ள "பிரஹ்மமாகிய ஆத்மாவினின்றும் ஆகாயமுண்டாயிற்று, ஆகாயத்தினின்றும் வாயு உண்டாயிற்று, வாயுவினின்றும் தேயுவுண்டாயிற்று. தேயுவினின்றும் ஜலமுண்டாயிற்று, ஜலத்தினின்றும் பிருதிவி யுண்டாயிற்று. பிருதிவியில் ஓஷதி (அன்னத்தின் விருக்ஷங்க)ளுண்டாயின. ஓஷதிகளினின்றும் அன்னமுண்டாயிற்று. அன்னத்தினின்றும் வீரியவாயிலாகப் புருஷன் உண்டானான்." என்னும் இவைமுத

லிய வாக்கியங்களினால் முதலில் ஆகாய முதற் கிரமமாகப் பஞ்சபூதங்களுண்டாயின.

அந்த அபஞ்சீகிருத பூதங்களினின்றும் பிராணன் முதலிய கிரமமாகச் சமஷ்டியாகிய லிங்க சரீரம் உண்டாயிற்று. பின்னர்ப் பஞ்சீகிருதமாகிய அந்தப் பூதங்களினின்றும் பிரஹ்மாண்ட முண்டாயிற்று. அந்தப் பிரஹ்மாண்டம் விராட்டு சரீரமெனப்படுகின்றது, அந்தப் பிரஹ்மாண்டத்தில் அதன் அபிமானியாகிய வைராஜபுருஷன் நிலைத்திருக்கின்றான் அது "வைசுவானரன்" என்னும் பெயராற் பிரசித்தமாம். அதுவே க்ஷீரசாகரத்திற் சயனிக்கும் ஸ்ரீ நாராயணனென்னும் பெயருள்ள அந்தரியாமியின் லீலாவிக்கிரகமாம். அதன் நாபி கமலத்தில் வைராஜபுருஷனது போக விக்கிரகமாகிய நான்கு முகமுள்ள பிரஹ்மா உண்டாயிருக்கிறார். அவரிடத்திலிருந்தும்சமயாநுசாரமாக மற்ற ஜீவர்களின் ஆவிர்ப்பாவ முண்டாகின்றது. இது பிரக்கிரியையாம்.

அதனால் முன் மகதத்துவத்தின் கிரமமாகக் கூறிய சிருஷ்டி விருத்தமாம். என்றாலும் இங்கே மகதத்துவ முதலியவற்றின் கிரமமாக ஏந்தச் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கின்றதோ,

அது ஞான சக்தியுடைய மகதத்துவத்திற்குச் சமானமாகச் சித்தத்தின் ஆவிர்பாவ பூர்வக மாக அகங்காரமுண்டாகின்றது, அந்த அகங் காரத்தின் எழுச்சியால் பஞ்சபூதம் இந்திரிய முதலியவற்றின் சொல்லுதலும் தோற்றமுமா கிய வியவகாரமுண்டாகின்றது என்னும் அநு பவத்தை யநுசரித்துச் சொல்லப்பட்டிருக்கின் றது.

விசாரதிருஷ்டியாகப் பார்க்குமிடத்திலோ வேதத்தில் ஓரிடத்திற் கிரம மில்லாமலும் ஓரி டத்தில் கிரமமாகவும், ஓரிடத்துத் தேஜசுமுத லிய மூன்று பூதங்களினின்றும், ஓரிடத்து ஆகாய முதலிய பஞ்சபூதங்களினின்றும், ஓரி டத்து மகதத்துவ முதலியவற்றினின்று கிரம மாகவும் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வெல்லாவாக்கியங்களுக்கும் ஒரு அர்த்தஞ் செய்வதில் விரோதந் தோற்றுகின்றது ஆகை யால் இவ்வெல்லா வாக்கியங்களுக்கும் எந்தெ ந்த விதத்தினாலும் முமுக்ஷுகளுக்குச் சிருஷ் டியின் ஆரோப வாயிலாக அதன் அபவாதத் தைச் செய்து ஜகத்தின் மித்தியாத்துவ நிச்சய பூர்வகமாக அத்வைத தத்துவத்தையுபதேசித் தலில் தாற்பரியமாம்.

அன்றியும், பிரபஞ்சம் சத்தியமாயிருக்கு மாயின் சகல வேதவாக்கியங்களும் அதனை ஒரே விதமாக நிரூபிக்கும்; அப்படி நிரூபிக்க வில்லை. ஆதலால் பிரபஞ்சம் மித்தையாம். இப்படிச் சர்வ வேதவாக்கியங்களுக்கும் தாற் பரியம் நிச்சயிக்கப்படுகின்றது. இவ்வர்த்தம் பிரசங்கத்தினால் நிரூபிக்கப்பட்டது.

இங்கே பஞ்சீகிருதபூதமுதல் ஸ்தூல தேக பரியந்தமான பிரபஞ்ச மெதுவோ, அது முழு வதுஞ் சேர்ந்து விராட்டு எனப்படுகின்றது, அது ஈசுவரனது சமஷ்டிவடிவ ஸ்தூல தேக மாம். இது முதல் வினாவிற்கு விடையாம்.

**உகூ.** இவ்வாறு ஈசுவரனாகிய கர்த்தாவா னவர் சிருஷ்டியை (ஜகத்தை)ச் சிருஷ்டித்தார். அந்தச் சிருஷ்டி சமஷ்டி வியஷ்டி பேதத்தால் இரண்டுவகையா மென்றறிக சமஷ்டியை ஈசு வரனது உபாதியென்றும் வியஷ்டியை ஜீவ னது உபாதியென்றும் அறிக.

வனத்தைப்போலவாவது, ஜலாசய(தடாக) த்தைப்போலவாவது, கோத்துவ (ஆத்தன்மை) முதலிய ஜாதியைப்போலவாவது, தனது முழு உடலைப்போலவாவது அநேக பதார்த் தங்களில் ஒரு புத்திக்கு விஷயமாதல் எது

வோ அது சமஷ்டி எனப்படும். ஒவ்வொரு விருக்ஷத்தைப்போலாவது, ஒவ்வொரு நீர்த் துளியைப்போலாவது, ஒவ்வொரு வியக்தியை (ஆமுதலிய வடிவத்தை)ப்போலாவது தனது தேகத்திலுள்ள கிருமி முதலியவற்றின் ஒவ் வொரு தேகத்தைப்போலாவது, அநேக புத்தி களுக்கு விஷயமாதல் எதுவோ, அது வியஷ்டி எனப்படுகின்றது.

அவற்றுள் சமஷ்டி காரண சரீரமும், சம ஷ்டி சூக்ஷ்ம சரீரமும், சமஷ்டி ஸ்தூல சரீர மும், ஈசுவரனது உபாதிகளாம். வியஷ்டி காரண தேகமும், வியஷ்டி சூக்ஷ்மதேகமும், வியஷ்டி ஸ்தூல தேகமும், ஜீவர்களது உபாதிகளாம்.

இங்கே விசேஷணமே வியாவர்த்தகத்தன் மையினால் உபாதிக்குச் சமானமாயிருத்தலால் உபாதி சப்தத்தினாற் சொல்லப்பட் டிருக்கின் றது.

தனது ஆசிரயமாகிய வஸ்துவின் சொரூ பத்தில் எதன் பிரவேசம் உண்டாகின்றதோ அப்படிப்பட்ட வியாவர்த்தக வஸ்து எதுவோ. அது விசேஷணமென்று சொல்லப்படுகின்றது,

க. அது கடத்திற்கு நீலநிறம் விசேஷண மாதல்போலவும்.

உ. கேவலம் தாரசில்நிறுக்கப்பட்ட பொன்னிற்கு அரக்கு விசேஷணமாதல்போலவும்,

ஈ. தனமில்லாத வியாபாரி புருஷனுக்குப் பங்குடைய வேறு தனமுள்ள புருஷன் விசேஷணமாதல்போலவுமாம். ஏனெனின், இம்மூன்றும் எதனுல் தனது ஆசிரயமாகிய வஸ்துவின் சொரூபத்தில் பிரவேசித்து வியாவர்த்தகமா (மற்றவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பனவா) யிருக்கின்றனவோ அதனுல் அவை விசேஷண மெனப்படுகின்றன.

(க) கடத்தின் நீலநிறமானது கடத்தின் சொரூபத்திற் கலந்து நீல கடத்தை மற்ற மஞ்சள் முதலிய கடங்களினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருக்கின்றது ; ஆகையால் விசேஷணமாம்.

(உ) அரக்கு யெதுவோ அது ஜலத்திற்கு வெளியில் நிறுக்கப்பட்டதாய்ப் பூஷணத்தின் சொரூபத்தில் பாரமாகக் கலந்தே மற்றைய நிறையின்றிய பெரிய ஆபரணங்களின்றும் அதை வேறுபிரித்தறிவிப்பதா யிருக்கின்றது. ஆதலால் அது பூஷணத்திற்கு விசேஷணமாம்.

(௩) தனமுள்ள *உகூ. பங்குடைய புருஷனும் வியாபாரத்தின் விஷயமாகிய வஸ்துவினிடத்து அபிமான வாயிலாகப் பிரவேசத்தையடைந்து, மற்றப் பங்கில்லாதவர்களினின்றும தன்னோடு பங்குடையவனுகிய தனமின்றிய புருஷனை வேறு பிரித்தறிவிப்பவனுயிருக்கிருன் ஆகையால் அவன் அவனுக்கு விசேஷணமாவன்.

தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் எதற்குப் பிரவேசமில்லையோ, அப்படிப்பட்ட வியாவர்த்தகவஸ்து உபாதியெனப்படுகின்றது,

க. அது கடம் கடாகாசத்திற்கு உபாதியாதல் போலவும்,

உ. ஜலத்தில் தராசினுல் நிறுக்கப்பட்ட ஆபரணத்திற்கு அரக்கு உபாதியாதல்போலவும்.

௩. வியாபாரி புருஷன் காரியத்தின்பொருட்டு வைத்திருக்கும் வேலைக்காரன் எவனே, அவன் அவனுக்கு உபாதியாதல்போலவுமாம்.

---

* உகூ. இங்குப் பங்குடையவன் வேலைக்காரன் என்பவர்களது திருஷ்டாந்தம் எதுவோ, அது ஸ்தூல புத்தியுடைய ஜிஞ்ஞாசுக்களின் பொருட்டுச் சொல்லப்பட்டது.

ஏனெனின், இம்மூன்றும் எதனால் தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசியாமல் வியாவர்த்தகமா யிருக்கின்றனவோ அதனால் அவை உபாதிகளாம்.

(க) கடம் எதுவோ அது கடாவச்சின்ன ஆகாச மாத்திரத்தில் கடாகாச வியவகாரத்தைக் காணுதலால் கடாகாசத்தின் சொரூபத்தில் பிரவேசத்தை யடையாது, கடாகாசத்தை மடாகாச முதலியவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பதாயிருக்கின்றது. ஆகையால் அது அதன் உபாதியாம்.

(உ) அரக்கு யெதுவோ அது ஜலத்தில் தராசினால் நிறுக்கப்பட்ட ஆபரணத்தில் பாரமாகப் பிரவேசத்தை யடையாது, அதனை மற்ற அரக்கின்றிய ஆபரணங்களினின்றும் வேறு பிரித்தறிவிப்பதா யிருக்கின்றது. ஆதலால் அது அதன் உபாதியாம்.

(ங) கிங்கரன் (வேலைக்காரன்) எவனோ அவன் அபிமான வாயிலாக அந்த வியாபாரியின் சொரூபத்திற் பிரவேசத்தை யடையாது, தனக்காசிரய மில்லாத புருஷர்களினின்றும் அவ்வாசிரயவடிவமான வியாபாரியை வேறு பிரித்தறிவிப்பவனாயிருக்கின்றான். ஆதலால் அவன் உபாதியாவன்.

விசேஷணத்திற்கு ஆசிரயமானவிசேஷண முடைய வஸ்து எதுவோ அது விசிஷ்ட மெனப்படும். உபாதிக்கு ஆசிரயமான உபாதி யுடைய வஸ்து எதுவோ அது உபகிதமெனப் படும்.

௩௦. அவிவேகியின் திருஷ்டியால் சர்வஞ் ஞத்துவ முதலிய தர்மங்களோடு கூடிய சமஷ்டி ஸ்தூல சூக்ஷ்மகாரணப் பிரபஞ் சத்திற்குச் சேதனத்தின் சொரூபத்தில் தா தாத்மிய சம்பந்தமாகிய பிரவேசம் தோற்று கின்றது. அந்தப் பிரபஞ்சம் கூடஸ்தசேத னம் ஜீவசேதன முதலியவற்றினின்றும் அந்த ஈசுவரபாவமாகத் தோற்றிய சேதனத்தை வேறுபிரித்தறிவிப்பதாயிருக்கின்றது. ஆகை யால் அந்தப் பிரபஞ்சத்திஞற் கற்பிக்கப்பட்ட தாதாத்மிய சம்பந்தமுடையதும் கிரமமாக வைசுவாநரன், இரணியகருப்பன், அந்தர்யாமி என்னும் பெயர்களாற் பிரசித்தமுள்ளதுமான பிரஹ்மமாகிய ஈசுவர சேதனம் எதுவோ, அதற்கு முற்கூறிய மூன்று விதமான சமஷ்டிப் பிரபஞ்சம் விசேஷணமாம்.

விவேகியின் திருஷ்டியால் சமஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரணப் பிரபஞ்சத்திற்குச் சேதனத் தின் சொரூபத்தில் தாதாத்மிய சம்பந்தமாகிய

பிரவேசம் தோற்றுகிறதில்லை; ஆனால் அசங்கத்துவமே தோற்றுகின்றது. அந்தப் பிரபஞ்சம் ஈசுவர சேதன ஜீவசேதன முதலியவற்றினின்றும் அந்த முற்கூறிய பிரபஞ்சமாகிய உபாதிக்கு ஆசிரயவடிவமான சேதன மாத்திரத்தை வேறு பிரித்தறிவிப்பதாயிருக்கின்றது. ஆதலால் அப்பிரபஞ்சம், முற்கூறிய பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானரூப ஈசுவரசாக்ஷியாகிய பிரஹ்மசேதனத்தின் உபாதியாம்.

௩௪ அதுபோல அவிவேகியின் திருஷ்டியினால் கர்த்திருத்துவம் போக்திருத்துவம் சுகித்துவம் துக்கித்துவம் ஜீவத்துவம் சம்சாரித்துவம் அற்பஞ்ஞத்துவ முதலிய தர்மங்களோடு கூடிய வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரணப் பிரபஞ்சத்திற்குத் தனது அதிஷ்டானசம்பந்தமாகிய கூடஸ்த சேதனத்தின் சொரூபத்தில் கற்பித தாதாத்மிய சம்பந்தமாகிய பிரவேசமே தோற்றுகின்றது. அந்தப் பிரபஞ்சம் பிரஹ்ம சேதனம் ஈசுவர சேதன முதலியவற்றினின்றும் அந்தத் தனது ஆசிரயபூதமாகிய சேதனத்தை வேறு பிரித்தறிவிப்பதா யிருக்கின்றது. ஆகையால் விசுவ தைஜஸ பிராஞ்ஞர்களென்னும் பெயர்களாற் பிரசித்தமான ஸ்தூல முதலிய வியஷ்டிப் பிரபஞ்சத்தோடு தாதாத்மிய

முடைய கூடஸ்த சேதனமென்னும் சம்ஸாரி யாகிய ஜீவன் எதுவோ, அதற்கு முற்கூறிய மூன்று விதமான வியஷ்டிப் பிரபஞ்சமும் விசேஷணமெனப்படுகின்றது

விவேகியின் திருஷ்டியினால் தர்மங்களோடு கூடிய வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரணப் பிர பஞ்சத்திற்கு அதிஷ்டான கூடஸ்த சேதனத் தில் தாதாத்மிய சம்பந்தமாகிய பிரவேசம் தோற்றுகிறதில்லை. ஆனால் அசங்கத்தன்மை யே தோற்றுகின்றது. அந்தப் பிரபஞ்சம் ஈசு வரசேதனமுதலியவற்றினின்றும் அந்த முற்கூ றிய மூன்றுவித வியஷ்டிப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமான ஜீவசாக்ஷியாகிய கூடஸ்த சேதனத்தை வேறுபிரித்தறிவிப்பதாயிருக்கி ன்றது. ஆகையால் அது அந்த ஜீவசாக்ஷிக்கு உபாதி யெனப்படுகின்றது.

**௩௨.** ஒரு பிரபஞ்சமே சேதனத்தில் ஈசு வர பாவ ஜீவ பாவங்களுக்கு விசேஷணமும், அதிஷ்டான ரூபமான பிரஹ்மபாவ சாக்ஷி பாவங்களுக்கு உபாதியுமாம்.

ஒரு நிறையே ஜலத்திற்கு வெளியில் நிறுக் குங்காலத்தில் பாரத்தின் மிகுதி காணப்படு தலாலும், பெரிய ஆபரணத்தினின்றும் அதனை வேறுபிரித் தறிவிப்பதாயிருத்தலாலும் விசே

ஷணமும், ஜலத்தில் நிறுக்குங் காலத்துப் பாரத்தின் மிகுதியின்மையாலும் மற்றவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருத்தலாலும் உபாதியுமாயிருக்கின்றது. ஆபரணத்தில் பாரத்தின் அதிகமும் குறைவுமே அதன் பிரவேசமும் அப்பிரவேசமுமாம்

அல்லது, தண்டமொன்றே நடக்குங்காலத்தில் தானும் புருஷனைப்போல நடத்தற்றொழிலையுடையதாயிருத்தலாலும் மற்றத் தண்டமில்லாத புருஷர்களினின்றும் அவனை வேறு பிரித்தறிவிப்பதா யிருத்தலாலும் தண்டி புருஷனுக்கு விசேஷணமும், போஜனகாலத்தில் புருஷனைப்போலத் தான் போஜனக்கிரியையில்லாததா யிருத்தலாலும் மற்றத் தண்டமில்லாத புருஷர்களினின்றும் அந்தத் தண்டமுடைய புருஷனை வேறு பிரித் தறிவிப்பதாயிருத்தலாலும் உபாதியுமாகின்றது. இங்கே தனது ஆசிரயத்தின் கிரியையோடு கூடியதன்மையும், கூடாததன்மையுமே கிரமமாக அதன் பிரவேசமும் அப்பிரவேசமுமாம்.

அதுபோல, ஒரு பிரபஞ்சமே அவிவேகியின் திருஷ்டியினால் பிராந்திவடிவமான பிரபஞ்சத்திற்கும் சேதனத்திற்குமுள்ள தாதாத்மிய சம்பந்தத்தினால் தோற்றுகின்ற ஈசுவர

பாவ ஜீவபாவங்களுக்கு விசேஷணமும், விவே கியின் திருஷ்டியினால் தோற்றுகின்ற அதிஷ்டானமாகிய பிரஹ்மபாவ சாக்ஷிபாவங்களுக்கு உபாதியுமாகின்றது. இது இரண்டாவது வினாவிற்கு விடையாம்.

௩௩. இப்போது "ஜகத்து மித்தையா அல்லது சத்தியமா?" என்று முற்கூறிய மூன்றாவது வினாவிற்கு விடை கூறுகின்றார்:—அந்த முற்கூறிய ஜகத்தானது சொப்பனப் பிரபஞ்சம் சுத்திரஜதம் பழுதையிற்பாம்பு என்பவற்றிற்குச் சமானமாக மித்தையா (பாதிக்கத்தக்க சொரூபமுடையதா) யிருத்தலால் சத்து சத்து விலக்ஷண அநிர்வசனீயமா மென்றறிக; ஓர்காலத்தும் சத்தியம் (மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதது) ஆகாது.

இதன் கருத்து இதுவாம்:—முன்கண்ட மித்தையாகிய அல்லது சத்தியமாகிய அத்தியாசத்திற்கு ஸஜாதீயமான வஸ்து எதுவோ, அதன் ஞானத்தினாலுண்டாகிய சம்ஸ்காரத்தோடு கூடிய புருஷனாகிய திருஷ்டாவின் திருஷ்டியினால் * ௩௦. நித்திரைத் தோஷத்தினாலாவது அல்லது யாதேனுமோர் மந்த

* ௩௦. இது சொப்பனத்திற்கு நிமித்தம.

அந்தகார * ௩௧. முதலிய * ௩௨. வேறு பிர திபந்தங்களினுலாவது * ௩௩. ஜாக்கிர பதா ர்த்தமாகிய அல்லது சுத்தியாகிய அல்லது இரஜ்ஜுவாகிய அதிஷ்டானம் * ௩௪. விசேஷ

---

* ௩௧. இங்கே முதலியவென்னும் சொல்லால் லோபம் பயமுதலிய பிரமாதாவின் (அந்தக்கரணத் தின்) தோஷமும், திமிரம் பித்தம் காமாலைமுதலிய நேத்திரரூபப் பிரமாணத்தின் தோஷமும், அத்தி யந்தத்திற்குச் (சர்ப்பத்திற்கும் ரஜதத்திற்கும்) சமான வடிவமான பிரமேய (அதிஷ்டான)த்தின் தோஷமும் கொள்ளப்படுகின்றன.

* ௩௨. இம்மூன்று தோஷங்களும் சர்ப்ப திருஷ்டாந்தத்திற்கும் இரஜத திருஷ்டாந்தத்திற்கும் நிமித்தகாரணங்களாம்.

* ௩௩. ஜாக்கிரபதார்த்தம் ஓர் வேதாந்தபக்ஷத் தினுல் சொப்பனத்திற்கு அதிஷ்டானமாம்.

* ௩௪. திருஷ்டாந்தத்தில் இவை ஜாக்கிர பதார்த்தங்கள், இது இரஜ்ஜு, இது சுத்தியென்பன அதிஷ்டானத்தின் விசேஷ வடிவமாம். எதன் அப் பிரதீதி (தோற்றமின்மை) யால் அத்தியாசமுண் டாகின்றதோ, எதன் பிரதீதியினுல் (தோற்றத்தி னுல்) அத்தியாச முண்டாகாது நிவிர்த்தியாகின்ற தோ, அது அதிஷ்டானத்தின் விசேஷரூபமெனப் படும். அதனை அத்தியாசத்தின் அதிஷ்டானமென் றும் கூறுவர் அதன் அப்பிரதீதிவடிவமே அத்தியா சத்திற்கு உபாதானகாரணமாகிய அவித்தையாம்.

ரூபமாகத் தோற்றுது * ௩௫. சாமானிய இதுவெனும் வடிவத்தால் தோற்றுவதினுல் * ௩௬. நித்திரைக்காலத்தில் சரீரத்தி னுள்ளி ருக்கும் அல்லது * ௩௭. நேத்திரமுதலியவற்

---

* ௩௫. வர்த்தமான காலத்திற்குப் புரோதேசத் தோடு (முன்னிடத்தோடு) உள்ள சம்பந்தம் இது வென்னும் பதத்திற்கு அர்த்தமாம். அது மந்தாந்த கார முதலிய ஸ்தலங்களின் "இஃது ஒன்று" என் னும் வடிவினதாம். அந்த இதுவெனுந் தன்மை திருஷ்டாந்தமாகிய இரஜ்ஜு முதலியவற்றின் சாமா னியவடிவமாம். இதன் பிரதீதியி (தோற்றமி) ன்றி எதனுல் அத்தியாச முண்டாகிற தில்லையோ, அத னுல் இது அத்தியாசத்தின் ஆதாரமாம். எதன் பிர தீதியினுல் அத்தியாசமுண்டாகிறதோ, எதன் அப் பிரதீதியினுல் அத்தியாச முண்டாகிற தில்லையோ பிராந்திகாலத்தில் "இது சர்ப்பம்" என்று ஆரோபிக் கப்பட்ட வஸ்துவுடன் எது தோற்றுகின்றதோ, பிராந்தி நீங்கிய காலத்திலும் "இது இரஜ்ஜு" வென எது தோற்றுகின்றதோ, அது அதிஷ்டானத் தின் சாமானியவடிவமாம். அதனையே அத்தியாசத் தின் ஆதாரமென்றும் கூறுவர்.

* ௩௬. இது சொப்பன திருஷ்டாந்தத்தின் பொ ருட்டுச் சொல்லப்பட்டது.

* ௩௭. இது சுத்தி ரஜ்ஜு திருஷ்டாந்தங்களின் பொருட்டுச் சொல்லப்பட்டது.

றின்வாயிலாக விருத்தி வெளியிற் சென்று சரீரத்திற்கு வெளியில் சுத்தி அல்லது இரஜ்ஜுவாகிய தேசத்திலிருக்கும் இதுவென்னும் வடிவினதாகிய அந்தக்கரண விருத்தியினால் உபகித (வளைபட்ட) சாக்ஷி சைதன்னியத்தின் ஆசிரிதமாகிய * ௩௮. மூலாவித்தையின் காரியமாகிய * ௩௯. தூலாவித்தையினது தமோகுண அம்சத்தின் பரிணாமமாகிய சொப்பனப் பிரபஞ்சமும் கற்பித ரஜதமும் கற்பித சர்ப்பமும் * ௪0. சத்தசத்துக்கு விலக்ஷணமான அநிர்வசநீயமாய் உற்பத்தியாகின்றன.

---

* ௩௮. சுத்த சேதனத்தை ஆவரணம் செய்கின்ற அவித்தையின்.

* ௩௯. கடாதி உபாதிகளால் அவச்சின்ன (வளைபட்ட) சேதனத்தை ஆவரணஞ்செய்யும் அவித்தையின்.

* ௪0. மூன்று காலத்திலும் பாதமாகத்தகாததனைச் சத்தென்பர். அதனின் விலக்ஷணமென்று சொல்லுதலாற் பாதமாகத்தக்கது கொள்ளப்படுகின்றது. மலடி மைந்தனையும் முயற் கோட்டினையும் போலச் சொரூபமின்றியதனை அசத்தென்பர். அதனின் விலக்ஷணமென்று சொல்லுதலால் சொரூபமுடையது கொள்ளப் படுகின்றது. இவ்வாற்றால் பாதயோக்கிய (பாதமாகத்தக்க) சொரூபமுடையது சத்தசத்து விலக்ஷணம் (அநிர்வசநீயம்) என்னும்

அதே நிமித்தத்தால் அதே சமயத்தில் அந்த அவித்தையினது சத்துவகுணத்தின் பரிணாமமாகிய அவற்றின் ஞானமும் சத்தசத்தின் விலக்ஷண அநிர்வசநீயமாகவே உற்பத்தியாகின்றன

கிரமமாக * சக ஜாக்கிரப் பிரபஞ்சம் * சஉ. சுத்தி * சங. ரஜ்ஜு என்பவற்றின் ஞானத்தால் விருத்திவாயிலாக * சச அவற்

---

சொல்லிற்குப் பொருளாம். இதனையே மித்தை யென்றும் சொல்லுவர். சொப்பனமுதலிய பிரபஞ்சம் எதனால் அதிஷ்டானத்தின் ஞானத்தினால் பாதமாகத்தக்கதும் ஸ்வரூபமுடையதுமா யிருக்கின்றதோ, அதனால் சத்தசத்திற்கு விலக்ஷணமாம்.

* சக. ஜாக்கிரப் பிரபஞ்சத்தால் உபகிதசேதனம்.

* சஉ. சுத்தி உபகிதசேதனம்.

* சங. ரஜ்ஜு உபகிதசேதனம்.

* சச. ஈண்டு இது அபிப்பிராயமாம்:—ஜாக்கிரப் பிரபஞ்சம் சுத்தி இரஜ்ஜு என்பவற்றால் உபகித (வரையப்பட்ட) சேதனம் விஷயசேதனமெனப் படும். அந்தக்காரணத்தினாலும் அதன் விருத்தியினாலும் உபகிதமான சேதனம் சாக்ஷியெனப்படும். இவ்விரண்டு சேதனங்கட்கும் கடாகாச மடாகாசங்களைப் போல ஸ்வரூபமாகப் பேதமில்லை. ஆனால் முற்கூறிய உபாதிகளினாலாகிய சொன்மாத்திரம் பேதமாம். எப்

ரோடு ஏகவடிவமான சாக்ஷியாகிய அதிஷ்டானத்தின் ஞானத்தால் ஒரேகாலத்தில் இரண்டும் நிவிருத்தியாகின்றன.

இவ்வாற்றால் அநிர்வசநீய (அத்தியாசவடிவ) சொப்பனப்பிரபஞ்ச முதலியவற்றின் பிரதீதியும் சொல்லுதலுமாகிய வியவகாரம் எதுவோ அது சித்தாந்தத்தில் சம்மதிக்கப்பட்ட * சரு. அநிர்வசநீயக்கியாதியெனப்படுகின்றது.

---

போது ஜாக்கிர முதலிய காலங்களில் ஜாக்கிரப் பிரபஞ்சவடிவ அல்லது சுத்தி வடிவ அல்லது இரஜ்ஜு வடிவ அந்தக்கரணத்தின் விருத்தி உண்டாகின்றதோ, அப்போது இரண்டு உபாதிகளும் ஓரிடத் திருத்தலின் பாகிய விஷயசேதனத்திற்கும் ஆந்தரசாக்ஷிசேதனத்திற்கும் அபேதம் சொல்லப்படுகின்றது. ஆதலால் ஜாக்கிரப் பிரபஞ்சத்தின் ஞானவடிவ விருத்தியினால் அதனால் உபகிதமான விஷயசைதன்யத்தின் ஆவரணம் பங்கமாகின்றது. அதுவே அதனோடு அபின்னமாகிய சாக்ஷிசேதனத்தினது ஆவரணத்தின் பங்கமாம். அதனால் சொப்பன முதலிய விஷயங்களின் நிவிருத்தியும் அவற்றினது ஞானத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றன.

* சரு. சூநியவாதி—ரஜ்ஜுதேசத்தி லேனும் புற்று முதலிய இடங்களிலேனுமுள்ள அசத்தாகிய (சொரூபமின்றிய) சர்ப்பம் எதுவோ, அதன் சொல்லுதலும் தோற்றமுமாகிய வியவகாரம் இராஜ்ஜுதேசத்தி

எங்ஙனம் முற்கூறிய திருஷ்டாந்த மிருக்கின்ற

ஓுண்டாகின்றதென்று அசத்கியாதி கொள்ளுகின்றனர். அது அசங்கதமாம் :—ஏனெனின், மலடிமைந்தனைப்போல அசத்தாகிய சர்ப்பமுதலியவற்றின் பிரதீதி அவித்தை முதலிய காரணங்களின்றிச் சம்பவியாமையால் [க] க்ஷணிகவிஞ்ஞானவாதி பௌத்தன்:- இரஜ்ஜு தேசத்திலேனும் பிறவிடங்களிலேனும் எச்சர்ப்பம் தோற்றுகின்றதோ, அது புத்திக்குப் புறம்பாக இல்லை; ஆனால் க்ஷணிகவிஞ்ஞானமய புத்தி வடிவ ஆத்மா எதுவோ அது சர்ப்பாகாரமாய்த் தோற்றுகின்றது என்று ஆத்மக்கியாதி கொள்ளுகின்றனர். அதுவும் அசங்கதமாம் :—ஏனெனின், இங்ஙனமாகவே க்ஷணத்திற்கு மேற்பட்ட காலம் வரையில் சர்ப்பம் தோற்றுதல் சம்பவியாமையின் [உ] நையாயிகர் :— புற்றுமுதலிய விடங்களிலுள்ள சர்ப்பத்தின் ஞானம் சக்ஷுவின் கண்ணுள்ள தோஷத்தின் பலத்தால் எதிரிலுள்ள ரஜ்ஜுதேசத்தில் உண்டாகின்றது என்று அந்நியதாக்கியாதி கொள்ளுகின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின், இங்ஙனமாயின் இடை இடங்களிலுள்ள விருக்ஷம் மனிதர் முதலிய வஸ்துக்களின் ஞானமும் தோஷத்தின் வலியாற் கிடைத்தலின் [ந] சாங்கியப் பிரபாகர மதங்களை அநுசரித்தவர்கள் :— இரஜ்ஜுதேசத்தில் "இது சர்ப்பம்" என ஈண்டு இரண்டு ஞானங்கள் உண்டாகின்றன. அவற்றில் "இது" என்பது இரஜ்ஜுவின் இதுவெனும் அம்சத்தின் பிரத்தியக்ஷ ஞானமாம். "சர்ப்பம் என்பது முன்கண்ட சர்ப்பத்தின் ஸ்மிருதிஞானமாம். இவ்

தோ * சகூ. அங்ஙனமே * சஎ வர்த்தமான (நிகழ்) காலத்திலும் வருங்காலத்திலும் தோற்றுகின்ற மித்தையாகிய அகங்காராதிப் பிரபஞ்சம் எவையோ, அவற்றின் முன் முன் அநுபவிக்கப்பட்டதாகிய அதன் ஸஜாதீய மித்தை

---

விரண்டு ஞானங்களின் அவிவேகவடிவ அக்கியாதியுளதெனக் கொள்ளுகின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின், புத்திதேசத்தில் சர்ப்பத்தின் ஸ்மிருதியுளதாயின், எதிரிலுள்ள ரஜ்ஜுதேசத்தில் சர்ப்பத்தைக் கண்டு திரும்பியோடுதல் சம்பவியாமையின். [ச]. அத்வைத சித்தாந்தத்தில்: இரஜ்ஜுதேசத்தில் அவித்தைமுதலிய தோஷத்தின் வலியால் அநிர்வசநீய (மித்தையான) சர்ப்பமும் அதன் ஞானமும் உற்பத்தியாகின்றன. பின்னர் அதிஷ்டானத்தின் ஞானத்தால் அவற்றின் நிவிருத்தி யுண்டாகின்றது. இவ்வாறு அநிர்வசநீயக்கியாதி அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றின் கிரமம் மேல் சுருக்கமாக எழுதப்பட்டிருக்கின்றது. இவ்வெல்லாக் கியாதிகளின் விசேஷ மண்டனமும் கண்டனமும் விருத்திரத்நாவலி விருத்திப் பிரபாகரம் விசாரசாகரம் என்னும் நூல்களில் வெளிப்படையா யிருக்கின்றன.

* சகூ. இனி இதுமுதல் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையைக் கூறுகின்றார்.

* சஎ. ஈண்டுப் பிரபஞ்சத்திற்கு வித்தும் விருக்ஷமும் போலப் பிரவாகவடிவமாக அநாதித்தன்மை சூசிப்பிக்கப்பட்டிருக்கின்றது.

யான அகங்கார முதலிய பிரபஞ்சத்தின் ஞான த்தாற் ரோன்றிய சம்ஸ்காரத்தோடுகூடிய சகல அவிவேகி ஜீவரூப திருஷ்டாவின் திருஷ்டியினுல் பூர்வகாலத்துச் சகல ஜீவர்களது * சஅ. அதிருஷ்டமும் அவிவேகமுதலிய தோ

---

* சஅ. அதிருஷ்டமென்பது பிராரப்தத்திற்காம். ஈண்டு இது இரகசியமாம்:—நிருபாதிக அஞ்ஞானஜந்நியம் சோபாதிக அஞ்ஞான ஜந்நியம் என்னும் பேதத்தால் பிராந்தி இருவகைத்தாம். விலக்ஷண (தனது சமகாலபரியந்தம் காரியத்தை நிறுத்துவதாகிய) நிமித்த காரணம் ஈண்டு உபாதியெனப்படுகின்றது. அஃதின்றிக் கேவல அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தி நிருபாதிகப்பிராந்தியாம். அது இரஜ்ஜு சர்ப்பம் சுத்திரஜதமுதலியவற்றின் பிராந்தியாம். விலக்ஷணமான நிமித்தகாரணவடிவ உபாதியோடுகூடிய அஞ்ஞானஜந்நியப் பிராந்தி **சோபாதிகப்பிராந்தியாம்.** எங்ஙனம் பிரகாச அந்தகாரங்களின் சம்பந்தவடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தாற்ரோன்றும் ஆகாயத்தினது நீலத்தன்மையின் பிராந்தி யிருக்கின்றதோ, எங்ஙனம் பிம்பத்தின் சந்நிதிவடிவ உபாதியோடுகூடிய கண்ணடியின் அஞ்ஞானத்தாற்ரோன்றிய பிரதிபிம்பத்தின் பிராந்தி இருக்கின்றதோ, அங்ஙனமே ஜீவர்களது அதிருஷ்டவடிவ உபாதியோடுகூடிய மூலாஞ்ஞானத்தால் தோன்றிய பிரபஞ்சத்தின் பிராந்தி இருக்கின்றது. அது முற்கூறிய உபாதியோடுகூடிய அஞ்ஞானத்தாற்ரோன்றியதாயிருத்தலின், **சோபாதிகப்பிராந்தியாம்.**

ஷமுமாகிய நிமித்தத்தால் "நான் சேதன வடிவமாயிருக்கின்றேன் அல்லது நித்திய முக்தனுயிருக்கின்றேன் அல்லது பரிபூரணனுயிருக்கின்றேன்" என்பதாகச் சேதன ஆநந்த நித்திய முக்தத்தன்மை முதலிய அதிஷ்டானத்தினது விசேஷ வடிவத்தின் * ௪௯. அப்பிரதீதி (அஞ்ஞானப) உண்டாகின்றது. "யான் இருக்கின்றேன் அல்லது இது இருக்கின்றது" என்பதாக அதிஷ்டானத்தின் சாமாநிய சத் வடிவத்தின் * ௫௦. பிரதீதியுண்டாகின்றது.

---

நிருபாதிகப் பிராந்தியின் பாதிதாநுவிருத்தி (பாதமாகியபின் தோற்றுதல்) உண்டாகிறதில்லை. ஏனெனின், உபாதியின்மையால் அதன் நாசமும் பாதமுமாகிய இரண்டுமிருத்தலின். சோபாதிகப் பிராந்தியின் பாதிதாநுவிருத்தி யுண்டாகின்றது. ஏனெனின், மித்தியாத்தன்மை நிச்சயவடிவபாதம் உண்டாகியும் உபாதியின் இருப்பு வரையில் ஸ்வரூபத்தின் அப்பிரதீதி வடிவ நாசமின்மையால்.

* ௪௯. இதுவே மூல அவித்தையாம்.

* ௫௦. சேதன ஆநந்தமுதலியவற்றைப் போலச் சத்தும் (பிரஹ்மசொரூபம்) ஆம். என்றாலும் நிகழாத பொருளை நிகழ்த்துவித்தலில் சாமர்த்தியமுள்ள அவித்தையின் பெருமையால் சத்தின் பிரதீதி உண்டாகின்றது. ஆதலால் உபசாரத்தால் அகண்டைகரசப் பிரஹ்மத்தில் சாமாநிய விசேஷபாவம் சொல்லப்படுகின்றது.

அதனால்(அஞ்ஞானமிருக்கின்றது விளங்குகின்றது என்று பிரஹ்மத்தினது சத்தாஸ்பூர்த்தியினால் சித்தமாகுதலால்) ஸ்வ என்னும் பிரஹ்மம் எதுவோ அதன் ஆசிரிதமாயிருத்தலின் "சுவாசிரயம்" எனப்படுவதும், "நான் பிரஹ்மத்தை அறியேன்" என்று தானாகிய பிரஹ்மத்தை ஆவரணம் செய்தலால் "ஸ்வ விஷயமும்", "நான் அஞ்ஞானி" என்று அபிமானஞ் செய்தலால் * ருக. ஜீவனது ஆசிரிதமுமாகிய இத்தன்மையது மூலாவித்தையாம். இதனை மூலப்பிரகிருதி யென்றும் மகாமாயையென்றும் கூறுவர் அதன் கண் காரியத்திற் கெதிர்முகமாதற் றன்மைவடிவ விக்ஷாபமுண்டாய், அவ் வவித்தையின் தமோகுண அம்சத்தின் பரிணாமமான சதசத்விலக்ஷண அநிர்வசநீய சமஷ்டி வியஷ்டிவடிவ ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்சம் * ருஉ. கிரமமாகவேனும்

* ருக. எங்ஙனம் பெட்டியில் வைக்கப்பட்ட தனம் "நான் தனமுடையவன்" என்று அபிமானித்தலால் புருஷனது ஆசிரிதமாகவும் சொல்லப்படுகின்றதோ, அங்ஙனமே அவித்தை ஜீவனது ஆசிரிதமுமாம். ஈண்டு "ஜீவன்" என்னும் சொல்லினால் சகல ஜீவர்களும், "அவித்தை" யென்னும் சொல்லினால் சமஷ்டி அவித்தையும் கொள்ளப்படும்.

* ருஉ. இது சிருஷ்டி திருஷ்டி வாத (வியாவகா

ரிகபக்ஷ) த்தின்படி சொல்லப்பட்டிருக்கின்றது. முன் னர்ச் சிருஷ்டி (பிரபஞ்சத்தின் உற்பத்தி) உண்டா யிருந்து பின்னர்க் காலாந்தரத்தில் திருஷ்டி அதாவது அதன்ஞானம் உண்டாகும் என்னும் வாதத்தை (சொல் லுதலை) வேதாந்த சாஸ்திரத்தில் **சிருஷ்டிதிருஷ்டி வாத** மென்பர். இதனையே **வியாவகாரிகபக்ஷ** மென் றும் கூறுவர். இதில் மூன்று சத்தைகளின் அங்கீகார முண்டு. பரமார்த்தசத்தை, வியவகாரசத்தை, பிரதி பாஸசத்தை என்னும் பேதத்தால் சத்தை மூன்று வகையினதாம். **எங்ஙனம்** அர்ச்சுனன் சந்நியாசியாய்ச் சுபத்திரையை (கிருஷ்ணனது தங்கையை)க் கைப்பற் றினான் என்னும் கதை மகாபாரதத்திற் பிரசித்தம். அதனை நடர்கள் நாடகஞ் செய்கின்றார்கள். அப்போது அதனைப் பார்க்கின்ற ஜனங்கள் அவனிடத்தில் (சந்நி யாசியாகிய நடனிடத்தில்) "இவன் அர்ச்சுனன்; கபட சந்நியாசியா யிருக்கின்றான்" என்று அர்ச்சுனத்தன்மை சந்நியாசித்தன்மைகளின் ஆரோபத்தைச் செய்கின்றார் கள். ஆண்டு நடத்தன்மை பரமார்த்த சத்தையைப் போலிருக்கின்றது; அதன் ஆரோபிக்கப்பட்ட அர்ச்சு னத்தன்மை வியாவகாரிக சத்தையைப் போலிருக்கின் றது. அதன்கண் ஆரோபிதமான சந்நியாசித்தன்மை பிராதிபாஸிக சத்தையைப்போ லிருக்கின்றது. அதன் கண் நடனைப்போலப் பரமார்த்த சத்தையோ கற்பித மின்றியதாம். அர்ச்சுனத்தன்மை சந்நியாசித்தன்மை களைப் போல வியாவகாரிக சத்தைக்கும் பிராதிபாஸிக சத்தைக்கும் கிரமமாக நீண்டகால மிருத்தற்றன்மை யும் அற்பகால மிருத்தற்றன்மையும் தோற்றுகின்றன. என்றாலும் கற்பிதத்தன்மை இரண்டிலும் சமானமாம்.

*ருந. கிரமமின்றியேயனும் உண்டாகின்றது.

ஆதலால் இரண்டு சத்தைவாதம் முக்கியமாயினும் மூன்று சத்தை வாதத்தின்படியும் அநேக ஜிஞ்ஞாசுக் களுக்குத் தத்துவபோதமுண்டாம். அதனாலும் அத்வைத சித்தாந்தத்திற்கு ஹாநியில்லை. எதற்கு மூன்று காலத்திலும் பாதமுண்டாகிறதில்லையோ, அதற்குப் பரமார்த்த சத்தையுண்டு. அத்தன்மையது சேதனமாம். எதற்குப் பிரஹ்மஞானமின்றி பாதமுண்டாகிறதில்லையோ பிரஹ்மஞானத்தினால் எதற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தாஸ்பூர்த்தி தோற்றுகிறதில்லையோ, அதற்கு வியாவகாரிகசத்தையுண்டு. இத்தன்மையன ஆகாயமுதலிய பிரபஞ்சமும் மாயையுமாம். எதற்குப் பிரஹ்மஞான மின்றியே இரஜ்ஜு முதலியவற்றின் ஞானத்தால் பாதமுண்டாகிறதோ, அதற்குப் பிரதிபாஸசத்தை யுண்டு. இத்தன்மையன இரஜ்ஜு சர்ப்ப முதலியனவாம்.

* ருந. இது திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்படி சொல்லப்பட்டது. திருஷ்டியென்பது ஞானம்; அதன் சமகாலத்தில் சிருஷ்டியை (பிரபஞ்சத்தின் உற்பத்தியை)ச் சொல்லுதல் திருஷ்டி சிருஷ்டிவாதமெனப் படுகின்றது. ஆதலால் பரமார்த்த சத்தை பிரதிபாஸ சத்தை என்னும் பேதத்தால் இரண்டு சத்தையின் அங்கீகாரமுண்டு. அவற்றில் சேதனத்திற்குப் பரமார்த்த சத்தையும் சகலப் பிரபஞ்சத்திற்கும் பிரதிபாஸசத்தையுமுண்டு. அதில் ஜாக்கிரப்பிரபஞ்சம் சம்வாதி (மணியின் பிரபையில் மணியின் பிரமத்தைப்போல ஸபலப்

அதே *ருச. நிமித்தத்கால் * ருரு. காலாந்தரத்திலேனும *ருகூ. அதேகாலத்திலேனும் மூற்கூறிய அவித்தையினது சத்துவகுணத்தின் பரிணாமமாகிய * ருஎ. அந்தக் கரணத்தின் விருத்திவடிவ அல்லது * ருஅ. அவித்தையின் விருத்திவடிவ அதன் ஞானம் உற்பத்தியாகின்றது. இத்தன்மைய பிரபஞ்சமும் அதன் ஞானமும் அவித்தையினுற் கற்பிதமாம். இதனுல் காரிய அத்தியாசம் சித்திக்கின்றது.

---

பிரவிருத்தியை யுண்டு பண்ணும்) பிரமமாம். சொப்பனப் பிரபஞ்சம் விசம்வாதி [தீபத்தின் பிரபையில் மணியின் (ரத்நத்தின்) பிரமத்தைப்போல நிஷ்பலப் பிரவிருத்தியை யுண்டுபண்ணும்] பிரமமாம். இவ்வளவு வேற்றுமையுண்டு.

* ருச. அதிருஷ்ட முதலிய நிமித்தத்தால்

* ருரு. இது மூன்று சத்தை வாதத்தின்படி சொல்லப்பட்டது.

* ருகூ. இது இரண்டு சத்தைவாதத்தின்படி சொல்லப்பட்டது.

* ருஎ. இது மூன்று சத்தைவாதத்தின்படி சொல்லப்பட்டது.

* ருஅ. இது இரண்டு சத்தைவாதத்தின்படி சொல்லப்பட்டது.

தனது பிரகாசத்தின் பொருட்டு வேறு பிரகாசத்தின் அபேக்ஷையின்றியதா யிருத்த லின், தன்னையும் பிறவற்றையும நிர்வகிக்கும் தீபத்தைப்போலவும், சாங்கியர் முதலியோர் கொண்டுள்ள * ருகூ, தன்னையும் பிறவற்றை யும் நிர்வகிக்கும் சொப்பிரகாச ஆத்மாவைப்

---

இப்பக்ஷத்தில் ஜாக்கிர சொப்பனங்களின் பதார்த் தங்களுக்குமுன் (ஐம்பத்து மூன்ருவது டிப்பணத்தில்) கூறிய விலக்ஷணத்தன்மையினும் வேறு விலக்ஷணத் தன்மை (வேற்றுமை) யில்லை. ஆனால் சகல பதார்த் தங்களும் பிராதிபாஸிகமும் சாக்ஷிபாஸியமுமாம்; பிர மாதாபாஸியமன்று. அவித்தையின் விருத்தியினாலே னும் அல்லது கேவல மனதின் விருத்தியினாலேனும் எதனைச் சாக்ஷி விளக்கு (பிரகாசிக்)கின்றதோ அது **சாக்ஷிபாஸியம், பிராதிபாஸிகம், ஜீவசிருஷ்டி** எனப்படுகின்றது. இந்திரிய வாயிலாக அந்தக்கரணத் தின் விருத்தியினால் எதனைச் சாக்ஷி பிரகாசிக் (அறி) கின்றதோ, அது **பிரமாதாபாஸியம், வியாவகாரி கம், ஈசுவரசிருஷ்டி** எனப்படுகின்றது.

* ருகூ. சாங்கியப்பிரபாகரர் மதத்திலும் சில உபாச கர்களின் மதத்திலும் தன்னையும் தன்னைச் சம்பந்தித் துள்ள தேகமுதலிய சகலவஸ்துக்களையும் ஆத்மா பிர காசஞ் செய்கின்றதாகலின் ஆத்மா சொப்பிரகாசமா மென்று கொள்ளுகின்றனர், அத்வைத சித்தாந்தத்தில் தனது பிரகாசத்தில் தன்னோடு சகலப் பிரகாசங்களின் அபேக்ஷையின்றியதாய் எல்லாவற்றையும் பிரகாசிப்

போலவும், நையாயிகர் கொண்டுள்ள தன்னை யும் பிறவற்றையும் நிர்வகிக்கும் கடபடங்க ளின் அந்நியோந்நியாபாவவடிவப் பேதத்தைப் * சூ0. பேதிப்பது தானேயாகின்ற பேதத் தினைப்போலவும் முற்கூறிய காரியாத்தியாசத் தின் காரணமாகிய மூலாவித்தை எதுவோ, அது தன்னையும் பிறவற்றையும் நிர்வாகஞ் செய்வதா யிருத்தலின், சுத்த சேதனவடிவ

---

பிப்பதா யிருத்தலின் ஆத்மா சுவப்பிரகாசமா மென்று கொண்டிருக்கின்றனர். இது பேதமாம்.

* சூ0. நையாயிகர்மதத்தில்:—எங்ஙனம் கடபடங் களைப் பேதிப்பது (பேதஞ்செய்வது) அவ்விரண்டின் பேதமோ, அங்ஙனமே அப்பேதத்திற்குக் கடமுதலிய வற்றோடுள்ள பேதமெதுவோ அந்தத் தனது பேதத் தையும் கடமுதலிய வற்றையும் பேதிப்பதும் தானாகிய ஒருபேதமேயாம் என்று கொண்டிருக்கின்றனர். ஈண் டுத்தானே கிரியையின் கர்த்தாவும் தானே கிரியையின் கர்ம (விஷய) முமாயிருத்தலின் ஆத்மாசிரயவடிவ தோஷமுண்டாகின்றது. அவ்வாத்மாசிரயம் அவர்களு க்குத் தூஷணரூபமன்று; ஆனால் பூஷணவடிவமாம். இவ்வாறே எமது சித்தாந்தத்திலும் தனது அத்தியா சத்தில் அவித்தை தானே காரணமாமெனக் கொள்ளப் பட்டிருக்கின்றது. ஈண்டும் ஆத்மாசிரயவடிவ தோஷ முளது. அதுவும் தூஷணரூபமன்று; பூஷணரூப மாம்.

அதிஷ்டானத்தில் தனது கற்பனைக்கு (அத்தியாசத்திற்கு)க் காரணம் தானேயாம்.

அந்தச் சாமாநிய சேதனம் கட்டையிலுள்ள சாமாநிய அக்கினியைப்போலும், சுழுத்தியிலுள்ள அவித்தையின் ஆசிரயமான தானாகிய சேதனத்தைப்போலும் அதற்கு (அவித்தைக்கு) * சுக. விரோதியன்று. ஆனால் சத்

---

* சுக. சாமானியசேதனம் அஞ்ஞானத்தின் ஆசிரயமும் விஷயமுமாமென்னும் வார்த்தை "யான் (பிரஹ்மத்திற்கு வேறாகிய பிரத்தியகாத்மா) அஞ்ஞானி; பிரஹ்மத்தை யறியேன்" என்னும் அநுபவத்தினாலேனும், அல்லது சுழுத்தியிலுள்ள சேதன அஞ்ஞானங்களினது அவிரோதத்தின் அநுபவத்தினாலேனும் சித்தித்துளது. ஆதலால் சொப்பிரகாச சைதன்யத்தில் அஞ்ஞானம் எங்கிருந்து உண்டாகும்? அஃதின்றி ஆவரணம் எப்படியுண்டாகும்? அஃதின்றி ஜனன முதலிய சம்சாரவடிவ விக்ஷேபம் எப்படி உண்டாகும்? அஃதின்றி அதனைப் பாதிக்கும் ஞானமும் அதன் சாதனங்களைப் போதிக்கும் சாஸ்திரமும் நிஷ்பலமாகும் என்னும் இவை முதலிய குதர்க்கக் கூட்டங்களை முற்கூறிய சுவாநுபவவடிவப் பிரபலப் பிரமாணம் விழுங்குகின்றது. இவ்வாற்றால் சாமாநியசேதனம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆனால் விருத்தியோடு கூடிய சேதனம் அல்லது சேதனத்தோடு கூடிய விருத்தி அஞ்ஞானத்திற்கு விரோதியாம். எங்ஙனம் காஷ்டத்தை (கட்டையை)க் கடைதலால் வெ

தாஸ் பூர்த்தியினால் அதற்குச் சாதகமாம்; ஆக வின் காரணாத்தியாசமும் பொருந்துகின்றது. முற்கூறிய காரியாத்தியாசம் க. அர்த்தாத்தியாசம் ௨. ஞானாத்தியாசம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

க. சர்ப்பமுதலிய விஷயங்களின் பிராந்தி எதுவோ அது அர்த்தாத்தியாச மெனப்படுகின்றது. அதுவே அந்நியோந்நியாத்தியாசமாம்.

---

ளிப்பட்டுத் திரியில் எறிய அக்கினி அந்த காரத்திற்கு விரோதியாமோ, அங்ஙனமே அதுவும் விரோதியாம். அவற்றிலும் எந்தவிஷயத்தின் ஆகாரமாக விருத்தியுண்டாகின்றதோ, அந்த விஷயத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்திற்கு அந்த விசேஷசேதனம் (விருத்தியோடுகூடிய சேதனம்) விரோதியாம்; பிறவற்றிற்கு விரோதியன்று. எங்ஙனம் கடவடிவ விருத்தியோடு கூடிய சேதனத்தினால் கடத்தின் அஞ்ஞானத்திற்கு நாசமுண்டாகின்றதோ, படத்தின் அஞ்ஞானத்திற்கு நாசமுண்டாகிறதில்லையோ, அங்ஙனமே பிரஹ்மாகார விருத்தியோடுகூடிய சேதனத்தினால் பிரஹ்மத்தினது அஞ்ஞானத்தின் நாசமுண்டாகின்றது; பிறவற்றினது அஞ்ஞானத்தின் நாசமுண்டாகிறதில்லை. இது விவேகம்.

உ. முற்கூறிய சர்ப்பமுதலிய் விஷயங்களி னது ஞானத்தின் பிராந்தி எதுவோ அது ஞானத்தியாச மெனப்படுகின்றது.

அவற்றில் பரோக்ஷம் அபரோக்ஷமென ஞானத்தியாசத்திற்கு இரண்டு பேதமுண்டு. அர்த்தாத்தியாசத்திற்கு * சுஉ. அநேகபேத முண்டு. அவை ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் ஆறுவது கலையிலும் ஸ்ரீ பஞ்சதசியினது ஏழா வது திருப்தி தீபத்தின் டிப்பணத்திலும் எழு தப்பட்டிருக்கின்றன ஆண்டுக் கண்டுகொள்க.

---

* சுஉ. கேவல சம்பந்தாத்தியாசம் (சம்சர்க்காத்தி யாசம்) சம்பந்தத்தோடுகூடிய சம்பந்தியின் அத்தியா சம் (சம்சர்க்கஸகித ஸ்வரூபாத்தியாசம். அதுவே அந் நியதராத்தியாசமாம்) என்னும் பேதத்தால் அர்த்தாத்தி யாசம் இருவகைத்தாம். அவற்றில் சம்பந்தஸகித சம் பந்தியின் அத்தியாசமும், கேவலதர்மாத்தியாசம், தர்ம ஸகிததர்மியின் அத்தியாசம் என்னும் பேதத்தால் இரு வகைத்தாம். முற்கூறிய இரண்டு அத்தியாசங்களிலும் ஆத்மாவினது தாதாத்மிய சம்பந்தத்தின் அத்தியாசம் அவசியமுண்டாகின்றது. ஆதலால் அந்நியோந்நியாத் தியாசமோ அவ்விரண்டு அத்தியாசங்களிலும் அநு சூதமா (உள்ளீடா) யிருக்கின்றது. அந்நியதராத்தி யாசமோ அந்நியோந்நியாத்தியாசத்தின் ஏகதேச (ஓர ம்ச) அதாவது சொரூபாத்தியாசவடிவமா யிருத்தலின் இதன்கண்ணேனும் அல்லது சம்பந்தியத்தியாசத்தி

ஈண்டு இது விசேஷமாம்:—

க. அஞ்ஞானம், அகங்காரம் (அந்தக்கரணம்) அதன் தர்மம், இந்திரியம் இந்திரியத்தின் தர்மம், தேகம் தேகத்தின் தர்மம் எனனும் இவை முதலிய அநாத்மாவுக்கும் அவற்றைப் பிரகாசிக்கும் * சுஙு. ஆத்மாவுக்கும் காய்ச்சிய இருப்புத் துண்டில் இரும்பிற்கும் அசுகினிக்கும் உள்ள தாதாத்ம்யம்போலத் தாதாத்மியமுண்டு. அது அத்தியாசத்தின் சுவரூபமாம்.

---

லேனும் அடங்கும். இவற்றின் உதாகரணம் ஸ்ரீ விருத்திரத்நாவலியிலும் ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் ஆருவது கலையிலும் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றது. ஆனால், அநாத்மாவில் (ஆரோபிதத்தில்) சத்திய ஆத்மாவின் (அதிஷ்டானத்தின்) கேவல சம்சர்க்காத்தியாசம் உண்டாகின்றது; சுவரூபாத்தியாசம் உண்டாகிறதில்லை. ஆத்மாவில் (ஆரோபமின்றியதில்) மித்தையாகிய அநாத்மாவின் சம்பந்தசகிதசம்பந்தியின் (சம்சர்க்கசகித ஸ்வரூபத்தின்) அத்தியாச முண்டாகின்றதென்பது நிச்சயம்.

* சுஙு. இரஜ்ஜுவின் சம்பந்தம் சர்ப்பத்தில் அத்தியஸ்தமாம். சர்ப்பத்தின் சம்பந்தசகித சொரூபம் இரஜ்ஜுவில் அத்தியஸ்தமாம். இவ்வாறு அவ்விரண்டற்கும் பரஸ்பர அத்தியாசவடிவ தாதாத்மியமுண்டு. அங்ஙனமே அகற்பித ஆத்மாவின் சம்பந்தம் அநாத்

உ. அதிஷ்டானத்தின் விசேஷவடிவ அஞ்ஞானம் அத்தியாசத்திற்கு உபாதான * கஎ. காரணமாம்.

(க) ஸஜாதீய வஸ்துவின் ஞானத்தால் உண்டாகிய சம்ஸ்காரம்,

(உ) லோபம் பய முதலிய * கரு. பிரமாதாவின் (அந்தகரணத்தின்) தோஷம்,

(ந) பித்தகாமாலை முதலிய * கக. பிரமாணத்தின் (நேத்திரமுதலிய இந்திரியங்களின்) தோஷம்,

---

மாவில் அத்தியஸ்தமாம். கற்பித அநாத்மாவின் சம்பந்தத்தோடுகூடிய சுவரூபம் ஆத்மாவில் அத்தியஸ்தமாம். இவ்வாறு ஆத்மாநாத்மாக்களுக்குக் காய்ச்சிய இரும்பினைப்போலப் பரஸ்பர அத்தியாசவடிவ தாதாத்மியமுண்டு. எங்கும் (எல்லா அத்தியாசங்களிலும்) அதிஷ்டான ஆரோபிதங்கட்கு இவ்வாறு தாதாத்மியமுண்டாகின்றதென்பது அபிப்பிராயம்.

* கச. உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணம்.

* கரு. ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசத்தில் ஜீவர்களது அதிருஷ்டவடிவப் பிரமாதாவின் தோஷமுளது.

* கக. ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசத்தில் தானே பெறப்பட்ட பிரமாணவடிவ ஆத்மாவிலுள்ள அவித்தை எதுவோ அது பிரமாணதோஷமாம்.

(௪) மூவலய வடிவத்தன்மை பளபளப்பு முதலிய சாதிருசியவடிவ * ௬௭. பிரமேய (பிரமாணத்திஞல் அறியத்தக்க அதிஷ்டான)த்தின் தோஷம்.

(௫) அதிஷ்டானத்தின் * ௬அ. இதந்தையும் * ௬௯. சத்தாமயமுமான சாமாநியவடிவ ஞானமென்னும் இவ்வைந்தும் அத்தியாசத்தின் நிமித்த காரணங்களாம்.

௩. புத்திரர் முதலியோரிடத்துள்ள ஆத்மப் பிராந்தி அத்தியாசத்தின் அவதியாம்.

௪. ஜனன மரணமுதலிய சம்சாரம் அத்தியாசத்தின் * ௭0. பலமாம். பிரத்தியகபிந்ந

---

* ௬௭. ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசத்தில் ஆத்மாவின் கண்ணுள்ள நிரபேக்ஷ ஆந்தரத்தன்மையினைப்போல அநாத்மாவிலும் சாபேக்ஷ ஆந்தரத்தன்மையுளது. ஆதலால் ஆரோப்பியத்தி (அநாத்மாவி)ஞேடு அதிஷ்டானத்திற்குச் சாதிருசியமுண்டு. அது பிரமேய தோஷமாம்.

* ௬அ. இது இரஜ்ஜு முதலிய திருஷ்டாந்தத்தின் பொருட்டுச் சொல்லப்பட்டது.

* ௬௯. இது பிரஹ்மவடிவ தார்ஷ்டாந்தத்தின் பொருட்டுச் சொல்லப்பட்டது.

* ௭0. இரஜ்ஜு சர்ப்பமுதலிய அத்தியாசத்திற்குப் பயம் நடுக்க முதலியன பயனும்.

அந்தராத்மாவினும் வேறாகாதப் பிரஹ்மவடிவ அதிஷ்டானத்தின் ஞானத்தால் காரணத்தோடு கூடிய பிரபஞ்சமு அதன் ஞானமுமாகிய இவற்றின் * எக மித்தியாத்தன்மை நிச்சயம். அல்லது * எஉ முக்காலத்தின்மை நிச்சய மென்னும் நிவிருத்தி (பாதம்) உண்டாகின்றது.

எங்ஙனம்: பத்துப் புருஷர்களுக்கு இரஜ்ஜுவடிவ அதிஷ்டானத்தின் அவித்தையினால் தண்டம் சர்ப்பம் மாலை மரவேர் ஜலதாரை பூமியின் பிளப்பு என்றல் முதலிய விலக்ஷணப் பிராந்தி யுண்டாகின்றது; அல்லது எல்லாருக்கும் ஒரேசர்ப்பத்தின் பிராந்தியுண்டாகின்றது. ஆனால் எவனுக்கு ரஜ்ஜுவடிவ அதிஷ்டானத்தின் ஞான முண்டாகின்றதோ, அவனது திருஷ்டியினால் தனது சாக்ஷி ஆசிரிதமான அவித்தையம்சத்தின் திரஸ்காரத்தினாலேனும் நாசத்தினாலேனும் பிராந்தியின் நிவிருத்தி உண்டாகின்றது. அதிஷ்டானத்தின் ஞானமின்றிய அந்நிய புருஷர்களின் திருஷ்டியினால்

---

* எக. இது வியவகார சத்தையினால் அல்லது பிரதிபாஸ சத்தையினால் பாதத்தின் லக்ஷணமாம்.

* எஉ. இது பாமார்த்த சத்தையாகப் பாதத்தின் லக்ஷணமாம்.

அவித்தையோடு கூடிய பிராந்தி எப்படியோ அப்படியே (உள்ளவாறு) நிலை பெறுகின்றது.

அங்ஙனமே சகல புருஷர்களுக்கும் அதிஷ்டானப் பிரஹ்மத்தின் அவித்தையினால் தேவர் மனிதர் முதலிய பேதத்தால் பரஸ்பரம் * எங. விலக்ஷணமாகவேனும், அல்லது * எச. சமானமாகவேனும், அத்தியஸ்தமாகப் பிரபஞ்சமும் அதன் ஞானமும் உண்டாகின்றன. ஆனால் எவனுக்குப் பிரத்தியகபின்ந பிரஹ்ம வடிவ அதிஷ்டானத்தின் அபரோக்ஷஞானமுண்டாகின்றதோ, அவனது திருஷ்டியினால் காரணசகிதப் பிரபஞ்சம் அதன்ஞானம் என்பவற்றின் நிவிருத்தியுண்டாகின்றது. அதிஷ்டானத்தின் ஞானமின்றிய அந்நிய புருஷர்களது திருஷ்டியினால் காரணத்தோடுகூடிய பிரபஞ்சமும் அதன் ஞானமும் இருந்தபடியே * எரு. அநாதிவடிவமாக நிலைத்திருக்கின்றன. இது மூன்றாவது வினாவின் விடை.

---

* எங. இது ஜீவர்கள்தோறும் சிருஷ்டியின் பேதத்தை அங்கீகரிப்பவராகிய வாசஸ்பதிமிசிரர் முதலியோர் மதத்தாற் கூறப்பட்டது.

எச. இது சாஸ்திரப்பிரசித்த சர்வசாதாரண மதத்தாற் கூறப்பட்டது.

* எரு. எங்ஙனம் நித்திரைக்காலத்தில் சொப்ப

௩௪. சிஷ்யன் கேட்கின்றான்:—பகவானே! எங்ஙனம் பயங்கரமான சொப்பனம் தோற்றுகின்றதோ, அது மித்தையாயினும் பாதப்பிரக்ஷாளனம் (கால் கழுவுதல்) கஜேந்திர மோக்ஷ படன முதலிய உபாயங்களால் அதன் நிவிருத்தி யுண்டாகின்றதோ, உபாயமின்றி நீங்குகிறதில்லையோ,

அங்ஙனமே இத்தோற்றுகின்ற ஜகத்து அத்தியாசரூபமா யிருத்தலால் மித்தையாமாயினும் உபாயமின்றி அதுகெடுகிறதில்லை. ஆனால் ஞானம் அல்லது பக்தி அல்லது கர்மம் என்னும் யாதேனும் ஓர் உபாயத்தாற்றான் கெடும். ஆதலால் இதன் நிவிருத்தியின் உபாயத்தை எனக்குக் கிருபைசெய்து சொல்லவேண்டும். யான் தமது தாட்களில் வணங்குகின்றேன்.

---

னத்தின் அநாதித்தன்மை தோற்றி ஜாக்கிரகாலத்தில் அதற்குப் பாதமுண்டாகின்றதோ, அங்ஙனமே அஞ்ஞானதசையில் காரணத்தோடுகூடிய பிரபஞ்சத்தின் அநாதித்தன்மை தோற்றி ஞானவடிவ ஜாக்கிரகாலத்தில் அதற்குப் பாதமுண்டாகின்றது. அநாதிவடிவ கடமுதலிய காரியங்களினது பிராகபாவத்தின் நாசத்தைப்போலும் மலைக்குகையின் கண்ணுள்ள அநாதி அந்தகாரத்தின் நாசத்தைப்போலும் அநாதிவஸ்துவின் நாசமும் அநுபவசித்தமாம்.

## ௯௫. நிவிருத்திலக்ஷணம்.

இப்பொழுது ஸ்ரீ குருவானவர் ஜகத்தினது அத்தியந்த நிவிருத்தியின் உபாயத்தைச் சொல்லுதற்கு முதலில் நிவிருத்தியின் பேதத்தைக் கூறுகின்றார் :—

நிவிருத்தி இருவகைத்தாம் :—

௧. ஒன்று காரணத்தில் காரியத்தின் லயவடிவ நிவிருத்தியாம். அது சுழுத்தி மூர்ச்சை மரணம் பிரளயம் என்னும் அவஸ்தைகளில் ஜகத்துத் தனது காரணமாகிய அஞ்ஞானத்தில் லயமாதலும், உடைகின்ற அவஸ்தையில் கடம் மண்வடிவமாக மிஞ்சுதலால் மண்ணில் லயமாதலுமாம்

௨. மற்றையது காரணத்தோடு காரியத்தின் லயவடிவ நிவிருத்தியாம். அது மோக்ஷதசையில் அஞ்ஞானவடிவ காரணத்தோடு ஜகம் லயமாதலும், தக்தபடம் (எரிக்கப்பட்டவஸ்திரம்) தனது காரணமாகிய தந்துவோடு (நூலோடு) லயமாதலுமாம்

இவ்வாறு இருவகை நிவிருத்தி சொல்லப்பட்டது அவற்றில்,

(௧) காரணத்தில் காரியத்தின் லயவடிவ முதல் நிவிருத்தி யாதோ அது அசாரமாம். அதா

வது மோக்ஷத்தில் உபயோகமில்லாததாயிருத்தலின் சிரேஷ்டமின்றியதாம்.

(உ) காரணத்தோடு காரியத்தின் லயவடிவ இரண்டாவது நிவிருத்தி யாதோ அதுவே சாரமாம். அதாவது மோக்ஷத்தில் உபயோகமுள்ளதா யிருத்தலின் சிரேஷ்டமாம்.

ஆதலால் ஜகத்தின் அத்தன்மைய இரண்டாவது நிவிருத்தியே முமுக்ஷுவுக்கு ஞானத்தினால் சம்பாதிக்கத்தக்கதாம்

## ௩௯. ஜகத்தின் நிவிருத்தி உபாய வர்ணனம்.

ஜகத்திற்குக் காரணம் அஞ்ஞானம். அதன் காரியம் ஜடமாகிய ஜகத்து என்றறிக. ஈண்டு ஜடமென்னும் சொல் சேதனவடிவ சிதாபாசனையும் சூசிப்பிப்பதாயிருத்தலின், ஜடசேதனவடிவ சராசரஜகத்து அஞ்ஞானத்தின் காரியமாம். அவ்விரண்டின், முற்கூறிய அத்தியந்த நிவிருத்தி ஞானத்தினால் உண்டாகின்றது. இதன் நிவிருத்தியின் பொருட்டு வேறு உபாயமில்லை; ஏனெனின், "ஞானமின்றி முக்தியுண்டாகிறதில்லை" "அதனையேயறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான்; மோக்ஷத்திற்செல்லுதற் பொருட்டு வேறு மார்க்கமில்லை" என்

றல் முதலிய அநேக சுருதிகளிருத்தலால். இந்தச் சுருதிகளை அர்த்தத்தோடு முன் (இரண்டாவது உபதேசத்தில்) சொல்லிவந்தோமாயினும், முமுக்ஷுவின் திடத்தன்மையின் பொருட்டு மீண்டும் அவற்றை இங்கு நினைப்பூட்டினோமாகலின் அது புநருத்தியா (கூறியது கூறலா) காது.

## கூஎ. ஞானத்தின் விஷயத்தை (பிரஹ்மாத்மாவின் ஐக்கியத்தை)க் கூறுதல்.

இப்போது ஸ்ரீ குருவானவர் ஞானத்தின் சொரூபத்தைச் சொல்லுதற்கு முதலில் ஞானத்தின் விஷயமாகிய பிரஹ்மாத்மாவின் ஐக்கியத்தைக் கூறுகின்றார் :—

க. ஸ்தூலதேகமும் அதன் ஸ்தூலத்தன்மை (பருமை), கிருசத்தன்மை (மெலிவு), கௌரத்தன்மை (திண்மை), கருமை, வர்ணம் (ஜாதி), ஆசிரமம் (நிலை) முதலிய தர்மங்களும், அதன் (தேகத்தின்) ஜாக்கிரம் பால்ய முதலிய அவஸ்தைகளும், ஆகிய இவை முதலியனவாக மற்றைய இந்திரியம் பிராணன் மனம் புத்தி அஞ்ஞானம் அவற்றின் தர்மம் அவஸ்தை என்பனவும் வியஷ்டிப் பிரபஞ்சமாம்.

உ. விராட்டு முதலிய சரீரமும், சர்வஞ்ஞத் தன்மை சிருஷ்டியை யுண்டுபண்ணுந் தன்மை முதலிய அவற்றின் தர்மங்களும், உற்பத்தி முதலியஅவற்றின்அவஸ்தைகளுமாகிய இவை முதலியன சமஷ்டிப் பிரபஞ்சமாம்.

இந்தத் தேகாதிப் பிரபஞ்சத்தின் வேறாகிய (பிரபஞ்சத்தின விவேக திருஷ்டியினால் பின்னமான) அகம் பிரத்தியயத்திற்கு (யான் என்னும் சொல்லிற்கும் யான் என்னும் விருத்திக்கும்) விஷயமான ஆத்மசொரூபம் எதுவோ. அது சங்கம் (சையோக முதலிய வடிவ அல்லது ஸஜாதீய விஜாதீய சுவகதவடிவ சம்பந்தம்), விகாரம் [ஜந்மம், முன் இல்லை பின் உளது என்னும் அஸ்தித்துவம், விருத்தி (வளர்ச்சி), விபரிணமம் (திரிபு), அபக்ஷயம் (குறைவு), நாசம் என்னும் ஆறு அல்லது சலனவடிவக் கிரியை] என்னும் இவை முதலியனவாக மற்றுமுள்ள அநேக சம்சார தர்மங்களின்றியதாம்.

ஸ்தாலீபுலாகம் (ஓர் அரிசிவேதலால் எல்லா அரிசிகளும் வேகுதல்) என்னும் நியாய (திருஷ்டாந்த)த்தால், அல்லது ஒரு வீட்டில் ஆகாயம் சித்திக்கவே எல்லா வீட்டிலேனும் அல்லது பிரஹ்மாண்டத்திலேனும் ஆகாயம் சித்திப்

பதுபோல. எங்ஙனம், ஒரு சரீரத்தில் சச்சிதா நந்த வடிவ ஆத்மா "யான் இருக்கின்றேன்; யான் விளங்குகின்றேன்; யான் என்றும் பிரிய னாயிருக்கின்றேன்" என்னும் அநுபவத்தினால் சித்திக்கின்றதோ, அங்ஙனமே அந்நிய சரீரங் களிலும் ஆகாய முதலிய பிரபஞ்சத்திலும் சித் திக்கின்றது. ஆதலால் அது பூரணமாம் (எங் கும் வியாபகமாம்). இதனானே அது பிரஹ்ம வடிவமாம்.

இவ்வாற்றால் ஈண்டு மகாவாக்கியத்தின் அர்த்த வடிவமும் ஞானத்தின் விஷயவடிவமு மாகிய பிரஹ்மாத்மாவின் ஐக்கியம் சொல்லப் பட்டது.

ஆத்மா ஈசுவரன் சிருஷ்டி என்பவற்றின் விஷயமான
பிரசினோத்தர வர்ணன மென்னும்
மூன்றாவது உபதேசம் முடிந்தது.

---

# நான்காம் உபதேசம்.



## பிரஹ்மாத்ம ஐக்கிய சாமாநிய நிரூபணம்.

௩அ. சிஷ்யன் கேட்கின்றான்:—ஐயனே! கர்த்தா போக்தா வென்னும் சம்சாரி ஜீவனா கிய யான், எல்வாறு பிரஹ்மவடிவ மாவேன். என்னும் இத்தன்மைய சம்சயம் என்னுடைய இருதயத்தில் இருப்பாணியைப் போலத், துன் பத்தைச் செய்வதா யிருத்தலின் ஆணியா யிருக்கின்றது. அச் சம்சயத்தினையே அன் போடு தாம் நாசஞ்செய் தருளல் வேண்டும்.

௩௯. இப்போது பிரஹ்மத்தில் ஜீவத் தன்மையின் சம்பவத்தைக் குருவானவர் கூறுகின்றார்:—

மகாகாசத்தைப்போலப் பரிபூரணமாயுள் ள பிரஹ்மம் அசங்கமாயினும், கற்பித தேக வடிவ கடத்திலுள்ள மாயை (அவித்தை) வடிவ கடஜலத்தின் சங்கத்தால் (கற்பித சம்பந்தத் தால்) சரீரமிரண்டின் அபிமானத்தைச் செய்து பரிச்சின்னமாகிய ஜீவரூபமாய்த் தோற்றியி ருக்கின்றது.

வேறு திருஷ்டாந்தம்:— நிர்விகார குந்தியின் புத்திரனாகிய கர்ணனிடத்தில் ராதையென்னும் தாசியினது சம்பந்தத்தால் ராதாபுத்திரனது (தாசத்தன்மையின்) தோற்றவடிவப்பிராந்தி யுண்டாயிற்று, பின்னர்ச் சூரியனது வாக்கியத்தால் அவனுக்கு ராதையின் புத்திரத்தன்மைப் பிராந்தி நிவிருத்தியாய் உள்ளவாறே குந்தியின் புத்திரத்தன்மைத் தோற்றவடிவ தெளிவாகிய ஞான முண்டாயிற்று. அங்ஙனமே நிர்விகார சிதாநந்தகனப் பிரஹ்மத்தில் அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவத்தன்மையின் தோற்றவடிவப் பிராந்தி யுண்டாயிருக்கின்றது, பின்னர்க் குருவடிவ சூரியனது வசனத்தால் அந்த ஜீவத்தன்மையின் பிராந்தி நீங்கி உள்ளவாறே பிரஹ்மத் தன்மையின் பிரதீதியாகிய செவ்வையான ஞானமுண்டாகின்றது.

## ௪௰. ஜீவஸ்வரூபவர்ணனம்.

கடத்தில் நிரம்பிய ஜலத்திலுள்ள மகாகாசத்தின் பிரதிபிம்பம் போலப் புத்தியில் அல்லது அதன்காரணமாகிய அவித்தையிலுள்ள பிரஹ்மத்தின் ஆபாசம் எதுவோ, அது அவிவேக திருஷ்டியினால் தனது அதிஷ்டானமா

கிய கூடஸ்த சேதனத்தோடு கூடியதாய் (கூடஸ்தசேதனத்தோடுதாதாத்மியமுடையதாய்)த் தோற்றுகின்றது. அதனை ஜீவனென்பர்.

சுக. ஸ்தூலதேகவடிவ கடத்தில் புத்திவடிவ அல்லது அவித்தைவடிவ ஜலம் நிரம்பியிருக்கின்றது. அதிலுள்ள பிரஹ்மத்தின் ஆபாசத்தினை மித்தையென் றறிந்து விடுதலால் எஞ்சி நிற்பதாகிய அவற்றின் அதிஷ்டானமான சித்வடிவ கூடஸ்த சேதனம் எதுவோ அது மகாகாசத்தைப் போலப் பிரஹ்மமாம் (பரிபூரண சேதன வடிவமாப). அதுவே தானே தானாகிய சுவரூபமாம் அதாவது கடஜலத்திலுள்ள ஆகாயத்தினது பிரதிபிம்பத்தின் நிஜவடிவ மகாகாசத்தைப்போல சிதாபாசவடிவ ஜீவனது நிஜரூபமாம்.

எங்ஙனம் ஐந்திரஜாலிக புருஷன் மாயையினாலாகிய சரீரத்தைத் தரித்தவனாய் மாயிக (மாயையினாலாகிய) யானைமேல் உட்கார்ந்து அசைவில்லாதவ னாயினும் அசைகின்றவனாய்க் காண்கின்றானோ, அங்ஙனமே பிராணனிலும் (பிராணன்முதலியவற்றோடு கூடிய ஜாக்கிரத்திலும்) சொப்பனத்திலும் பிரவேசித்ததாய் (சம்பந்தவாயிலாக அத்தியஸ்தமாய்) அசல (அகர்த்தா) வடிவமாகியும் ஆத்மா சலிக்கின்

றது (கிரியையின் கர்த்தாவும் இதனாலே போக்தாவுமாகக் காணப்படுகின்றது).

வீட்டின்கண்ணுள்ள அர்க்காபாசம் (சூரியச்சாயை) கையின் கிரியையினால் அசைவில்லாததாயிருந்தும் அசைவதாகக் காணப்படுகின்றது. அதுபோலத் தேக உபாதியினால் அசலமாகிய ஆத்மா சலிப்பதாகக் காணப்படுகின்றது. அபிப்பிராயம் இதுவாம்:—ஆத்மா அகர்த்தாவாம்; ஆதலால் அபோக்தாவாம். இதனாலே அதனது பிரஹ்மத்தன்மையின் ஞானம் சம்பவிக்கின்றது.

## சஉ. ஞானஸ்வரூபவர்ணனம்.

மூன்று தேகங்களுள. அவற்றிற்கு மூன்று அவஸ்தைகளுண்டு. அம் மூன்று தேகங்களுள்ளும் பஞ்சகோசங்களுள. நான் இவற்றிற்குச் சாக்ஷி. ஆதலால் இந்தச் சாக்ஷிய (சாக்ஷியினால் அறியப்படுவது) வடிவ சங்காதம் நான் அல்லன். ஆனால் சாக்ஷிவடிவப் பிரத்தியகாத்மாவாகிய நான் இவற்றின் வேறாயிருக்கின்றேன்.

இவ்வாறு நிஜஸ்வரூபத்தை யறிந்து பின்னர் அதனைப் பிரஹ்மத்திற்கு அபின்னமாக

அறியின் அந்தப் பிரஹ்மத்திற் கபிந்நமான ஆத்மாவே எப்போதும் சச்சிதாநந்த வடிவமாம்.

அன்றியும் பிரபஞ்சம் சத்திய மாகவே துவைதம் சித்தித்தலால் அத்வைத சுருதியினுல் சொல்லப்படும் பிரஹ்மாத்ம ஐக்கியம் பொருந்தாது. ஆதலால் ஈண்டுப் பிரஹ்மாத்மாவின் ஐக்கியத்தைக் கூறுதலால் அந்தப் பிரஹ்மாபின்ன ஆத்மாவிற்குப் பிந்நமான காரிய காரணவடிவப் பிரபஞ்சம் எதுவோ, அது கண்ணுடியிலுள்ள நகரத்தின் பிரதிபிம்பத்தைப் போலவும் சொப்பனத்தைப் போலவும் அத்தியஸ்தமா யிருத்தலின் மித்தையாமென்பது அர்த்தத்தினுல் சித்திக்கின்றது.

இத்தன்மைய நிச்சயம் (சம்சய விபரீதங்களின்றி யறிதல்) எதுவோ அது ஞானமெனப்படும். அந்த ஞானமே பிரபஞ்சவடிவ அநர்த்தத்தின் நிவிர்த்தி வடிவமும் பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் பிராப்தி ஸ்வரூபமுமாகிய மோக்ஷத்திற்கு எதுவாம் (சாக்ஷாத்) சாதனமாம்.

பிரஹ்மாத்ம ஐக்கிய சாமாநியநிரூபணமென்னும்

நான்காம் உபதேசம் முடிந்தது.

---

# ஐந்தாம் உபதேசம்.

## * எகூ. தேகத்திரய ஆத்மவிவேசன வர்ணனம்.

### சக. சிஷ்யன் கேட்கின்றான்.

"யதா முஞ்ஜாதிஷீகைவ
தாத்ருயுக்த்யா ஸமுத்த்ருதஃ |
ஶரீரத்ரிதயாத் தீரைஃ
பரமாத்மா விவிச்யதே ||

" எங்ஙனம் முஞ்சியென்னும் இலைமூடிய சலாகைவடிவப் புல் விசேஷத்தி னின்றும் இஷீகை (நடுத்தண்டு) எடுக்கப் படுகின்றதோ அங்ஙனமே தீரபுருஷர்களால் யுக்தியினால் மூன்றுசரீரங்களினின்றும் செவ்வையாய் எடுக்

---

* எகூ. முன் மூன்றாவது உபதேசத்தில் திசைமாத்திரைத்தினைக் காட்டுவது போலச் சுருக்கமாய்த் தேகாதிகளினின்றும் வேறுபிரிக்கப்பட்ட ஆத்மா எதுவோ, அது இப்போது இங்கிருந்து (ஐந்தாவது உபதேசத்திலிருந்து) ஏழாவது உபதேசபரியந்தம் விசேஷமாக வேறு பிரிக்கப் படுகின்றது. ஆதலால் ஈண்டுப் புநருக்திவடிவ தோஷத்தின் பிராப்தியில்லை.

கப்பட்ட ஆத்மா பரப்பிரஹ்மவடிவ மாகின்றது" என்னும் சாஸ்திரத்தில் (பஞ்சதசியில்) கூறிய அர்த்தத்தை யறிதற் பொருட்டுச் சிஷ்யன் கேட்கின்றான்:—

க. குரவர்களிற் சிறந்தவரும் சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமாகிய குருராஜரே! தாங்கள் கூறிய மூன்றுதேகங்கள் எவை? இது தேகத்தினது பெயரின் வினாவாம்.

உ. இந்தமூன்றுதேகங்களின் ரூபம்யாது? இது அவற்றின் விபாக பூர்வகமான சொரூபத்தின் வினாவாம்.

ந. ஆத்மா எவ்வாறு இவற்றின் வேறாயிருக்கின்றது? இது அவற்றின் விசாரத்தினது உபயோகத்தின் வினாவாம்.

இம்மூன்று வினாக்களுக்கும் தாம் கிருபைசெய்து விடைபகரல் வேண்டும்.

## சச. ஸ்ரீ குருவானவர் சொல்லுகின்றார்.

(க) ஸ்தூலதேகம், லிங்கதேகம், காரணதேகம் என்னும் இவை மூன்று தேகங்களாம்.

(உ) இவ்வாறு கூறிய மூன்று தேகங்களும் காரிய காரணரூபமா யிருக்கின்றன

[க-உ] அவற்றில், ஸ்தூலதேகமும், லிங்க தேகமு மாகிய இரண்டும் அவித்தையினுல் ஆக்கப்பட்டனவா யிருத்தலின் அவித்தையின் காரியவடிவமாம்.

[ங] காரணதேகம் ஜகத்திற்குக் காரண மாகிய மூலப்பிரகிருதியின் அவஸ்தாவிசேஷ மான அவித்தைவடிவமாயிருத்தலின் காரண ரூபமாம்.

இது அவற்றின் விபாகமாம். காரிய காரணத்தன்மை யின்றியதும் பிரபஞ்சத்தின் கணுள்ள உவமையில்லாததும் ஆத்மாவாம்.

சரு. இப்போது ஸ்தூலதேகத்தின் சுவ ரூபத்தையும் அதனோடு ஆத்மாவிற்குள்ள பே தத்தையும் ஸ்ரீ குருவானவர் கூறுகின்றார்:— எந்தப் பூதங்களுக்கு முன் (உள-வது பிரசங் கத்தில்) கூறியபடி பஞ்சீகரணமுண்டாகின்ற தோ, அத்தன்மையன ஆகாயம், வாயு, தேயு ஜலம், பிருதிவி என்னும் பஞ்சபூதங்களாம். அவை பஞ்சீகிருத மெனப்படுகின்றன. அவற் றின் இருபத்தைந்து தத்வங்களி னின்றும் ஸ்தூலதேகம் உண்டாகின்றது.

அப் பஞ்சீகிருத பூதங்களின் இருபத்தைந்து தத்துவங்க ளிவையாம்:—

க-ரு. பிருதிவியின் ஐந்து தத்துவங்களாவன:—எலும்பு, மாம்சம், நாடி, தோல், ரோமம், என்பனவாம்

சு-கo. ஜலத்தின் ஐந்து தத்துவங்களாவன: —சோணிதம், சுக்கிலம், மூத்திரம், வேர்வை, உமிழ்நீர் என்பனவாம்

கக-கரு. தேயுவின் ஐந்து தத்துவங்களாவன சோம்பல், காந்தி, பசி, தாகம், நித்திரை என்பனவாம்.

கசு-உo. வாயுவின் ஐந்து தத்துவங்களாவன:—சுருங்குதல், நடத்தல், இருத்தல், ஓடுதல், விரிதல் என்பனவாம்.

உக-உரு. ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களாவன:—

(க) பயம், மோகம் குரோதம், காமம், சோகம் என்பனவாம்

(உ) அல்லது' இடுப்பின் அவகாசம், வயற்றின் அவகாசம், நெஞ்சின் அவகாசம், கழுத்தின் அவகாசம், தலையின் அவகாசம் என்னும் இவை ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களாம்.

இவை பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் காரியவடிவ இருபத்தைந்து தத்துவங்களாம். அந்த ஒவ்வொரு பூதத்தின் அவ்வைந்து தத்துவங்களினுள் ஒவ்வொரு தத்துவம் தத்தம் முக்கியபாகமாம். மற்றைய நந்நான்கு தத்துவங்கள் மற்றைய நான்கு பூதங்களினின்றும் வந்து சேர்ந்திருக்கின்றன. இவ்வாற்றால் இப்பூதங்களுக்குப் பரஸ்பரம் சேர்க்கையுண்டாயிருக்கின்றது அவற்றிற் கொன்றற்கொன்றுள்ள சேர்க்கையினை இவ்வாறு அறிதல்வேண்டும்:—

க-ரு. பிருதிவியின் ஐந்து தத்துவங்களில்,

(க) எலும்பு பிருதிவியின் முக்கியபாகமாம்.

(உ) மாம்சம் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ந) நாடி (நரம்பு) தேயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ச) துவக்கு (தோல்) வாயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ரு) ரோமம் ஆகாசத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

சு-கம். ஜலத்தின் ஐந்து தத்துவங்களில்,

(க) சோணிதம் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(உ) சுக்கிலம் ஜலத்தின் முக்கியபாகமாம்.

(ஙு) மூத்திரம் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ச) வேர்வை வாயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ரு) உமிழ்நீர் ஆகாயத்தின்பாகம் சேர்ந்திருக்கின்றது.

கக-சரு. தேயுவின ஐந்து தத்துவங்களில்,

(க) சோம்பல் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(உ) காந்தி ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ஙு) பசி தேயுவின் முக்கியபாகமாம்.

(ச) தாகம் வாயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது

(ரு) நித்திரை ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

கசூ-உ0. வாயுவின் ஐந்து தத்துவங்களில்,

(க) சுருங்குதல் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(உ) நடத்தல் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ங) இருத்தல் (நிமிர்தல்) தேயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ச) ஓடுதல் வாயுவின் முக்கியபாகமாம்.

(ரு) விரிதல் ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

உக-உரு. ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களில்,

(க) பயம் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(உ) மோகம் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ங) குரோதம் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ச) காமம் வாயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ரு) சோகம் ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

அல்லது ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களில்,

(க) இடுப்பின் அவகாசம் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(உ) வயிற்றின் அவகாசம் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கின்றது

(ங) நெஞ்சின் அவகாசம் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது.

(ச) கழுத்தின் அவகாசம் வாயுவின் பாகம் சேர்ந்திருக்கின்றது

(ரு) தலையின் அவகாசம் ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

முற்கூறிய பயமுதலியன லிங்கதேகத்தின் முக்கிய தர்மமாம். ஸ்தூலதேகத்திலும் கடத்தில் ஜலத்தின் சீதளத்தன்மையைப் போல இவற்றின் வெளிப்படுதல் உண்டாகின்றது. அதனால் அவை ஸ்தூலதேகத்தின் கௌணதர்மங்களாம் ஆதலால் ஸ்தூலதேகத்தின் தத்துவங்களில் அறியத்தக்கனவாம்.

இடுப்பின் அவகாச முதலியன ஸ்தூலதே கத்தில் பிரசித்தமாய்க் காணப்படுகின்றமை யால், சில நூலாசிரியர்கள் அவற்றையே ஸ்தூ லதேகத்தின் தத்துவங்களாகக் கணித்திருக் கின்றனர்.

இருவகையானும் ஆத்மா அவற்றின் வேறு மென்று நிச்சயித்தல்வேண்டும்.

முற்கூறிய பஞ்சீகரணக் கிரமத்தின் விஸ் தாரவர்ணனமும் இன்ன பூதத்திற்கு இன் னது தத்துவம் என்னும் பொருளில் அநேக ஏதுக்களைப் பொருத்துதலும் ஸ்ரீ விசாரசந்தி ரோதயத்தின் மூன்றுவது கலையில் எழுதப் பட்டிருக்கின்றன ஆண்டுக் கண்டுகொள்க. இவ்விருபத்தைந்து தத்துவங்களின் சமுதா யத்தின் பெயர் ஸ்தூலதேகமாம் அதற்குப் பெயர், ஜாதி, ஆசிரமம், நிறம், வடிவம் (பரு மன், மெலிவு, நீட்சி, குறுமை), ஜன்மம், மரண முதலிய தர்மங்களுண்டு.

உகா. இவ்வாறு ஸ்தூலதேகத்தின் சொரூ பத்தைச் சொல்லி இப்போது அதனோடு ஆத் மாவிற்குள்ள பேதத்தைக் கூறுகின்றார்:—

க. ஆத்மா ஸ்தூலதேகத்தின் ஜந்மத்திற்கு முன்னும் மரணத்திற்குப் பின்னும் இருப்

பதும் ஏகமுமா யிருத்தலால் கடத்தின் வேறான ஆகாயத்தைப்போல ஸ்தூலதேகத்தின் வேறும்; வியபிசார மில்லாததுமாம்.

உ தேகம் கடத்தைப்போல தனது உற்பத்திக்கு முன்னும் மரணத்திற்குப் பின்னும் இல்லாததாய் அநேகமாயிருத்தலின் ஆத்மாவினும் வேறும், வியபிசாரமுடையதுமாம்.

க எந்த வஸ்து எல்லா (அநிக) தேசத்திலும் எல்லா (அநிக) காலத்திலும் உளதாகின்றதோ, அது அவ்வியபிசாரி (பிறழ்ச்சியில்லாதது) எனப்படுகின்றது.

(க) ஆத்மா எதனால் சகல சரீரங்களிலும் ஒன்றாயிருத்தலால் ஆகாயத்தைப்போல வியாபகமாயிருக்கின்றதோ, அதனாலே எல்லாத் தேசங்களிலு மிருக்கின்றது.

(உ) எதனால் சர்வதேகங்களின் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் ஆத்மாவிருப்பதா யிருத்தலின் முக்காலத்திலும் பாதிக்கப்படாததாகின்றதோ, அதனாலே அது எல்லாக்காலத்திலும் இருப்பதாம்.

(ந) ஆத்மா எதனால் எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலுமிருக்கின்றதோ, அதனால் அவ்வியபிசாரியாம்.

உ. எந்த வஸ்து எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலுமிராது, யாதேனும் ஓர் தேசத்திலும் யாதேனும் ஓர் காலத்திலு மிருக்கின்றதோ, அது வியபிசாரி யெனப்படுகின்றது.

(க) தேகம் எதனால் கடத்தைப்போல பரிச்சின்னமா யிருக்கின்றதோ, அதனால் எல்லாத்தேசத்திலு மிராது யாதேனும் ஓர் தேசத்திலிருக்கின்றது.

(உ) தேகம் எதனால் உற்பத்தி நாசமுடையதாயிருக்கின்றதோ, அதனால் எல்லாக்காலத்திலு மிராமல் யாதேனும் ஓர் காலத்திலிருக்கின்றது.

(ந) தேகம் எதனால் எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலு மிராமல் யாதேனும் ஓர் தேசத்தில் ஓர் காலத்திலிருக்கின்றதோ, அதனால் வியபிசாரியாம்.

எதனால் ஆத்மாவும் தேகமும் கிரமமாக அவ்வியபிசாரியும் வியபிசாரியுமா யிருத்தலின் ஒன்றற்கொன்று விலக்ஷணமாயிருக்கின்றனவோ, அதனானே அவற்றிற் கொன்றற்கொன்று பேதம் சித்திக்கின்றது.

ஈண்டு இச்சங்கை யுண்டாகின்றது:—

பிரஹ்மவடிவ ஆத்மாவிற்கும் தேக (உடல் முதலிய) வடிவ அநாத்மாவிற்கும் க. பேத முளதா? உ. அல்லது அபேதமுளதா? ங. அல்லது பேதமும் அபேதமுமாகிய இரண்டு முளவா? என்னும் மூன்று விகற்பங்களைக் கேட்பாம். அவற்றில்,

க. அவற்றிற்குப் பேதத்தைக் கூறுவோமாயின், சுருதி ஸ்மிருதி யுக்தி வித்வான்களது அநுபவம் என்பவற்றால் சித்தித்த அத்வைத சித்தாந்தம் எதுவோ அதற்கு ஹானி யுண்டாகும்.

உ. அவற்றிற்கு அபேதத்தைக் கூறுவோமாயின், அவ்விரண்டனையும் வேறுபிரித்தல் வியர்த்தமாம்.

ங. அவற்றிற்குப் பேதம் அபேதமென்னும் இரண்டனையும் கூறுவோமாயின், இருளும் ஒளியும்போல ஒன்றற்கொன்று விருத்தமான அவ்விரண்டு தர்மங்களுக்கும் ஒருகாலத்தில் ஒரு ஆசிரயத்தில் இருப்புப் பொருந்தாது. ஆதலால் இந்த உம்முடைய வசனம்

"மெய் பொய்" என்னும் வாக்கியத்தினைப் போல * எஎ. வியாகாததோஷமுடையதாம்.

இச்சங்கைக்கு இது * எஅ. சமாதானமாம்:—

---

* எஎ. ஒன்றற்கொன்று விரோதமுள்ள இரண்டு தர்மங்கள் ஒரு அதிகரணத்தி (தர்மியி)ற் கூடியிருப்பது **வியாகாததோஷமாம்.** அது "என்தாய் மலடி" "எனக்கு நாக்கில்லை" என்பன முதலியவற்றிலிருப்பதாம்.

* எஅ. பார்த்திவ காஷ்டரூப (பிருதிவியின் காரியமான கட்டைவடிவ) காரியத்திற்கும் ஜலதத்துவவாயிலாக அக்கினிதத்துவவடிவ காரணத்திற்கும் கடைதலுக்குமுன் அபேதம் தோற்றுகின்றது. அது அயோக்கியமாம்; சிரேஷ்டமாகிய காரணம் ஏதுவோ அதற்குத் திரோதானமிருத்தலின். அதனை (நிக்கிருஷ்ட அபேதத்தினை) நீக்குதற்பொருட்டுக் கடைதல்வாயிலாக அவற்றின் பேதம் செய்யப்படுகின்றது. பின்னர்ப் பிரகடமாகிய அக்கினியின் பிரபலத்தன்மைவாயிலாக அவற்றிற்கு அபேதமுண்டாகின்றது. அது யோக்கியமாம்; நிக்கிருஷ்ட (தாழ்வான) காஷ்டவடிவ காரியத்திற்குத் தாகவாயிலாகத் திரோதானமிருத்தலின். **அங்ஙனமே** அநாத்மவடிவ காரியத்திற்கும் ஆத்மவடிவ காரணத்திற்கும் விவேக ஞானத்திற்கு முன் அபேதம் தோற்றுகின்றது. அது அயோக்கியமாம்; ஆத்மாவின் (அதிஷ்டானத்தின்) திரோதான

க. சிஷ்யனே! ஆத்மா அநாத்மாக்களுக்கு முன் பிரித்தறியாத (பிராந்தி) காலத்தில் சர்வ ஜீவர்களுக்கும் அபேதம் தோற்றுகின்றது. பின் விவேசன (விவேகஞான) காலத்தில் சேதனத்தன்மை முதலியனவும் ஜடத்தன்மை முதலியனவுமாகிய தர்மங்களது விலக்ஷணத்தன்மையின் ஞானத்தினாலும், "என்னுடைய தேகமிருக்கிறது" என்னும் அநுபவத்தின் பலத்தினாலும் அவற்றிற்குப் பேதம் தோற்றுகிறது.

உ விவேசன (பதார்த்தசோதன) த்திற்குப் பின் குருவினால் உபதேசிக்கப்பட்ட மகாவாக்கியத்தினது அர்த்தத்தின் விசார (தத்துவஞான) காலத்திலும் அபேதநிச்சயம் உண்டாகின்றது.

ஆதலால் ஆத்மாநாத்மாக்களின் பேதம் அபேதமிரண்டும் அநுபவிக்கப் பட்டனவாம்.

---

மிருத்தலின். அதனை (பிராந்தியினால்சித்தித்த அபேதத்தினை) நீக்குதற்பொருட்டு அவற்றின் பேதஞான வடிவ விவேகஞானம் செய்யப்படுகின்றது பின்னர்ப் பிரகடமாகிய ஆத்மாவின் பிரபலத்தன்மை (முக்கியத்தன்மை) வாயிலாகத் தத்துவஞானகாலத்தில் அவற்றிற்கு அபேதமுண்டாகின்றது. அது யோக்கியமாம்; மித்தையாகிய அநாத்ம (பிரபஞ்ச) வடிவ காரியத்திற்குப் பாதவாயிலாகத் திரோதான மிருத்தலின்.

ஆனால் அவ்விரண்டற்கும் சத்தியத் தன்மையி னாலேனும் கற்பிதத்தன்மையினாலேனும் ஒரு தர்மியின் (ஆசிரயத்தில்) இருப்பே. ச. பவி யாது; அவை இருளு மொளியும்போல ஒன்றற் கொன்று விரோதிகளா யிருத்தலின் ஆனல் அவ்விரண்டனுள்ளும் ஒன்றற்குச் சத்தியத் தன்மையும் மற்றையதற்குக் கற்பிதத்தன்மை யும் சொல்லுதல் வேண்டும். ஆதலால் ஆத்மா நாத்மாக்களின் பேதம் அபேத மிரண்டனுள் ளும் பேதம் கற்பிதமும் அபேதம் சத்தியமுமா மென்று நிச்சயஞ் செய்தல்வேண்டும் இதனால் அத்வைதசித்தாந்தத்திற்கு ஹாநியில்லை பிரம (அவிவேக) த்தினால் சித்தித்த முக்கிய அபே தத்தை நீக்கும்பொருட்டு அவற்றை விவேகித் தலும் வியர்த்தமன்று. இந்தக்கற்பிதத்தோடு கூடிய வாஸ்தவ அபேதமே * எகூ தாதாத்

---

* எகூ. ஈண்டு இது அபிப்பிராயமாம்:—இரண்டு சம்பந்திகளின்றிச் சம்பந்தங் கூறுதல் சம்பவியாது. அபேதமின்றித் தாதாத்மியம் கூறுதலும் பொருந்தாது ஆதலால் பேதத்தோடுகூடிய அபேதத்திற்குத் தாதாத் மியசம்பந்த மென்று பெயராம். பேத அபேதங்களி ரண்டற்கும் ஒளியு மிருளும்போல் ஓரிடத்திருத்தல் விரோதமாமாயினும், அநாத்மா கற்பிதகாரியவடிவமா யிருத்தலாலும் ஆத்மா அகற்பித காரண (அதிஷ்டான)

மியசம்பந்த மென்றும் சொல்லப்படுகின்றது. அத் ௮0. * தாதாத்மியத்தை அநாத்மாவும்

வடிவமா யிருத்தலாலும் அவ்விரண்டற்கும் கற்பித (சொல் மாத்திர) பேதமுண்டு. கற்பிதத்திற்கு அதிஷ்டானத்தினும் வேறனசத்தை யின்மையால் அவற்றிற்கு வாஸ்தவ அபேத முண்டு. இவ்வாற்றல் அநாத்மா ஆத்மாக்களுக்குக் கற்பிதபேதத்தோடுகூடிய வாஸ்தவஅபேதவடிவ தாதாத்மியசம்பந்தமுண்டு. இதனையே பேதாபேதங்களின் விலக்ஷண அநிர்வசநீய தாதாத்மிய மென்றும் கூறுவர். வாஸ்தவ பேதமில்லாமையால் பேதத்தின் விலக்ஷணமாம்; கற்பிதபேதமிருத்தலால் அபேதத்தினும் விலக்ஷணமாம்.

* ௮0. கடமாகிய காரியத்திற்கும் மண்ணுகிய காரணத்திற்கும் கற்பித (சொன்மாத்திர) பேதமும் வாஸ்தவ அபேதமு மிருக்கின்றன; அங்ஙனமே அநாத்மாவிற்கும் ஆத்மாவிற்கு மிருக்கின்றது. அங்ஙனமே கடத்தின் நீலநிறமாகிய குணத்திற்கும் கடமாகிய குணிக்கும் சொன்மாத்திரம் பேத மிருக்கின்றது. விசாரிக்குமிடத்துக் குணத்திற்குக் குணியோடு பேதம் சித்தியாது; ஆதலால் அபேதமாம். இதனாலேயே அவற்றிற்குத் தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது. இப்படியே ஜாதிக்கும் வியக்திக்கும், கிரியைக்கும் கிரியையுடையதற்கும் தாதாத்மியசம்பந்தம் இருக்கின்றது. விசாரிக்கின் அவற்றிற்குப் பேதம் சித்தியாதென்பதற்கு யுக்தி பஞ்சதசியின் முதல் விவேகத்தில் சக்கிரிகையின் பிரசங்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த யுக்தியைக் கடினமென்றறிந்து இங்கே எழுதவில்லை.

ஆத்மாவுமாகிய காரிய காரணங்களிற்போல குணகுணியிலும் ஜாதி வியக்தியிலும் கிரியை கிரியையுடையதனிடத்தும் அறிந்துகொள்க.

இங்கே இது * அக. பிரக்கிரியையாம்:— க சத்தியம் உ கற்பிதமென்னும் பேதத்தால் பேதம் இருவகையினதாம். அவற்றுள்,

க. பின்னசத்தையுடைய பதார்த்தங்களுக்குள்ள பேதம் எதுவோ அது கற்பிதமேயாம். அது இரஜ்ஜுவிற்கும் கற்பித சர்ப்பத்திற்குமுள்ள பேதமும் ஜாக்கிர சொப்பனங்களுக்குள்ள பேதமும் ஆத்மா நாத்மாக்களுக்குள்ள பேதமும் கற்பிதமாம், இரண்டும் பின்ன சத்தை யுடையனவா யிருத்தலால் என்பது போலவாம்

உ. சமானசத்தையுடைய பதார்த்தங்களுக்குள்ள பேதம் எதுவோ அது (க) சிலவிடத்துக் கற்பிதமும் (உ) சிலவிடத்துச் சத்தியமுமாகின்றது.

(க) எங்கே யாதேனும் ஓர் உபாதியினால் பேதம் தோற்றுகின்றதோ, அங்கே அந்தப்

---

* அக. இதன்பொருளை விசாரசந்திரோதயத்தின் முதற்கலையின் டிப்பணியிற் காண்க.

பேதம் கற்பிதமாம். அது சமானசத்தைை யுடைய கடாகாசத்திற்கும் மடாகாசத்திற்கும் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கு முள்ளபேதம் உபாதியினாலாகியதா யிருத்தலால் கற்பிதமாதல் போலவாம்.

(உ) எங்கே உபாதியின்றிச் சொரூபமாகப் பேதம் தோற்றுகிறதோ, அங்கே அந்தப் பேதம் சத்தியமாம். அது கடபடங்களுக் குள்ள பேதமும் சரீரங்களுக்கு ஒன்றற்கொன் றுள்ள பேதமும் ஆகாச முதலியவற்றிக்கு ஒன்றுக் கொன்றுள்ள பெதமும் உபாதியின் றிய கடமுதலியவற்றின் சொரூபத்தினாலாகிய தாயிருத்தலால் சத்தியமாம். அவற்றுள், சத் தியபேதமும் (க) பாரமார்த்திகம் (உ) வியாவ காரிகம் (ங) பிராதிபாஸிகமென்னும் பாவத்தி னல் (சத்தையினல்) மூன்றுவிதமாகக் கற்பனை செய்யப்படுகின்றது.

(க) எந்தப் பேதத்தின் அநுயோகி பிரதி யோகி யிரண்டும் பாரமார்த்த சத்தையுடைய னவா யிருக்கின்றனவோ, அந்தப்பேதம் பார மார்த்திகமாம். சித்தாந்தத்தில் சுத்த சேத னத்திற்கு வேறுகப் பாரமார்த்திக சத்தை யுடைய தொன்றுமில்லை. அதனல் அநுயோகி யும் பிரதியோகியும் பாரமார்த்திக சத்தை

புடையனவாகா. ஆதலால் எந்தப் பதார்த்தத் திற்கும் பாரமார்த்திக பேதமோ எவ்வாற் றானும் சித்தியாது

(உ) எந்தப் பேதத்தின் அநுயோகியும் பிரதியோகியும் வியவகார சத்தையுடையன வாயிருக்கின்றனவோ, அந்தப் பேதம் வியாவ காரிகமாம். அது வியவகார சத்தையுடைய கட படங்களுக்கும் பிருதிவி ஜலங்கட்கும் ஜீவேசுவராதிகளுக்கும் ஒன்றற்கொன்றுள்ள பேதம் வியாவகாரிகமாதலாம்.

(ங) எந்தப் பேதத்தின் அநுயோகியும் பிரதியோகியும் பிராதிபாஸிக சத்தையுடைய னவா யிருக்கின்றனவோ அந்தப் பேதம் பிராதிபாஸிகமாம். அது இரஜ்ஜுவில் தோற் றுகின்ற சர்ப்பம், தண்டம், மாலை முதலிய வற்றிற்கு ஒன்றற்கொன்றுள்ள பேதம் பிராதி பாஸிகமாதல்போலவாம்.

இவ்வாறு சத்தியபேதத்திலும் இவ்வளவு விலக்ஷணத்தன்மை யிருக்கின்றது.

எதில் அந்நியத்தின் பேதமிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பேதத்தின் ஆசிரயம் எதுவோ அது அநுயோகியெனப் படுகின்றது. அது கடத்திலுள்ள படத்தின் பேதத்திற்குக் கடம்

அநுயோகியாதல் போலவாம் இதனையே தர்மி யென்றுங் கூறுவர்

எதன் பேதம் அந்நியவஸ்துவி லிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பேதமுடையவஸ்து எதுவோ, அது பிரதியோகியெனப்படுகின்றது. அது கடத்திலுள்ள படத்தின் பேதத்திற்குப் பிரதியோகி படமாதல் போலவாம். அதனையே நிருபகமென்றுங் கூறுவர்.

இவ்வாறு வஸ்துவிலுள்ள பேதத்தின் சொரூபம் சொல்லப்பட்டது. இப்படி அபேதமும் முக்கிய அபேதம் பாத (மித்தியாநிச்சய) த்தினலாகிய அபேதம் என்னும் பேதத்தினல் இரண்டுவகையாம்.

அவற்றுள், பின்னசத்தையுடைய பதார்த்தங்களுக்குள்ள அபேதம் க. முக்கிய அபேதம், உ. பாதத்தினலாகிய அபேத மென்னும் பேதத்தால் இரண்டு வகையாம். அவற்றுள்,

க. பாதமாக்குதலின்றியே சொரூபமாக அவற்றிற்குத் தோற்றும் அபேத மெதுவோ அது முக்கியமாம். அது இரஜ்ஜுவிற்கும் சர்ப்பத்திற்கும், தாணுவிற்கும் புருடனுக்கும், தேகத்திற்கும் ஆத்மாவிற்கும், பிரஹ்மத்திற்

கும் ஜகத்திற்கும் முதலில் அவிவேககாலத்தில் உள்ள அபேதம எதுவோ அது முக்கியமாம் (பிராந்திவடிவமாயிருக்கினும் முக்கியத்தைப் போலத் தோற்றுகின்றது) என்பதுபோலவாம். ஆனால் அது பிராந்திவடிவமா யிருத்தலால் மித்தையாம்.

உ. பின்னசத்தையுடைய பதார்த்தங்களு க்கு இரண்டினின்றும் ஒன்றை (அற்பசத்தை யுடையதை)ப்பாதித்தலா லுண்டாகும் அபே தமெதுவோ, அது பாதத்தினலாகிய அபேத மாம். அது இரஜ்ஜுவிற்கும் சர்ப்பத்திற்கும், தாணுவிற்கும் புருடனுக்கும், பிம்பத்திற்கும் பிரதிபிம்பத்திற்கும், ஆத்மாவிற்கும் அநாத்மா விற்கும், பிரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும், பிரஹ்மத்திற்கும் சிதாபாசனுக்கும் பின் தத் துவஞானகாலத்தில் எந்த அபேதம் தோற்று கிறதோ, அது இரண்டிலொன்றைப் பாதித்த லாலுண்டாகின்றது; ஆதலால் அது பாதத்தி னலாகிய அபேதமாம் என்பது போலவாம். ஆனால் அந்த அபேதம் பிராந்திநிவிருத்தியி னலாகியதா யிருத்தலால் சத்தியமாம்.

மித்தியாத்துவ நிச்சயத்திற்கு அல்லது திரிகால அபாவ (மூன்றுகாலத்தின்மை) நிச்

சயத்திற்குப் பாதமென்று பெயர். அதனையே நிவிருத்தியென்றுங் கூறுவர்.

சமானசத்தையுடைய பதார்த்தங்களுக்குள்ள அபேதமெதுவோ அது பாதஞ் செய்தவின்றியே சொரூபமாகத் தோற்றுகின்றது. ஆதலால் முக்கிய அபேதமாம். ஆனால் அந்த முக்கிய அபேதமும் க. சிலவிடத்துச் சத்தியமாம்; உ. சிலவிடத்துக் கற்பிதமாம்.

க. எங்கே உபாதியின்றிய வஸ்துவின் சொரூபத்திற்கு அபேதம் தோற்றுகின்றதோ, அங்கே அந்த அபேதம் சத்தியமாம். அது கடமாகிய உபாதியின் திருஷ்டியை விடுவதினுலுண்டாகும் கடாகாச மகாகாசங்களின் அபேதமும், பிரஹ்மத்திற்கும் கூடஸ்த ஆத்மாவிற்கும் உண்டாகும் அபேதமும் சத்தியமாதல் போலவாம்.

உ. எங்கே தோஷமாகிய உபாதியின் பலத்தினுல் அபேதம் தோற்றுகின்றதோ, அங்கே அந்த அபேதம் கற்பிதமாம். அது சந்நிதிதோஷமாகிய உபாதியின் பலத்தினுல் மேகத்திற்கும் ஆகாசத்திற்கும் தோற்றும் அபேதம் கற்பிதமாதல் போலவாம்

இவ்வாற்றுல் அபேதத்திற்கும் விலக்ஷணத்தன்மையிருக்கின்றது.

க. ஆத்மாவிற்கும் தேகத்திற்கு முள்ள அபேதம் எதுவோ, அது கற்பிதமாயிருத்தலால் அற்பசத்தையுடைய தேகமாகிய அநாத்மாவின் சொரூபத்தைப் பாதித்தலினுலேயே உண்டாகின்றது. ஆதலால் அது சத்தியமாம்

உ. முதலில் அவிவேககாலத்தில் சர்வஜீவர்களுக்கும் தோற்றுகின்ற பின்ன சத்தையுடைய ஆத்மாவிற்கும் தேகத்திற்குமுள்ள அபேதமெதுவோ, அது சமானசத்தையுடைய பதார்த்தங்களைப்போல முக்கிய அபேதமாம். அந்த முக்கிய அபேதம் பிராந்தி வடிவமாயிருத்தலால் கற்பிதமாம்.

ஆதலால் அந்தக் கற்பித முக்கிய அபேதத்தை நிவர்த்திக்கும் பொருட்டு முமுக்ஷுவானவன் முதலில் ஆத்மா தேகமாகிய அநாத்மா என்னு மிவற்றின் கற்பித (ஆரோபித) பேதமாகிய விவேசனத்தைச் செய்யவேண்டும். பின் ஞானகாலத்தில் அநாத்மாவைச் சாஸ்திர யுக்திகளாலும் அபரோக்ஷ அநுபவத்தினுலும் பாதஞ்செய்து அவ்விரண்டன் அபேதத்தையும் செய்யவேண்டும்.

க. மகாவாக்கியத்தின் பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய அர்த்தத்தை விசாரிக்குங்காலத்தில் தேகாதிப் பிரபஞ்சமாகிய அநாத்மாவின் பாதம் யாதொன்று செய்யப்படுகின்றதோ, அந்தப் பாதம் பிரபஞ்சத்தை நிஷேதிக்கும் சாஸ்திரத்தினாலும் சொப்பனாதி திருஷ்டாந்த வடிவமாகிய யுக்திகளாலும் செய்யப்பட்டதாம்; ஆதலால் பரோக்ஷமாம்.

உ. மகாவாக்கியத்தினது முற்கூறிய அர்த்தத்தின் "நான் பிரஹ்மமா யிருக்கிறேன்" என்னும் திடநிச்சயமாகிய அபரோக்ஷஞானம் உண்டானபின்னர் எந்த அநாத்மாவின் பாதமுண்டாகிறதோ, அது அபரோக்ஷாநுபவத்தினாலாகியதாம்; ஆதலால் அபரோக்ஷபாதமாம்.

அதனால் அபரோக்ஷ போதத்தில் அபேக்ஷிக்கப்பட்டபாதம், அபரோக்ஷபோதத்தின் பலரூபமான பாதமென்பவற்றின் பேதத்தால் போத பாதங்களின் ஒன்றற்கொன்று அபேக்ஷைவடிவ அந்நியோந்நியாசிரய தோஷமும் இங்கே சம்பவிக்கிறதில்லை.

இவ்வாறு ஆத்மாநாத்மாக்க ளிரண்டற்கும் வாஸ்தவ அபேதத்தையும் கற்பிதபேதத்தையும் அங்கீகாரஞ்செய்தலால் அத்வைத சித்-

தாந்தத்திற்குக் கெடுதியில்லை; விவேசனஞ் செய்தலும் ஸபலமாம்.

இந்தத்தேக ஆத்மாக்களின் பேதாபேதத் திற் சொல்லப்பட்ட நியாயம் (பிரகாரம்) எதுவோ அதனை மற்றச் சரீரத்திற்கும், அவஸ்தை முதலியவற்றிற்கும், சிதாபாசனுக்கும், ஆத்மாவிற்கும் உள்ள பேதாபேதங்களிலும் முற்கூறிய சங்கை சமாதான பூர்வகமாகத் தெரிந்துகொள்க. இவ்வர்த்தம் பிரசங்கத்தால் (தொடர்பாட்டால்) சொல்லப்பட்டது.

சிஷ்யனே! இவ்வாறு ஆத்மா விற்கும் ஸ்தூல தேகத்திற்கும் எதனாலே சத்தையின் பேதத்தால் பேதமிருக்கிறதோ, அதனால் நான் ஸ்தூல தேகமல்லன்; இது என்னுடையது மல்ல; ஆனால் இது பஞ்சபூதத்தினுடையதாம், எதனால் நான் ஸ்தூலதேக மல்லனோ, அதனால் முற்கூறிய பெயர், ஜாதி, ஆசிரமம், வருணம், வடிவமுதலிய இதன் தர்மங்களும் நானல்லன், என்னுடையவு மல்லவென்று நீ நிச்சயஞ்செய்.

இங்கே இது விசேஷமாம்:—

க. “ ஜஶரீரம் வாவஸஞம்

சரீரத்திற்கு வேறாயிருப்பதை."

,, ஜீவாபெதம் வாவ கிலெஶரீரம் ம்ரியதெ
ந ஜீவொ ம்ரியதெ | நைநம் ஸுகதுஃகெ
ஸ்ப்ருஶத: ||

ஜீவனால் விடப்பட்ட பிரசித்த சரீரம் நிச்சயமாகவே பிறக்கின்றது; ஜீவன் இறக்கிறதில்லை. இவனைச் சுகதுக்கங்கள் பரிசிக்கிறதில்லை"

"அஶரீரம் ஶரீரெஷு நவஸ்தெஷ்வவஸ்திதம் |
மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரொ ந
ஶொசதி ||

அஸ்திரமான (நிலையில்லாத) சரீரங்களில் சரீரமில்லாது நிலைத்திருக்கும் மகா விபுவாகிய ஆத்மாவைத் தீரபுருஷன் 'நான் என்று மதித்துச் சோகப்படுகிறதில்லை." என்னும் இவை முதலிய சுருதிகளாலும்.

உ. "வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய
நவாநி க்ருஹ்ணாதி நரொபராணி | ததா
ஶரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்
யாதி நவாநி தெஹீ ||

எப்படிப் புருஷன் பழைய வஸ்திரங்களை விட்டு வேறு புதியவஸ்திரங்களைக் கிரகிக்கின்றானோ, அதுபோலத் தேகி (ஜீவாத்மா) பழைய சரீரங்களைவிட்டு வேறு புதிய சரீரங்களை அடைகிறான்"

"தேஹிநோऽஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா | ததா தேஹாந்தரப்ராப்திர் தீரஸ்தத்ர ந முஹ்யதி ||

எப்படித் தேகிக்கு இந்தத் தேகத்தில் கௌமாரம் (குமாரப் பருவம்) யௌவனம், ஜரை (மூப்பு) உண்டாகின்றதோ [சொப்பனதேகமு முண்டாகின்றதோ], அதுபோல அந்நியதேகத்தின் பிராப்தி யுண்டாகின்றது. அதில் தீர '(விவேகியாகிய) புருஷர்கள் 'நான் பிறந்தேன், இறந்தேன்' என்றிவ்வாறு மோகத்தை யடைகிறதில்லை."

"இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே | ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: ||

ஓ! குந்திபுத்திரனே! இந்தச் சரீரம் 'க்ஷேத்திரம்' எனப்படுகின்றது. இதனை அறிகிறது எதுவோ அதனை 'க்ஷேத்திரஞ்ஞன்' என்று அதை யுணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள்" என்னுமிவை முதலிய ஸ்மிருதிகளாலும்,

ரு (க) தேகம், சாணிக்குவியலைப்போலும் விருக்ஷத்தைப்போலும் வளர்தலாலும், ஆகாரமுதலியவற்றைக் கிரகித்தலாலும், அல்லது சகடமுதலியவற்றைப்போல நடத்தல் முதலிய கிரியைகளைச் செய்தலாலும், அல்லது கொல்லன் துருத்தியைப் போலச் சுவாச உச்சுவாசங்களைக் கிரகித்தலாலும், அல்லது எண்ணெயாட்டும் யந்திரத்தைப்போல மலமூத்திரங்களை விடுதலாலும் சேதனமாகாது; ஆனால் ஜடமும்மமதை (எனதெனுந்தன்மை)யின் விஷயமுமாம். ஆத்மா ஜாக்கிரத்தில் இதன் இருப்பையும், சொப்பன சுழுத்திகளில் இதன் அபாவத்தையும் அறிவதாயிருத்தலால் சேதனமும், நானென்னும விருத்தியின் விஷயமுமாம். ஆதலால் இவ்விரண்டற்கும் ஐக்கியம் பொருந்தாது.

(உ) அல்லது குழந்தைக்கு ஸ்தநபானத்தி (பால் குடித்தலி)ல் பிரவிருத்தித்தற்கு ஏதுவான எந்த ஸ்தநபானத்திற்கு அநுகூலத்தன்மையின் ஸ்மிருதி ஜந்மத்திற்குப் பிறகு உண்

டாகின்றதோ, அந்த ஸ்மிருதி ஜந்மாந்தரத்தில் அந்த அநுகூலத்தன்மையின் அநுபவமின்றிச் சம்பவியாது. ஆகலின் அது ஜந்மாந்தரத்தில் முற்கூறிய அநுகூலத்தன்மையின் அநுபவத்தைக் கற்பனையினால் அறிவிக்கின்றது. அவ்வநுபவத்திற்குக் கர்த்தாவாகிய ஆத்மா இந்தத் தேகத்திற்கு வேறாகச் சித்திக்கின்றது.

(௩) அல்லது ஆத்மா தேகத்திற்குப் பின்னமாகாவிடின், பூர்வஜன்மத்திலில்லாத ஆத்மாவினாற் செய்யப்படாத கர்மங்களின் விசித்திர சுகதுக்கரூபமான பலத்தின் பிராப்தியாகிய

“க்ருதாப்யாகம

செய்யப்படாதது அநுபவத்திற்கு வருதல்” என்னும் தோஷமும், இந்தச் சரீரம் மரித்த பின்னர் வேறு தேகத்தின் அடைவின்மையால் இத்தேகத்தில் செய்தகர்மங்கள் புசிப்பின்றி நசித்தலாகிய

“க்ருதவிப்ரணாச

செய்யப்பட்டவை அநுபவமின்றிக்கெடுதல்” என்னும் தோஷமு முண்டாகும். இவ்விரண்டு தோஷங்களும் உலகப்பிரசித்திக்கும்

வேதப்பிரசித்திக்கும் விரோதமுள்ளனவாம் என்னு இவை முதலிய யுக்திகளாலும்,

ஆத்மா ஸ்தூலதேகத்தினும் வேறும்

ச. இதனுற்றுன்

“𑌯𑌥𑌾 𑌨𑌭𑌸𑌿 𑌮𑍇𑌘𑍌𑌘𑍋 𑌰𑍇𑌣𑍁𑌰𑍍𑌵𑌾
𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑍋𑌽𑌨𑌿𑌲𑍇 | 𑌏𑌵𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌰𑌿 𑌦𑍃
𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌾𑌰𑍋𑌪𑌿𑌤𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑌿𑌃 ||

எங்ஙனம் ஆகாயத்தில் மேகக்கூட்டங்களேனும் வாயுவினிடத்தில் பிருதிவியின் அணுக்கூட்டங்களேனும் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அங்ஙனமே ஞானமில்லாத புருடர்களால் திருஷ்டா (ஆத்மா) வினிடத்தில் திருசிய (ஸ்தூலதேக)த் தன்மை ஆரோபிக்கப்பட்டிருக்கின்றது” என்னுமிவை முதலிய ஸ்ரீமத் பாகவதவசனங்களும் தேகத்தின் அநாத்மத் தன்மையிற் பிரமாணமுடையனவா யிருக்கின்றன.

சஎ. இவ்வாற்றுல் ஸ்தூலதேகத்தினின்றும் ஆத்மாவை வேறுபிரித்து, இப்போது சூக்ஷ்மசரீரத்தின் சொரூபத்தையும் அதனின்றும் ஆத்மா வேறென்பதையும் கூறுகின்றுர்:—

எவற்றிற்கு முற்கூறிய பஞ்சீகரண முண்டாகவில்லையோ, அப்படிப்பட்ட ஆகாசாதி பஞ்சமகாபூதங்கள் அபஞ்சீகிருதபூதங்களெனப் படுகின்றன. அவற்றையே சூக்ஷ்மபூதமென்றும் தன்மாத்திரையென்றும் கூறுவர் அவ்வ பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் பதினேழு தத்துவங்களாலும் இலிங்கதேக முண்டாயிற்று.

இப்போது பதினேழு தத்துவங்களோடு கூடிய இலிங்க தேகத்தைக் கூறுகின்றார்:—

க-ரு. சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, கிராணமென்னும் ஐந்து ஞானேந்திரியங்கள்,

சு-கО. வாக்கு, பாதம், பாணி, உபஸ்தம், குதமென்னும் ஐந்து கர்மேந்திரியங்கள்,

கக-கரு. பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்னும் ஐந்து பிராண வாயுக்கள்,

கசு-கஎ. சங்கற்ப விகற்பமய விருத்திவடிவமான மனம், நிச்சயரூப விருத்திமயமான புத்தியென்னும்

இப்பதினேழு தத்துவங்களும் சேர்ந்து இலிங்கதேக மெனப்படுகின்றன.

சுபாசுபக்கிரியைகளின் கர்த்திருத்துவம் சுகதுக்கங்களின் போக்திருத்துவம், பரலோகத்திற்குப் போதல், இவ்வுலகத்திற்கு வருதல்; இராகம் துவேஷ முதலியன, சமதம முதலியன, அந்த மந்த படுத்துவங்களென்னும் இவை முதலியன இலிங்கதேகத்தின் தர்மங்களாம். [இங்கே அந்தத்துவ (குருட்டுத் தன்மை) முதலியன செவிட்டுத்தன்மை முதலியவற்றைக் குறிப்பிப்பனவாம்]

இந்த இலிங்கமுதலிய தேகங்களினது தர்மங்களின் வர்ணனம் ஸ்ரீ விசாரசந்திரோதய மென்னும கிரந்தத்தில் எழுதப்பட்டிருக்கிறது. அங்கே காண்க.

சஅ. மரணம், மூர்ச்சை, சுழுத்தி, பிரளயம், ஞானம் (சமாதி) என்னும் ஐந்து அவஸ்தைகளிலும் இலிங்கதேகத்திற்கு நாசம்(தனது காரணமாகிய அஞ்ஞானத்தில் இலயமாதல்) உண்டாகின்றது. இப்படி வியபிசாரியா யிருத்தலால் இந்த லிங்கதேகம் அசத்தாம்.

ஆத்மாவோ இவ்வெல்லாக் காலங்களிலும் உள்ளபடியே பிரகாச முடையதாய் நிலைத்

திருக்கின்றது. இவ்வாறு அவ்வியபிசாரியாயி ருத்தலால் ஆத்மா சத்ரூபமாம். ஆத்மா எத னால் சத்ரூபமாயிருக்கின்றதோ, அதனால் அது இந்த இலிங்கதேக மன்று; ஆனால் கடத்தில் பூரணமான ஜலத்தினும் அதன்கணுள்ள ஆகா யம் வேறாயிருத்தல்போல இலிங்க தேகத்தை விட வேறாயிருக்கிறது. ஆதலால்,

சிஷ்யனே! இந்த இலிங்கதேகம் நானல் லன் இது என்னுடையதுமல்ல; இது அபஞ்சீ கிருத பஞ்சமகா பூதங்களின் காரியமாம் எத னால் இந்த இலிங்கசரீரம் நானல்லவோ, அத னால் கர்த்திருத்துவ, போக்திருத்துவ, சுகதுக் கமுதலிய முற்கூறிய இவற்றின் தர்மங்களும் நானல்லன்; என்னுடையவு மல்ல; ஆனால் இவை இலிங்கதேகத்தி னுடையவாம்; இவற் றை யறியும்திருஷ்டாவாகிய நான் இவற்றை விட வேறாயிருக்கிறேனென்று நிச்சயஞ்செய்க.

இங்கே இது விசேடமாம்:—

“ஜ்ஞாதாரம் மநஸாம் வித்தி ஸர்வம் மநஸைவ து | ஸாக்ஷிணந்து ஸாமாந்யம் வித்தி ஏநஃ ப்ரஹ்மைவ ச || க ||

இந்த்ரியாணி ஹயாநாஹுர்விஷயாம்ஸ்தேஷு கோசராந் | ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர்மநீஷிண: || உ ||

“ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்”,

“யத்வாசாநப்யுதிதம் யேந வாகப்யுத்யதே | ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே || க ||

யந்மநஸா ந மநுதே யேநாஹுர்மநோ மதம் | ததேவ || உ. ||

யச்சக்ஷுஷா ந பஶ்யதி யேந சக்ஷூம்ஷி பஶ்யதி | ததேவ || ௩ ||

யச்ச்ரோத்ரேண ந ஶ்ருணோதி யேந ஶ்ரோத்ரமிதம் ஶ்ருதம் | ததேவ || ௪ ||

யத்ப்ராணேந ந ப்ராணிதி யேந ப்ராண: ப்ரணீயதே | ததேவ || ௫ ||

" நசிகேதுவே! ஆத்மாவை ரதிகனென்றும், சரீரத்தை ரதமென்றும், புத்தியினைச் சாரதியென்றும், மனதினை கடிவாளமென்று மறிக (க).

இந்திரியங்களைக் குதிரையென்பர். [பிராணனின்றி இந்திரியங்களுக்குப் பிரவிருத்தி சம்பவியாமையால், ஈண்டு இந்திரியசப்தத்தினால் அவற்றின் எஜமானனாகிய பிராணவடிவ ரதத்தின் பந்தனமும் கொள்ளப் படுகின்றது.] அவற்றில் சப்தமுதலிய விஷயங்களை வழியென்பர். இந்திரியத் தினையும் மனதோடு கூடிய ஆத்மாவினையும் பண்டிதர் "போக்தா" வென்று கூறுவர். [கேவலஆத்மாவினையன்று.] (உ)."

"சுரோத்திரத்திற்குச் சுரோத்திரம்." "எந்தப் பிரஹ்மம் வாக்கினால் சொல்லப்படுகிறதில்லையோ, எந்தப் பிரஹ்மத்தினால் வாக்குப் பிரகாசிக்கப்படுகின்றதோ, அதனையே நீ பிரஹ்மமென்றறி. எந்த இவர்களை (பிரஹ்மவிஷ்ணு முதலியோர்களை) ஜனங்கள் உபாசிக்கின்றார்களோ, அவர்கள் பிரஹ்மமாகார் [ஈண்டுவாக்குச் சகலகர்மேந்திரியங்களுக்கும் உபலக்ஷணமாம்] (க) எதனைமனதினால் (பலவியாப்தியினால் உலகம்) மனனஞ் செய்கிறதில்லையோ, எது மன

தை விஷயஞ் செய்திருக்கின்றதோ, அதனையே நீ பிரஹ்ம மென்றறி. [மற்றைப் பொருள்கள் எல்லாவிடத்தும் சமானமாம். ஈண்டுமனம், புத்திமுதலியவற்றிற்கு உபலக்ஷணமாம்] (உ). எதனைச்சக்ஷுவினால் காண்கிறதில்லையோ, எதனால்சக்ஷுக்களைக் காண்கின்றனரோ, அதனையே நீ பிரஹ்ம மென்றறி ...ங. எதனைச் சுரோத்திரத்தினால் கேட்கிறதில்லையோ, எதனால் இச்சுரோத்திரம் விஷயிக்கின்றதோ, அதனையே நீ பிரஹ்மமென்றறி .. ச. எதனைப் பிராணனால் (பிராண விருத்தியோடு கூடிய கிராண இந்திரியத்தினால்) விஷயஞ்செய்கிறதில்லையோ. எதனால் (பிரகாசிக்கப் படுவதாயிருத்தலால்) பிராணன் (கிராணன்) தனது விஷயத்தை நோக்கி செலலுகின்றதோ, அதனையே நீ பிரஹ்மமென்றறிக. [ஈண்டுச் சக்ஷுமுதலிய மூன்று இந்திரியங்களும் துவக்கு இரசனைகளின் உபலக்ஷணமாம்] ....ரு." என்றல் முதலிய சுருதிகளாலும்,"

"ஐந்த்³ரியேப்⁴ய: பரா ஹ்யர்தா² அர்தே²ப்⁴யஶ்ச பரம் மந: । மநஸஸ்து பரா பு³த்³தி⁴ர்பு³த்³தே⁴ராத்மா மஹாந் பர: ॥

இந்திரியங்களினும் வேறும் விஷயங்கள். விஷயங்களின் வேறும் மனம். மனதினும் வேறும் புத்தி. புத்தியினும் வேருயிருப்பது எதுவோ அதுஆத்மாவாம்.'' என்றல் முதலிய ஸ்மிருதிகளாலும், லிங்கமோ ஜடமும் கிரியமும் விகாரியும் விநாசியும் மனோபுக்திகளுக்கு விஷயமுமாம், ஜாக்கிர சொப்பனங்களில் அதனிருப்பையும் சுழுத்தியில் அதன் இன்மையினையும் அறிகின்ற ஆத்மாவோ அவற்றின் விலக்ஷணமாம். என்றல் முதலிய யுக்தியைப் போதிக்கும் (ஆறு) லிங்கங்களாலும் ஆத்மா லிங்கதேகத்தினும் வேருகச் சித்திக்கின்றது.

சுகூ. இப்போது காரண தேகத்தின் சொரூபத்தோடு அதனின் ஆத்மா வேறென்பதைக் கூறுகின்ருர்:—

சிஷ்யனே! நீ ஆத்மாவை அறியாய். அறியாததினுல் "நான் அஞ்ஞானி'' என்றுதன்னை மதிக்கின்ருய். இதுவே அஞ்ஞானமென்றறி அவ்வஞ்ஞானம் காரணதேகமாம்

"ஆத்மா இல்லை'' என்பது அசத் (அசத்துவாபாதக) ஆவரணமும், "ஆத்மா தோற்றவில்லை'' யென்பது அபான (அபானுபாதக) ஆவரணமுமாம்.

இவ்விருவகை ஆவாணத்திற்கு ஏதுவாந் தன்மையும், சிதாபாசனோடு கூடிய ஸ்தூல சூக்ஷ்மசரீரங்களும் கர்த்திருத்துவ முதலிய அவற்றின் தர்மங்களுமாகிய பிரபஞ்சவடிவ விக்ஷேபத்திற்கு ஏதுவாந் தன்மையுமாகிய இரண்டும் அஞ்ஞானவடிவ காரணதேகத்தின் தர்மங்களாம் அக்காரணதேகம் ஆத்மாவை யறிதலால் நாசமாகின்றது.

ஸ்தூலதேக லிங்கதேகங்களுக்கு ஏதுவா யிருத்தலின் இவ்வஞ்ஞானம் காரணதேக மெனப் படுகின்றது.

அக்காரணதேகம் எதனால் உனது திருசிய மா (உன்னாற்காணப்படுவதா) யிருக்கின்றதோ, (எதனால்) நீ எப்போதும் இதன் திருஷ்டாவா (இதனைக் காண்பவனா) யிருக்கின்றாயோ, அத னால் நீ இக்காரணதேகத்தின் வேறாகிய அதி ருசிய வடிவமாயிருக்கின்றாய்.

ஆதலால் சிஷ்யனே! நான் காரணதேக மல்லன் இது என்னுடைய தன்று; இது அஞ் ஞானத்தின் அம்சமாம். எதனால் இக்காரண தேகம் யானல்லவோ, அதனால் இதன் தர்ம மாகிய முற்கூறிய ஆவரண விக்ஷேபங்களுக்கு

ஏதுவா தற்றன்மை முதலியனவும் நானல்லன் என்னுடையவுமல்ல, காரணதேகத்தினுடையனவாம், யான் இதனை அறியும் திருஷ்டா இதனின் வேறாயிருக்கின்றேன் என்று நிச்சயஞ்செய்க.

எங்ஙனம் ஜீவர்களது வியஷ்டியாகிய மூன்று சரீரங்களினும் ஜீவசாக்ஷி வேறு பிரித்தறிவிக்கப்பட்டதோ, அங்ஙனமே ஈசுவரனது சமஷ்டி மூன்றுசரீரங் களினின்றும் ஈசுவர சாக்ஷி (பிரஹ்மம்) ஈண்டு வேறுபிரித்தறிவிக்கத்தக்கதாம். அங்ஙனமாயினும், அதுமுன் மூன்றாவது உபதேசத்தில் அறிவிக்கப்பட்டமையால் ஈண்டறிவிக்கப்படவில்லை.

ஈண்டு இது விசேஷமாம்:—

"ஸுஷுப்திகாலே ஸகலே விலீநே
தமோபிபூத: ஸுகரூபமேதி ||

சுழுத்தி காலத்தில் சகலமும் (ஸ்தூல சூக்ஷ்மப்பிரபஞ்சமும்) ஒடுங்கவே இருளால் (அஞ்ஞானத்தால்) ஆவரிக்கப்பட்டவனாய்ச் சுகரூபத்தை யடைகின்றான்" என்றல் முதலிய சுருதிவாக்கியங்களால் ஜகத்திற்குக்

காரணமும் ஞானத்தால் ஜீர்ண (நஷ்டமாகு தலு மாயிருத்தலால், காரணசரீரமாகிய அஞ்ஞானம் சுழுத்தியவஸ்தையிற் ரேற்று கின்றது. அதனுல் ஆவரிக்கப்பட்ட சிதா நந்தரூபம் எதுவோ, அதன் ஞாதா [சுழுத்தி யினின்றும் எழுந்த புருடனுக்குண்டாகும் "யான் ஒன்றும் அறியேன்" என்னும் வடிவ ஸ்மிருதிக் தக் காரணரூபசாமாநிய சேதனமா கிய சுழுத்தியஞ்ஞானத்தின் அநுபவவடிவப் பிரகாசகம்] ஆத்மாவாம். அது அந்தக்காரண தேகவடிவ அஞ்ஞானத்தினும் வேறெனச் சித் திக்கின்றது.

சொப்பனத்தில் ஸ்தூலதேகம் விளங்கா திருக்க ஆத்மாவிளங்குதல் அந்வயமாம். ஆத் மா விளங்கவே ஸ்தூலதேகம் விளங்காமை விய திரேகமாம் அங்ஙனமே சுழுத்தியில் லிங்கதே கம் விளங்காதாகச் சாக்ஷி விளங்குதல் அந்வய மாம் லிங்கம் விளங்காமை வியதிரேகமாம். அங்ஙனமே சமாதியில் காரணதேகம் விளங்கா தாகச் சமாதிக்குச் சாக்ஷியாயிருத்தலால் ஆத்

மாவிளங்குதல் அந்வயமும், காரணதேகம் விளங்காமை வியதிரேகமுமாம். இவ்வந்வய வியதிரேகங்கள் தேகத்தையும் ஆத்மாவை யும் பேதிப்பனவாம்.

தேகத்திரயாத்ம விவேசன (விவேக) வர்ணனமென்னும்

ஐந்தாவது உபதேசம் முடிந்தது.



# ஆறாவது உபதேசம்

## அவஸ்தாத்திரய ஆத்மவிவேசனம்.

### ௬ சிஷ்யன் சொல்லுகின்றான்

"ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்த்யாதி ப்ரபஞ்சம் யத்ப்ரகாஸதே | தத்ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா ஸர்வபந்தை: ப்ரமுச்யதே ||

ஜாக்கிரசொப்பன சுழுக்தி முதலிய பிரபஞ்சத்தினை எது பிரகாசிக்கின்றதோ, அந்தப் பிரஹ்மம் நான் என்றறிந்து சர்வபந்தங்களினின்றும் மிக முக்தனாகின்றான்"

(க) "தஸ்ய த்ரய: ஆவஸதா: த்ரய: ஸ்வப்நா:

இந்த ஜீவனுக்கு மூன்றவஸ்தைகளுண்டு. அவை மூன்றும் சொப்பனங்களாம் (மித்தையாம்)." (உ) இவை முதலிய சுருதிகளாலும்,

"த்ரிஷு தாமஸு யத்போக்யம் போக்தா போகஸ்ச யத்பவேத் | தேப்யோ விலக்ஷண

ஸாக்ஷீ விநாசோஹம் ஸதாசிவ: ||

ஜாக்கிர முதலிய மூன்றிடங்களிலுமுள்ள போக்கியம் போக்தா போகமென்னும் திரிபுடிகளின் விலக்ஷணமான சின்மாத்திர சாக்ஷி வடிவ யான் சதாசிவனாயிருக்கின்றேன்'' (ந) என்னும் சூதசங்கிதையின் வாக்கியத்தினாலும்,

"புத்தேர்ஜாக்ரத் ஸ்வப்ந: ஸுஷுப்திரிதி வ்ருத்தய: | தா யேநைவாநுபூயந்தே ஸோऽத்யக்ஷ: புருஷ: பர: ||

புத்திக்கு ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்பன விருத்திகளாம். அவை எவனால் அநுபவிக்கப்படுகின்றனவோ, அந்தச் சாக்ஷியாகிய புருஷன் பரனும் (பரமாத்மாவாம்). (ச)'' என்னும் ஸ்ரீ பாகவதத்தின் ஏழாவது ஸ்கந்தத்தினுள்ள வாக்கியத்தினால் மூன்று அவஸ்தைகளினின்றும் பிரிக்கப்பட்ட ஆத்மா பிரஹ்மவடிவமாக நிச்சயிக்கப்படுகின்றது என்னும் அபிப்பிராயத்தினால் சிஷ்யன் வினவுகின்றான்:—

ஐயனே ! சொல்லப்பட்ட இம்மூன்று தேகங்களும் திருசியமாயிருத்தலின் ஜடமாம்; நான் இவற்றின் திருஷ்டாவாகிய சேதனன்; ஆதலால் இம்மூன்று தேகமும் நானல்லன் என்னும் தமது இரகசியமான அபிப்பிராயத்தை யான் அறிந்தேன். இப்போது மூன்று அவஸ்தைகள் எவ்வாறிருக்கின்றன? அதனைச் சொல்லுதல் வேண்டும்.

## ருக. மூன்று அவஸ்தைகளும் அவற்றோடு அத்மாவிற்குள்ள பேதமும்.

க. ஜாக்கிரம், உ. சொப்பனம், ந. சுழுத்தி என்பன மூன்றவஸ்தைகள். இம்மூன்றவஸ்தைகளும் நீயல்லை; அவை உன்னுடையவுமல்ல; இம்மூன்றவஸ்தைகளும் கிரமமாக மூன்று தேகங்கட்குரியனவாம். அவற்றில் ஸ்தூலதேகத்தின் அவஸ்தை ஜாக்கிரமும், சூக்ஷ்மதேகத்தின் அவஸ்தை சொப்பனமும், காரணதேகத்தின் அவஸ்தை சுழுத்தியுமாம். இது இவற்றின் கிரமமாம்

## ருஉ. ஜாக்கிராவஸ்தையின் வர்ணனம்.

எந்த அவஸ்தையில் மனிதன் ஜாக்கிரத்தை

(விழிப்பை) அடைந்து வியவகாரம் செய்கின்ருனே, அது ஜாக்கிராவஸ்தையாம்.

அந்த ஜாக்கிராவஸ்தை எவ்வகைத்தாமெனின், எதனிடத்தில் பதினான்கு திரிபுடிகளால் எல்லா வியவகாரங்களும் உண்டாகின்றனவோ, அத்தன்மைத்தாம்.

இங்கு மீண்டும் எதில் வியாவகாரிகப் பதினான்கு திரிபுடிகளினால் எல்லா வியவகாரமுமுண்டாகின்றதோ, அது ஜாக்கிராவஸ்தையெனப்படுகின்றது என்று ஜாக்கிராவஸ்தையின் ஸ்தூலலக்ஷணம் சூசிப்பிக்கப்பட்டது. முன்னர் "எதில் புருஷன் விழிக்கின்ருனே" என்னும் வாக்கியத்தினால் இவ்வர்த்தம் சூசிப்பிக்கப்பட்டதாகின்றது :—

௧. தேவதைகளுக்கும் மனிதர்களுக்கும் ஜாக்கிராவஸ்தையுண்டு.

௨. பசு பக்ஷி முதலியவற்றிற்குச் சொப்பனாவஸ்தை யுண்டு.

௩. மரம் மலை முதலியவற்றிற்குச் சுழுத்தியவஸ்தை யுண்டு.

(க) அவற்றில் மரங்களுக்கு க்ஷீண (குறைந்த) சுழுத்தியுண்டு.

(உ) மலை முதலியவற்றிற்குக் காட (அத்தமான) சுழுத்தியுண்டு.

எதினின்றும் விழிப்பித்தலின்றித் தானே விழிக்கின்றதோ, அது க்ஷீண சுழுத்தியெனப் படுகின்றது

எதனினின்றும் விழிப்பித்தாலன்றி விழிக்கிறதில்லையோ, அது காடசுழுத்தி யெனப்படுகின்றது.

க. சுபேச்சை, சுவிசாரணை, தநுமானசி என்னும் இம்மூன்று ஞானபூமிகள் பரியந்தம் அப்பியாசமுடைய ஜிஞ்ஞாசுக்களுக்கு ஜாக்கிராவஸ்தை யுண்டு.

உ. சத்துவாபத்தி யெனப்பெயரிய நான்காவது பூமியினையுடைய பிரஹ்மவித்தென்னும் ஜீவன்முத்தனாகிய வித்வானுக்கு,

(க) தனது சொரூபத்தின் அவிசார காலத்தில் ஜாக்கிரத்தைப் போன்ற அவஸ்தை யிருக்கின்றது.

(உ) விசாரகாலத்தில் சொப்பனத்தினின் றும் விழித்த புருடனைப்போன்ற அவஸ்தை யிருக்கின்றது.

ரு. அசம்சத்தியென்னும் ஐந்தாவது பூமி யினையுடைய பிரஹ்மவித்துவானாகிய ஜீவன் முத்தனுக்கு,

(க) சமாதியினின்றும் விழித்த காலத்தில் சொப்பனத்தினின்றும் விழித்தவனைப் போ ன்ற அவஸ்தையிருக்கின்றது.

(உ) சமாதிகாலத்தில் சுழுத்தி போன்ற அவஸ்தை யிருக்கின்றது.

சு. பதார்த்தாபாவினி யென்னும் ஆறாவது பூமியினையுடைய பிரஹ்ம வித்துவரியானாகிய புருஷனுக்கு.

(க) வெகுவாய்ச் சுழுத்திபோன்றதும்,

(உ) ஓர்காலத்துச் சொப்பனத்தினின்றும் விழித்ததைப்போன்றதுமாகிய அவஸ்தையி ருக்கின்றது.

எ. துரிய மென்னும் ஏழாவது பூமியி லேறிய பிரஹ்ம வித்துவரிஷ்ட ஜீவன்முக்த னுக்கு எப்போதும் காடசுழுத்தியைப்போ ன்ற அவஸ்தை யிருக்கின்றது.

இவ்வெல்லா அவஸ்தைகளும் ஞானவடிவ விருத்தியினவாம். ஏனெனின்,

(க) க்ஷேபம் (லோகவாசனை சாஸ்திரவாசனை தேகவாசனை யென்னும் மூன்று இராஜஸ வாசனைகளாலும் உற்பூதமான ராகத்துவேஷ முதலியவற்றோடுகூடிய தன்மை),

(உ) மூடத்துவம் (நித்திரை),

(ங) விக்ஷேபம் (க்ஷேபத்தினின்றும் விசேஷமான சித்தத்திற்கு ஒருகாலத்துத் தியானத்தோடுகூடிய தன்மை),

(ச) ஏகாக்கிரத்தன்மை (ஒரு விஷயவடிவாந்தன்மை),

(ரு) நிரோதம் (அநாத்மாகாரத்தை விட்டு ஆத்மாவில் நிலைத்தல், அல்லது தனது உபாதானமாகிய சத்துவ குணத்தில் சித்தம் ஒடுங்குதல்),

இவ்வைந்து பூமிகளும் யோகசாஸ்திரத்தில் புத்தியினுடையனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. எதனால் ஜாக்கிர முதலியனவும் உபேக்ஷை முதலியனவுமாகிய அவஸ்தைகள் அவற்றுள் அடங்கியனவா யிருக்கின்றனவோ, அதனால் இவைகளும் புத்தியின் அவஸ்தைகளேயாம்; ஆத்மாவினுடைய வன்று. ஆத்மா

இவற்றிற்குச் சாக்ஷியாய் என்றும் இவற்றின் வேறாயிருக்கின்றதென்றறிக.

## ருங. பதினான்கு திரிபுடிகளின் வர்ணனம்.

க-ரு. ஐந்து ஞானேந்திரியங்கள்,

சு-கo. ஐந்து கன்மேந்திரியங்கள்,

கக-கச. மன புத்தி சித்த அகங்காரங்களாகிய நான்கு அந்தக்கரணங்கள் என்னும் இப்பதினான்கு இந்திரியங்களும் அத்தியாத்மமாம்.

க-ரு. திசை, வாயு, சூரியன், வருணன், அசுவினிகுமாரரென்னும் ஐவரும் கிரமமாக ஞானேந்திரியங்களின் தேவதைகளாம்.

சு-கo. அக்கினி, இந்திரன், உபேந்திரன் பிரஜாபதி, மிருத்தியு என்னும் ஐவரும் கன்மேந்திரியங்களின் தேவதைகளாம்.

கக-கச. சந்திரன், பிரஹ்மா, வாசுதேவன் (க்ஷேத்திரஞ்ஞன்), ருத்திரன் என்னும் நால்வரும் அந்தக்கரணத்தின் தேவதைகளாம்.

இப்பதினான்கு தேவதைகளும் அதிதெய்வங்களாம்.

க-ரு. சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்களின் விஷயங்களாம்.

சா-க0. வசனம், ஆதானம், கமனம், ரதி, மலநீக்கம் என்னும் ஐந்தும் கர்மேந்திரியங்களின் விஷயங்களாம்.

கக-கச. சங்கற்பவிகற்பம், நிச்சயம், சிந்தனம், அகம்பாவம் என்னும் நான்கும் அந்தக்கரணத்தின் விஷயங்களாம்.

இச்சப்தமுதலிய பதினான்கு விஷயங்களும் அதிபூதங்களாம்.

இவ்வாறு ஒவ்வொரு இந்திரியமும் அத்தியாத்மமாம். அதன் ஒவ்வொரு தேவதையும் அதிதெய்வமாம். அதன் ஒவ்வொரு விஷயமும் அதிபூதமாம்.

இவ்வாற்றால் இப்பதினான்கு திரிபுடிகளுக்கும் பேதமுண்டு.

ருச. இவ்வாறு ஜாக்கிர அவஸ்தையின்

சொரூபத்தைக்கூறி • இனி அதன் சாமக்கிரியினைக் கூறுகின்றார்:—

ஜாக்கிர அவஸ்தையில் சிதாபாச வடிவ ஜீவனுக்கு

க. நேத்திரம் ஸ்தானம்.

ஜாக்கிரத்திலும் அது சரீரமுழுவதிலும் வியாபித்திருக்கின்றது. அங்ஙனமாயினும், அதன் விசேஷபாகம் நேத்திரத்தி லிருத்தலால் நேத்திரம் ஸ்தான மெனப்படுகின்றது.

உ. கிரியை சத்தியாம்.

௩. வைகரி வாக்காம்.

௪. ஸ்தூலம் போகமாம்.

௫. குணம் சத்துவமாம்.

௬. விசுவனென்னும் பெயரையடைந்த இந்த ஜீவன் ஜாக்கிரத்தின் அபிமானியாம்.

௫௫. இப்போது மற்ற அவஸ்தைகளில் ஆத்மாவின் அந்வயத்தையும் ஜாக்கிரத்தின் வியதிரேகத்தையும் கூறுகின்றார்:—

க. சொப்பன சுழுத்திகளிலுள்ள ஜாக்கிராவஸ்தையின் அபாவம் எதுவோ அது அதன் வியதிரேகமாம்.

உ. சிஷ்யனே, அதற்கு நீ சாக்ஷியாயிருக்கின்றாய், அது எப்போதும் சொரூபமாகச் சத்தை யுடையதாம். இது அங்குள்ள உனது அந்வயமாம்.

இதனாலே நீ ஸ்தூலதேகத்தோடுகூடிய ஜாக்கிர அவஸ்தையினும் வேறாயிருக்கின்றாய்.

க. புஷ்பமாலையில் நுழைந்துள்ள நூலினைப்போலத் தேகத்தோடுகூடிய சர்வ அவஸ்தைகளிலும் ஆத்மாவின் நுழைவுண்டு. அது ஆத்மாவின் அந்வய மெனப்படுகின்றது.

உ. புஷ்பங்களைப்போல ஒன்றற்கொன்றேனும், தனது அதிஷ்டானமாகிய ஆத்மாவினோடேனும் தேகத்தோடுகூடிய மூன்று அவஸ்தைகளுக்கும் உள்ள பேதம் எதுவோ அது தேகத்தோடுகூடிய அவஸ்தைகளின் வியதிரேகம் எனப்படுகின்றது.

ஈண்டு வியதிரேகம் என்பது அபாவத்திற்கும் அந்வயமென்பது பாவத்திற்குமாம்.

## ருசு. சொப்பனவஸ்தை வர்ணனம்.

ஜாக்கிர அவஸ்தையில் சிரவணத்தினாலேனும் நேத்திரத்தினாலேனும் பிற இந்திரியங்

களினாலேனும் அநுபவிக்கப்பட்ட விஷயங்க ளின் ஞானத்தாற் றோன்றும் வாசனைகள் எவையோ அவை மயிரின் நுனிப்பாகம்போ லச் சூக்ஷ்மமாய்க் கண்டத்திலுள்ள ஹிதை யென்னும் நாடியி லிருக்கின்றன

சம்ஸ்காரவடிவ வாசனையின் சப்தமுதலிய விஷயங்களும் அவற்றின் ஞானமுமாகிய இரண்டு வடிவங்களும் எந்த நித்திரைக்கா லத்தி லுண்டாகின்றனவோ, அதனைச் சொப் பனாவஸ்தை யெனல்வேண்டும்.

## ௫எ. சொப்பனாவஸ்தையின் சாமக்கிரி.

சொப்பனாவஸ்தையில் சிதாபாச வடிவ ஜீவ னுக்கு,

க. கண்டம் ஸ்தானம்

௨. பலம் (சக்தி) ஞானம்.

௩. மத்திமை வாக்கு.

௪. சூக்ஷமம் (வாசனாமயம்) போகம்.

௫. குணம் ராஜசம்.

௬. தைஜசனென்னும் பெயரையடைந்த இச்சீவனே அவ்வவஸ்தைக்கு அபிமானியாம்.

இது சொப்பனத்தின் சாமக்கிரி சொல்லப் பட்டது.

ருஅ. இனிச் சொப்பன சம்பந்தியான அந்வய வியதிரேகங்களைக் கூறுகின்றார் :—

க. ஜாக்கிர சுழுத்திகளிலுள்ள சொப்பனு வஸ்தையின் அபாவம் எதுவோ அது அதன் வியதிரேகமாம்.

உ. அந்த வியதிரேகத்தின் சாக்ஷியாகிய நீ எப்போதும் தனது சொரூபமாகச் சத்தை யுடையவனு யிருக்கின்றாய்.

இதுவே அங்குள்ள உனது அந்வயமாம்.

ஆதலால் நீ இதனின் வேறு யிருக்கின்றாய்.

## ருகூ. சுழுத்தியவஸ்தையின் வர்ணனம்.

எந்த அவஸ்தையினின்று விழித்து, "யான் ஒன்றும் அறியேன்" என்று நித்தி ரைக்காலத்தில் அநுபவிக்கப்பட்ட அஞ்ஞா னத்தின் ஸ்மரணவடிவ ஞான முண்டாகின்ற தோ, அத்தன்மைய காட (ஆழமான) நித்தி ரையினைச் சுழுத்தி யென்பர்.

## கூ0. சுழுத்தியவஸ்தையின் சாமக்கிரி.

சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு,

க. இருதயம் ஸ்தானம்.

உ. பலம் (சக்தி) திரவிய வடிவம்.

(க) எதனுல் ஆண்டுக் கிரியை வடிவமும் ஞான வடிவமுமாகிய வியவகாரத்தின் அபாவ மிருக்கின்றதோ,

(உ) எதனுல் அஞ்ஞானவடிவத் திரவிய மாகிய வஸ்துமாத்திரத்தின் இருப்பு இருக் கின்றதோ, அதனுல் ஆண்டுத் திரவியம் சக்தி யெனப்படுகின்றது. அல்லது ஆண்டு அஞ் ஞானத்தில் திரவியமாகிய ஆகாய முதலிய பூதங்களை உண்டாக்குதலின் சாமர்த்திய வடிவ சக்தி எதுவோ அது திரவியசக்தி யெனப்படு கின்றது

ரு. வாக்கு பைசந்தி (இதயத்திலுள்ளது),

சு. ஆநந்தம் போகம்,

ரு. குணம் தமசு.

சு. பிராஞ்ஞனென்னும் பெயரையடைந்த ஜீவன் அந்தச் சுழுத்திக்கு அபிமானியாம்.

இது சுழுத்தியின் சாமக்கிரியாம்

## ௬௧. இப்போது சுழுத்தி சம்பந்தியான அந்வய வியதிரேகங்களைக் கூறுவாம்:—

க. ஜாக்கிர சொப்பனங்களிலுள்ள சுழுத்தியின் அபாவம் எதுவோ அது ஆண்டு அதன் வியதிரேகமாம்.

உ. அந்த வியதிரேகத்திற்குச் சாக்ஷியாகிய நீ எப்போதும் சொரூபமாகச் சத்தையுடையவனு யிருக்கின்றாய். இது ஆண்டுள்ள உனது அந்வயமாம்.

இதனுற்றான் நீ சுழுத்தியவஸ்தையின் வேறாயிருக்கின்றாய். ஜீவனது மூன்றவஸ்தைகளினும் ஆத்மா வேறுபடுத்தி அறிவிக்கப்பட்டது. அங்ஙனமே ஈசுவரனது மூன்றவஸ்தைகளினின்று பிரஹ்மமும் ஈண்டு வேறுபடுத்தி அறிவிக்கப்படவேண்டியதாம். அங்ஙனமாயினும், அது மூன்றாவது உபதேசத்தில் அறிவிக்கப்பட்டமையான் ஈண்டு அறிவிக்கப்படவில்லை.

அவஸ்தாத்திரய ஆத்ம விவேசனமென்னும்
ஆறவது உபதேசம் முடிந்தது.

---

# ஏழாவது உபதேசம்.

## பஞ்சகோச ஆத்ம விவேசன வர்ணனம்.

### ௬௨. சிஷ்யன் சொல்லுகின்றான்:—

ஐயனே, மூன்று அவஸ்தைகள் யானல்லன்; இவை என்னுடையவுமல்ல என்னும் தமது அபிப்பிராயத்தை யான் அறிந்தேன்.

இனிப் பஞ்சகோசங்களின் பெயரையும் வடிவத்தையும் கிருபைசெய்து சொல்லுதல் வேண்டும்

### ௬௩. ஸ்ரீ குரு சொல்லுகின்றார்:—

௧. முதலாவது அன்னமயம்.

௨. இரண்டாவது பிராணமயம்.

௩. மூன்றாவது மனோமயம்.

௪. நான்காவது விஞ்ஞானமயம்.

௫. ஐந்தாவது ஆநந்தமய கோசம்

இவை பஞ்ச * ௮உ கோசங்களின் பெயர்களென்றறிக.

* ௮உ. கோசமென்பது கோசகார மென்னும் புழுவின் முட்களினால் செய்யப்பட்ட கூட்டிற்காம்

இப்போது பஞ்சகோசங்களின் ஆகாரத்தைச் சொல்லுதலோடு அவற்றின் அநாத்மத்தன்மையையும் கூறுகின்றார்.

க. (க) மாதாபிதாக்களுண்ட அன்னத்திலாகிய இரஜ(மாதாவின் உதிர)த்தினுலும் வீரியத்தி (பிதாவின் ரேதஸி)னுலும் தாயின் உதரத்தில் (வயிற்றில்) உற்பத்தியாகின்றது.

(உ) பிறப்பிற்குப்பின் பால்முதலிய அன்னத்தால் வளருகின்றது.

---

அது எங்ஙனம் அப்புழுவிற்குக் கிலேசத்திற் கேதுவாயிருத்தலின் கோசமெனப்படுகின்றதோ, அங்ஙனமே இப்பஞ்சகோசங்களும் ஆத்மாவிற்கு ஆவரணவாயிலாகக் கிலேசத்திற்கு ஏதுவாயிருத்தலின் கோசமெனப்படுகின்றன. அல்லது கத்தியின் உறையும் பணத்தின் பொக்கிசமும் கிரமமாகக் கத்தியையும் பணத்தையும் மறைப்பனவாயிருத்தலின் கோசமெனப்படுகின்றன. அங்ஙனமே இப்பஞ்சகோசங்கள் எதனுல் ஆத்மாவை மறைப்பனவா யிருக்கின்றனவோ அதனுற் கோசங்களாம். எங்ஙனம் நீலம் பீத (மஞ்சள்) முதலிய நிறங்களின்பேரில் வைக்கப்பட்ட ஸ்படிகமுதலியன அவ்வவ்வடிவமாகத் தோற்றுகின்றனவோ அதனுல் அவை அவற்றின் (ஸ்படிகமுதலியவற்றின்) ஆவரணமாமோ அங்ஙனமே பஞ்சகோசங்களிலுள்ள ஆத்மா அவ்வவ்வடிவமாக விளங்குகின்றது. ஆதலால் அது (கோசம்) இதற்கு ஆவரணமாம் விசாரஞ்செய்யின் அது அவற்றின் வேறாய் விளங்குகின்றது.

(௩.) மரணத்திற்குப்பின் அன்னமாகிய பிருதிவியில் ஒடுங்குகின்றது.

இத்தன்மைய ஸ்தூலதேகம் எதுவோ அது அன்னமயகோச மெனப்படுகின்றது.

இவ்வன்னமயகோசமாகிய பக்ஷிக்கு இதுவே (பிரசித்தமாயுள்ளதே) சிரசாம்; கிழக்குத்திசைக்கு எதிர்முகமாகிய புருஷனுடைய இது (வலது புஜம்) தக்ஷிண (வலது) பக்ஷமாம் (சிறகாம்); இது (இடது புஜம்) உத்தர (இடது) பக்ஷமாம்; இது (மத்தியதேகத்தின் பாகம், அங்கங்களின் ஆத்மாவா (சொரூபமா)ம்; இது (நாபிக்குக் கீழ் அங்கம்) புச்ச (வால்) வடிவப் பிரதிஷ்டையாம் (ஆதாரமாம்).

௨. ஐந்து கன்மேந்திரியங்களும் ஐந்து பிராணனுமாகிய பத்துத் தத்துவங்களுஞ் சேர்ந்து பிராணமயகோச மெனப்படும்.

இப்பிராணமய கோசமாகிய பக்ஷிக்குப் பிராணனே சிரமும், வியானன் தக்ஷிணபக்ஷமும், அபானன் உத்தரபக்ஷமும், ஆகாயம் (சமானவாயு) ஆத்மாவு (மத்தியபாக சொரூபமு) மாம். பிருதிவி புச்ச (வால்) வடிவப் பிரதிஷ்டையாம். எதனுல் அத்தியாத்ம (தே

கத்தின்கண்ணிருப்பது) வடிவப் பிராணனுக்குப் பிருதிவிவடிவ தேவதை ஸ்திதிக்கு ஏதுவாயிருத்தலின் தாரணஞ்செய்வதா யிருக்கின்றதோ அதனால் பிருதிவி பிரதிஷ்டை யெனப்பட்டது.

௩. ஐந்து ஞானேந்திரியங்களும் மனமுமாகிய ஆறு தத்துவங்களும் சேர்ந்து மனோமய கோச மெனப்படும்.

இம்மனோமயவடிவ பக்ஷிக்கு எஜுர்வேதமே சிரமும், இருக்குவேதம் தக்ஷிணபக்ஷமும், சாமவேதம் உத்தரபக்ஷமும், ஆதேசம் (உபநிஷதமுதலிய பிராஹ்மணபாகம்) ஆத்மாவாம்; அதர்வாங்கிரசம் (அதர்வவேதம்) புச்ச வடிவப் பிரதிஷ்டையாம்.

வர்ண உச்சாரத்தின் (ஸ்தானம்) பிரயத்தனம், நாதம், ஸ்வரம் என்னுமிவற்றால் நிறைந்த பதத்தினையும் வாக்கியத்தினையும் விஷயஞ்செய்வதாகிய அவற்றின் (ஸ்தானமுதலியவற்றின்) சங்கற்பவடிவ அவற்றின் பாவனையுடைய மனதின் விருத்தி எதுவோ, அது சுரோத்திர முதலிய கரணங்களின் வாயிலாக எஜுர்வேதத்தின் சங்கேதத்தால் விசிஷ்டமாய் "எஜுர் வேதம்" என்று சொல்லப்படுகின்றது. இவ்

வாறே இருக்குவேத முளது. இவ்வாறே சாம வேத முளது. இவ்வாற்றால் மந்திரங்களுக்கு மனோவடிவத்தன்மை யுளதாக மனதின் விருத்தியே ஆவர்த்தனஞ்செய்ய (திருப்ப) ப்படுகின்றது. இதனால் மானசஜபம் சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் மனோமயகோசத்திற்கு வேதரூபத்தன்மை தைத்திரீய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது

ச. ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியுமாகிய இவ்வாறு தத்துவங்களுஞ் சேர்ந்து விஞ்ஞானமயகோச மெனப்படும்.

இந்த விஞ்ஞானமயகோசவடிவ பக்ஷிக்குச் சிரத்தையே சிரமாம், ருதம் (சத்தியம்பேசுதற் கேதுவான விருத்தி) தக்ஷிண பக்ஷமாம், சத்தியம் (சமதரிசனம்) உத்தர பக்ஷமாம், யோகம் (சித்தத்தின் ஏகாக்கிரதன்மை) ஆத்மாவாம், மகதத்துவம் (சமஷ்டிபுத்தி) புச்சரூபப் பிரதிஷ்டையாம் (கொடிக்கு ஆதாரமாகிய பிருதிவியினைப்போலப் புத்திக்கு ஆதாரமாய) ஈண்டு மனோமயத்திற்கு வேதரூபத்தன்மையும் விஞ்ஞானமயத்திற்குச் சிரத்தாதி வடிவத்தன்மையும் சொல்லப்பட்டது. அது அதிகாரியின் மனபுத்திகளால் நிகழ்வதாயிருத்தலின் சொல்லப்பட்டது.

இத்தன்மைய பிராணன் முதலிய மூன்று கோசங்களும் இலிங்கதேகவடிவமாம்.

(க) பிராணமயம், (உ) மனோமயம், (ங) விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்களும் லிங்கதேகவடிவமேயாம். அங்ஙனமாயினும்,

(க) பிராணமயகோசம் கேவலம் இரஜோகுணத்தின் அவஸ்தையாம்.

(உ) மனோமயகோசம் இரஜோகுணத்தோடுகூடிய சத்துவகுணத்தின் அவஸ்தையாம்.

(ங) விஞ்ஞானமயகோசம் கேவல சத்துவகுணத்தின் அவஸ்தையாம்.

இவ்வாறே குணங்களினது அவஸ்தையின் பேதத்தால் ஒரே இலிங்கதேகத்தில் மூன்று கோசங்களின் கற்பனையிருக்கின்றது.

ரு. ஆத்மாவின் சொரூபவடிவ ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய பிரியமோதப் பிரமோதவடிவ விருத்திகளின் லயத்திற்கு ஸ்தானமாகிய காரணதேகம் எதுவோ அது ஆநந்தமயகோசமெனப்படுகின்றது.

(க) இஷ்டவிஷயத்தின் தரிசனத்தால் உண்டாகும் விருத்தி பிரியமாம்.

(உ) அதன் லாபத்தால் உண்டாகும் விருத்தி மோதமாம்.

(ங) அதன் போகத்தால் உண்டாகும் விருத்தி பிரமோதவிருத்தியாம்.

இவ்விருத்திகள் ஜாக்கிரசொப்பனங்களில் புண்ணிய கர்மத்தின் பலமாகிய சுகத்தின் போககாலத்தில் உதயமாகின்றன. புண்ணிய பலபோகத்தின் அபாவகாலத்தில் உண்டாகின்ற சுழுத்தி எதுவோ அதன்கண் அவ்விருத்திகள் தமது காரணமாகிய அஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றன. அவ்வஞ்ஞானம் ஆநந்தமயகோசமாம்.

இவ்வாநந்தமயகோசவடிவ பக்ஷிக்குப் பிரியவிருத்தி சிரம்; மோதவிருத்தி தக்ஷிண பக்ஷம்; பிரமோதவிருத்தி உத்தரபக்ஷம். இவ்விருத்திகளின் பிரதிபிம்பவடிவ விஷயாநந்தம் இதன் ஆத்மாவாம். பிம்பமாகிய ஆநந்தவடிவப் பிரஹ்மம் புச்சவடிவப் பிரதிஷ்டையாம் (ஆதாரமாம்).

ஈண்டு அன்னமயகோசத்திற்குப் பக்ஷம் புச்ச முதலியவற்றிற்குச் சமானமான அவயவங்கள் பிரசித்தமாம். ஆதலால் அதனது பக்ஷித்தன்மையின் உருவகமும் பிரசித்தமாம். கருவில் வார்க்கப்பட்ட உருக்கிய தாம்பிரத்தின் பிரதிமை போலப் பிராணமய முதலிய கோசங்களுக்கு உருவகம் சித்திக்கின்றது. கோசங்களில் பக்ஷியின் ஆகாரத்தைக் கற்பித்தல் எதுவோ அது பாகிய விஷயங்களின் ஆசக்தி (ஆசை)யை நிஷேதித்தற் கேதுவான புத்தியை ஆத்மாவில் நிறுத்துதற் பொருட்டாம்; உபாசனையின் விதானத்தின் பொருட்டன்று.

இவ்வாறு சொல்லப்பட்ட பஞ்சகோசங்களும் அநித்தியமும் ஜடமும் விகாரியும் வியபிசாரியும் க்ஷணிகமுமாம்.

இவற்றையறியும் ஆத்மாவாகிய நீ அலிங்கமாயிருக்கின்றாய், அதாவது இப்பஞ்சகோசங்களின் லிங்கமாகிய லக்ஷணம் எவையோ அவை யின்றியவனாயிருக்கின்றாய். ஆதலால் நீ நித்தியமும் சேதனமும அவிகாரியும் அவ்வியபிசாரியும் எப்போது முள்ளவனு மாவை.

ஆதலால் இப் * அ௩. பஞ்சகோசங்கள் நீயல்லை; ஆனால் நீ இவற்றின் வேறாயிருத்தலின் பஞ்ச கோசாதீதன்.

---

* அ௩. ஈண்டு இது விசேஷமாம்:—

க. அன்னத்தினால் உண்டாவதும் அன்னத்தினால் ஜீவிப்பதும் அன்னமின்மையால் நாசமடைவதும் தோல் நரம்பு மாமிசம் ரக்தம் எலும்பு புரீஷம் (மலம்) என்பவற்றின் ராசியு (கூட்டமு)ம், பிறப்பிற்கு முன்னும் மாணத்திற்குப் பின்னும் இல்லாததும், நியமமின்றிய சுபாவமுடையதும், அநேக வடிவினதும், ஜடமாய்க் கடங்களைப்போலக் காணப்படுகின்ற கை கால் முதலியவற்றையுடையதும், நியமத்தில் வைக்கத் தக்க துக்கராசியும், மாமிசத்தால் பூசப்பட்டதுமாகிய இந்த ஸ்தூலதேகவடிவ அன்னமயகோசம் எதுவோ அது ஆத்மாவாகத்தக்கதன்று. ஏனெனின், ஆத்மா இதற்கு விலக்ஷணமாய் நித்தியமும், சுத்தமும், உற்பத்தி நாசமின்றியதும், நியமிக்கப்பட்ட சுபாவமுடையதும், ஏகமும், சேதனவடிவமும், திருஷ்டாவும், ஷட்பாவவடிவ விகாரங்களை யறிவதும், அங்கங்களில்லாததும், சரீரத்தின் ஜீவனத்திற்கு ஏதுவும், அந்தச் சக்தியுடையதும் (சக்தியின் அதிஷ்டான) நியாமகனும், தேகம் அதன் தர்மம் அதன் கர்மம் அதன் அவஸ்தை முதலியவற்றிற்குச் சாக்ஷியும், நித்தியாபரோக்ஷமும், ஞாதாவுமா யிருக்கின்றது.

உ. ஏதனால் அன்னத்தால் நிறையச்செய்தலின் அன்னமயகோசம் பலமுடையதாய் எல்லாக்கிரியை

களிலும் பிரவிருத்தமா (முயல்வதா) கின்றதோ, அவ்வாறே வாயுவின் விகாரம் வாயுவினைப்போல வெளியும் உள்ளும் போவதும் வருவதுமாய் யாண்டும் எவ்விஷ்டனுக்காவது அநிஷ்டனுக்காவது தனக்காவது பிறருக்காவது ஒன்றும் அறியாததாய் நித்திய பரதந்திரமாயுள்ள இத்தன்மைய ஐந்து கன்மேந்திரியங்களோடுகூடிய பிராணவடிவ பிராணமயகோசம் எதுவோ அது ஆத்மாவாகத்தக்கதன்று. ஏனெனின், ஆத்மா இதனின் விலக்ஷண ஞாதாவாய் (அறிவதாய்) உள்ளும் வெளியும் பூரணமாய் நிச்சலவடிவமாயிருக்கின்றது.

ந. நான் எனது என்று வஸ்துக்களின் விகற்பத்திற் கேதுவும் பெயர்முதலிய பேதகற்பனையோடு கூடியதும் அத்தியந்தம் வலியுடையதுமாய் எது அதனின் முந்திய கோசங்களை நாற்புறத்தினும் பூரணஞ்செய்து விளங்குகின்றதோ, அத்தன்மைய ஐந்து ஞானேந்திரியங்களோடுகூடிய மனம் எதுவோ, அது மனோமயகோசமாம். இந்த மனோமயவடிவ அக்கினி ஐந்து இந்திரியவடிவ ஹோமகர்த்தாக்களால் விஷயவடிவ நெய்யின் தாரையினால் வளர்ந்து வெகு வாசனைவடிவ இந்தனங்களால் (விறகுகளால்) கொழுந்துவிட்டெரிவதாய்ப் பிரபஞ்சத்தை (பிரபஞ்சத்தின் ஜீவர்களை) எரிக்கின்றது. மனதிற்கு வேறாய் அவித்தையில்லை. பவபந்தத்திற்கு ஏதுவான அவித்தை மனமாம். அது நஷ்டமாகவே யாவும் நஷ்டமாம். அது விளங்கவே யாவும் விளங்கும். பொருளின்றிய சொப்

சங்கள் எவையோ அவை அநுபவத்தின் விஷய

யனத்தில் தனது சக்தியினால் போக்தா முதலிய சகல விசுவத்தையும் மனமே சிருஷ்டிக்கின்றது. அங்ஙனமே ஜாக்கிரத்திலும் விசேஷமில்லை. அதனால் இவை யாவும் மனதின் விலாசமாம். சுழுத்திகாலத்தில் மனம் ஒடுங்கியபோது "ஒன்றுமில்லை" என்பது சகல ஜனங்களுக்கும் பிரசித்தியாம். ஆதலால் இப்புருஷனுக்கு மனகற்பிதமே சம்சாரமாம்; வாஸ்தவமாக இல்லை. எங்ஙனம் மேகம் வாயுவினால் வருகின்றதோ, மீண்டும் அதனாலேயே செல்லுகின்றதோ, அங்ஙனமே மனதினால் பந்தம் கற்பிக்கப்படுகின்றது. தேகமுதலிய சர்வ விஷயங்களிலும் இராகத்தைக் கற்பித்து, அதனால் கயிற்றினால்கட்டப்பட்ட பசுவினைப்போலப் புருஷனைக்கட்டுகிறது. பின்னர் இதன்கண் விஷத்தைப்போல விரசத்தன்மையினால் அம்மனமே இதனைப் பந்தத்தினின்றும் விடுவிக்கின்றது. அதனால் இந்த ஜந்துக்களுக்குப் பந்தத்தைச் செய்தலிலேனும் மோக்ஷத்தைச் செய்தலிலேனும் காரணம் மனமாம். இராஜோகுண தமோகுணங்களினால் மலினமாகிய மனம் பந்தத்திற்கேதுவாம். இராஜசு தமசுகளின்றிய சுத்தமாகிய மனம் மோக்ஷத்திற் கேதுவாம். விவேக வைராக்கிய மென்னும் குணங்களின் மிகுதிப்பாட்டால் சுத்தத்தன்மையை யடைந்த மனம் விமுக்தியின் பொருட்டாகின்றது. ஆதலால் புத்திமான்களாகிய முமுக்ஷுக்களுக்கு முதலிலிருந்தே திடமாகிய அவ்விரண்டு குணங்களோடு கூடியிருத்தல் தகுதியாம்.

மாக்கப்படுகின்றன அவற்றின் வேறாய ஓர்

---

மனமென்பது மகாவியாக்கிரம். அது விஷய மாகிய வனபூமிகளில் உலாவுகின்றது. இவற்றில் (முற்கூறிய பூமிகளில்) சாதுக்களாகிய (சதாசார முடையவர்களாகிய) முமுக்ஷுக்கள் செல்லலாகாது. மனமென்ப தெதுவோ அது ஸ்தூல வடிவமாகவும் சூக்ஷ்ம (வாசனை) வடிவமாகவும் போக்தாவின் சகல விஷயங்களையும் சரீர வர்ண ஆசிரம ஜாதி பேதங்களை யும் குணக் கிரியை வடிவ ஹேதுக்களையுடைய பயன் களையும் நித்தியம் உண்டுபண்ணுகின்றது. அன்றியும் இம்மனம் அசங்க சித்ரூப இவ்வாத்மாவை விசேஷ மாய் மோகிக்கச்செய்து, தேக இந்திரிய பிராணவடிவக் கயிறுகளாற் கட்டி, "யான் எனது" என்று நிரந்தரம் தனது காரியவடிவ பலத்தின் உபயோகங்களில் சுழற்றுகின்றது. அத்தியாச தோஷத்தால் புருஷனுக் குச் சம்சாரமுண்டாகின்றது. அத்தியாசவடிவ பந்தத் தை இதுவே கற்பித்திருக்கின்றது, ஆதலால் இராஜ தமவடிவ தோஷமுடைய அவிவேகிக்கு ஜன்ம முத லிய துக்கத்திற்குக்காரணம் இதுவாம் (மனமாம்). ஆத லால் தத்துவத்தையுணர்ந்த பண்டிதர் மனதை அவித் தை யென்பர். எதனால் வாயுவினால் மேகமண்டலம் சுழல்வதுபோல விசுவம் (உலகம்) சுழல்கின்றதோ, அந்தமனதின் சோதனம் (சுத்திகரிப்பு) முமுக்ஷுவி னால் செய்யத்தக்கதாம். இது சுத்தமாகவே முக்தி கையிற்கனிபோலவாகின்றது. எந்தப்புருஷன் மோக்ஷ மொன்றில் பிரீதியினால் விஷயங்களில் இராகத்தை ஒழித்துச் சகல கர்மங்களையும்விட்டு நல்ல சிரத்தையி

ஆத்மா, கைமுதலியவற்றின் மேல் வைக்கப்

ணல் சிரவணுதிகளில் நிலைக்கின்ருனே, அவன் புத்தியின் ரஜோகுணத்தினுலாகிய சுபாவத்தினை நாசஞ் செய்கின்ருன். இத்தன்மைய இம்மனேமயகோசமும் பரமாத்மாவாகாது. எனெனின், ஆதி யந்தமுடையதாயிருக்கின்றது; பரிணுமித்தன்மை யுடையதாயிருக்கின்றது. துக்கசொரூபமா யிருக்கின்றது; திருஷ்டாவின் விஷய (திருசிய) வடிவமா யிருக்கின்றது. திருஷ்டா எதுவோ அது திருசிய வடிவத்தன்மையாகக் காணப் படுவதில்லை.

௪. பஞ்சஞானேந்திரியசகித விருத்தியோடுகூடிய கர்த்தாவடிவ புத்தி எதுவோ அது விஞ்ஞானமயகோசமாகின்றது. அது புருஷனுக்குச் சம்சாரத்திற்குக் காரணமாம். சேதனத்தினது பிரதிபிம்பத்தின் சக்தி எதில் அநுகதமா யிருக்கின்றதோ, அத்தன்மைய விஞ்ஞானமென்னும் பெயருடையதும் ஞானவடிக்கிரியையுடையதுமான பிரகிருதியின் விகாரமாம். அது நிரந்தரம் தேகம் இந்திரியம் முதலியவற்றில் அத்தியந்தம் அபிமானத்தைச் செய்கின்றது இந்த விஞ்ஞானமய கோசம் பரமாத்மா வன்ற; விகாரியும் ஜடமும் பரிச்சின்னமும் திருசியமும் வியபிசாரியும் அநித்தமுமாயிருத்தலின்.

ரு. ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தால் இழுக்கப்பட்ட ஆகாரம் எதற்குளதோ, அத்தன்மைய அஞ்ஞானத்தினுல் விகாசத்தையடைந்த விருத்தி பிரியம், மோதம், பிரமோத மென்னும் குணமுடையதும் விரும்பிய

பட்ட விசுவவடிவ (ஸ்படிகத்தினும் சொச்சமான) மணியினைப்போல அநுபவத்திற்கு விஷயமாகாது. அங்ஙனமாயினும், அப்பஞ்சகோசங்கள் எவ்வநுபவ (சேதனவடிவ சொப்பிரகாச ஞான)த்திற்கு விஷயமாகின்றனவோ, அவ்வநுபவத்தை "இல்லை" என்று நிஷேதிப்

பொருளைப் பெறுதலால் உதயமாவதும் புண்ணியத்தின் அநுபவகாலத்தில் விளங்குவதுமான ஆநந்தமய கோசமாம். அதில் புண்ணியவான்களாகிய தேகதாரிகள் மாத்திரம் பிரயத்தனமின்றித் தாமே ஆநந்தவடிவமாய்ச் செவ்வையாக ஆநந்தத்தை யடைகின்றார்கள். இவ்வாநந்தமயகோசத்திற்குச் சுழுத்தியில் ஸ்பூர்த்தி (விளக்கம்) அதிகமாகின்றது. சொப்பன ஜாக்கிரங்களில் இஷ்டவஸ்துவின் தரிசன லாப போகங்களாற் சிறிதுண்டாகின்றது. இவ்வாநந்தமயகோசமும் பரமாத்மாவன்று; உபாதியோடு கூடியதும் பிரகிருதியின் விகாரமும் புண்ணியக்கிரியையின் காரியமும் விகாரத்தோடு கூடிய சங்காதங்களோடுகூடியதுமாயிருத்தலின்.

பஞ்ச கோசங்களையும் யுக்தியினாலும் சுருதியினாலும் நிஷேதிக்க அவற்றின் நிஷேதத்தின் எல்லையாகிய போதவடிவ சாக்ஷி எஞ்சுகின்றது யாதொரு இந்த ஆத்மா சுயஞ்ஜோதியாய்ப் பஞ்சகோசங்களின் விலக்ஷணமாய் மூன்று அவஸ்தைகளுக்கும் சாக்ஷியாய் நிர்விகார நிரஞ்சனமாய் எப்போதும் ஆநந்த (பிரஹ்ம) வடிவமா யிருக்கின்றதோ' அது விவேகியாகிய புருஷனால் தனது ஆத்மத்தன்மையாக அறியத்தக்கதாம்.

பவன் யாவன்? ஒருவனும் நிஷேதிக்க வல்லனாகான். அது சொப்பிரகாசமாயிருத்தலால் உள்ளதாயிருந்தும் எந்த ஞாதாவுக்கும் ஞானத்திற்கும் விஷயமாகாததாய் அநுபவமே ஆத்மாவாயிருக்கின்றது.

இப்பஞ்ச கோசங்களின் விஸ்தாரமான நிரூபணமும் ஆத்மாவினின்றும் அவற்றை விவேகித்தலும் ஸ்ரீ பஞ்சதசியின் தத்துவப் பிரகாசிகை யென்னும் உரையினையுடைய மூன்றாவது (பஞ்சகோசவிவேக) ஆறாவது (சித்திர தீபப்) பிரகரணங்களிலும், தைத்திரீயவுபநிஷதத்தின் வியாக்கியானத்திலும், ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் நான்காவது கலையிலும் செய்யப்பட்டிருக்கின்றன. விருப்பமுள்ளார் ஆண்டுக் கண்டுகொள்க. விரிவஞ்சி இங்கு எழுதப்படவில்லை.

௬௬. அங்ஙனமாயின், ஐயனே! எப்போது யான் மூன்று சரீரங்களுக்கும் மூன்று அவஸ்தைகளுக்கும் பஞ்சகோசங்களுக்கும் வேறாயிருக்கின்றேனோ, அப்போது என்னுடைய சொரூபம் யாது என்று சிஷ்யன் கேட்கக் குருவானவர் கூறுகின்றார்.

௧. தேகமுதலிய எல்லாவற்றையும் அறிவதாயிருத்தலின் எது திருஷ்டாவாயிருக்கின்றதோ,

உ. உதாசீனமும் (ராகத்துவேஷவடிவ அந்தக்கரணங்களின் தர்மங்களின்றியதும்) சமீபத்திருப்பதும் அறிவதாகிய சேதனவடிவமுமாயிருத்தலினாலேனும், அல்லது அந்தக்கரணத்திலும் அதன் விருத்தியிலுமுள்ள சேதனமாத்திரமாயிருத்தலினாலேனும் எது எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயிருக்கின்றதோ,

௩. மூன்றுகாலத்திலும் (ஜாக்கிரமுதலியவற்றிலும் பாலியமுதலியவற்றிலும் இறப்புமுதலியவற்றிலும்) பாதிக்கப்படாததாயிருத்தலின் எது சத்தியமாயிருக்கின்றதோ,

௪ மூன்றுகாலத்திலும் எல்லாவற்றையும் பிரகாசஞ்செய்வதாயிருத்தலின் எது சித்தாயிருக்கின்றதோ,

௫. பரமப்பிரேமைக்கு விஷயமாயிருத்தலின் எது ஆநந்தவடிவமாயிருக்கின்றதோ,

௬. நிர்விகற்ப சமாதியுடைய யோகிகள் தானேதான் என்றறிந்து எதனைத் தியானிக்கின்றார்களோ,

அத்தன்மைய பிரஹ்மத்திற் கபின்ன மான ஆத்மதத்துவமே உன்னுடைய சொரூப மாம்.

முற்கூறிய ஆத்மாவினது * அச. விசேஷ ணங்களின் விசேஷவர்ணனம் ஸ்ரீ விசாரசந்தி ரோதயத்தின் ஏழாவது எட்டாவது கலைகளில் எழுதப்பட்டிருக்கின்றது யாருக்கு அறியும் விருப்ப முளதோ அவர்கள் ஆண்டுக் கண்டு கொள்க.

---

* அச. ஈண்டு இது அவ்விசேஷணங்களைப் பெய ராற் கீர்த்தித்தலாம்:—ஆத்மாவின் விசேஷணம் விதே யம் நிஷேத்தியம்என்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவற்றுள் ஆத்மாவின் சாக்ஷாத் போதகமாகிய விசே ஷணங்கள் எவையோ அவை விதேய விசேஷணங்க ளெனப்படுகின்றன. இத்தன்மையன (க) சத்து, (உ) சித்து, (ங) ஆநந்தம், (ச) பிரஹ்மம், (ரு) சுயம்பிர காசம், (சு) கூடஸ்தன், (எ) சாக்ஷி, (அ) திருஷ்டா, (கூ) உபதிருஷ்டா, (க0) ஏகம் என்றல் முதலியன வாம். எங்ஙனம் "ஸதவா (சுமங்கிலி)" என்னும் சொல் விதவை ஸ்திரீயை நிஷேகித்துச் சுவாசினி ஸ்திரீயை நேரே அறிவிப்பதாயிருக்கின்றதோ, அங்ஙனமே "ச த்து" முதலிய விசேஷங்கள் எதனுல் அசத்து முத லிய பிரபஞ்சத்தின் விசேஷணங்களை நிஷேதித்துச் சத்து முதலிய வடிவினதாகிய பிரஹ்மத்தை நேரே அறிவிப்பனவாகின்றன. ஆதலால் "விதேய விசே

௯ண்டு இது தாற்பரியமாம்:—சொல்லப்பட்ட இவ்வாத்மா அவிவேக திருஷ்டியினுல் ஜீவனுய் விளங்குகின்றது. அதற்கு,

க. நேத்திரம் கண்டம் இருதயம் என்னும் மூன்றும் தேசம்.

உ. ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்றும் காலம்.

ங. ஸ்தூல சூக்ஷ்ம காரணமென்னும் மூன்றும் வஸ்துக்கள் (போகசாமக்கிரிகள்).

---

ஷண" மெனப்படுகின்றன. பிரபஞ்சத்தின் நிஷேதவாயிலாக ஆத்மாவைப் போதிக்கும் விசேஷணங்கள் எவையோ அவை நிஷேத்திய மெனப்படுகின்றன, இத்தன்மையன (க) அநந்தம் (உ) அகண்டம் (ங) அசங்கம் (ச) அத்விதீயம் (ரு) அஜன்மம் (சு) நிர்விகாரம் (எ) நிராகாரம் (அ) அவ்வியக்தம் (கூ) அவ்வியயம் (க0) அக்ஷரம் என்றல் முதலியனவாம். எங்ஙனம் "அவிதவை", என்னும் சொல் விதவை ஸ்திரீயை நிஷேதித்துப் பொருளால் அவளுக்கு விலக்ஷணமான சுவாசிநி (சுபமங்கலி) ஸ்திரீயை அறிவிப்பதாயிருக்கின்றதோ, அங்ஙனமே "அநந்தம்" முதலிய விசேஷணங்கள் எதனுல் அந்தம் முதலிய பிரபஞ்சத்தின் தர்மங்களை நிஷேதித்துப் பொருளால் அவற்றின் விலக்ஷணமான பிரஹ்மத்தை அறிவிப்பனவாயிருக்கின்றவோ. அதனுல் நிஷேத்திய விசேஷணங்களெனப்படுகின்றன.

௪. இவையே மூன்றுதேகங்கள்.

௫. விசுவ தைஜஸ பிராஞ்ஞரென்னும் மூவரும் ஜாக்கிர சொப்பன சுழுத்தி அவஸ்தைகளில் கிரமமாக அபிமானிகள்.

௬. ஜாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமான சம்சாரம் எதுவோ அது ஜீவனது காரியமாம்.

௭. அற்பஞ்ஞத்துவ முதலியன அதன் தர்மங்கள்.

இந்தச் சர்வசாமக்கிரியோடு கூடிய புத்தியல்லது அவித்தை அதன் அதிஷ்டான சாக்ஷியாகிய ஆத்மாவென்னும் யாவும் சேர்ந்து ஜீவன் எனப்படுகின்றது.

இது எல்லாச்சாமக்கிரியோடு கூடிய புத்தியினையாவது அவித்தையினையாவது மித்தை என்னும் உணர்ச்சியினால் விட்டு எஞ்சிநிற்கும் புத்தியுபகித அல்லது அவித்தை உபகித சேதனவடிவ சாக்ஷியாகிய ஆத்மா எதுவோ அது ஜீவன் என்னும் சொல்லிற்கு லக்ஷியமாம். அதுவே அந்த ஜீவனது நிஜரூபமாம்

பஞ்சகோச ஆத்மவிவேசன வர்ணனமென்னும்

ஏழாவது உபதேசம் முடிந்தது.

---

# எட்டாவது உபதேசம்.



## தத் துவம் பத வாச்சியார்த்த லக்ஷி யார்த்தங்களைக் கூறுதலோடு அதன் ஐக்கியத்தை நிரூபித்தல.

### ௩௫. சிஷ்யன் சொல்லுகின்றான்.

ஐயனே, ஜீவன் ஈசன் அவற்றின் உபாதியாகிய ஜகத்து என்பவற்றினது சொரூபத்தின் பேதத்தை யான் அறிந்தேன்.

இப்போது தத்துவமஸியென்னும் மகா வாக்கியத்திலுள்ள தத்பத துவம்பதங்களின் வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களைச் சொல்லுதல்வேண்டும். பின்னர் அவ்விரண்டினது லக்ஷியார்த்தத்தின் அபேதத்தைச் சொல்லுதல்வேண்டும்.

### ௩௩. தத்பதார்த்த வர்ணனம் ௧.

### ஸ்ரீ குரு சொல்லுகின்றார்.

௧. மாயையோடுகூடிய பிரஹ்மவடிவ ஈசுவரன் தத்பதத்திற்கு வாச்சியார்த்தம்.

உ. மாயையின்றிய சுத்தப்பிரஹ்மம் அவாச்சியமான (வாக்கிற்கு விஷயமாகாத) தத்பதத்தின் லக்ஷியார்த்தம்.

## சுஎ. துவம்பதார்த்த வர்ணனம் உ.

க. சிதாபாஸசகித புத்தியோடுகூடிய கூடஸ்த சேதனவடிவ ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தம்.

உ. சிதாபாஸசகித புத்தி வடிவ உபாதியின்றிய கேவல கூடஸ்தசேதனம் எதுவோ அது அவாச்சிய துவம்பதத்தின் லக்ஷியார்த்தமாம்.

ஈண்டு இது தாற்பரியம்:—சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி யெனப்படுகின்றது. அந்த விருத்தி சக்தி லக்ஷணை என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

க. சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சாக்ஷாத் சம்பந்தம் (பிரவிருத்தி) எதுவோ அது சப்தத்தின் சக்தி விருத்தியாம். அந்தச் சக்தி விருத்தியினால் எந்த அர்த்தம் அறியப்படுகின்

றதோ * அ௫. அது வாச்சியார்த்த மெனப்படு கின்றது.

உ. அவ்வாச்சியார்த்தத்தின். * அ௬. சம்பந்தம் எதுவோ அது இலக்ஷணாவிருத்தி யெனப்படுகின்றது. அந்த லக்ஷணையினால் எந்த அர்த்தம் அறியப்படுகின்றதோ அது * அ௭. லக்ஷியார்த்த மெனப்படுகின்றது.

---

* அ௫. இதனையே சக்கியார்த்தம் அல்லது போத்தியார்த்தம் அல்லது விதேயார்த்தம் அல்லது முக்கியார்த்தம் என்று கூறுவர்.

* அ௬. சையோகம் அல்லது தாதான்மிய முதலாய எவ்வகையாகவேனும் பிற பொருளோடு வாச்சியார்த்தத்திற்குள்ள சாக்ஷாத் சம்பந்தம் எதுவோ அது லக்ஷணை எனப்படுகின்றது. ஈண்டு இது அபிப்பிராயமாம்:— சப்தத்திற்குத் தனது பொருளோடுள்ள சம்பந்தம் சப்தத்தின் சக்திவிருத்தியாம் சப்தத்திற்குத் தனது வாச்சியார்த்த வாயிலாக வேறோர் (வாக்கிற்கு விஷயமாகாததாகிய) பொருளோடுள்ள பரம்பரைச் சம்பந்தம் எதுவோ அது சப்தத்தின் லக்ஷணாவிருத்தியாம். அந்தலக்ஷணை யாண்டு வாச்சியார்த்தம் பொருந்தவில்லையோ ஆண்டு ஆசிரயிக்கத்தக்கதாம்.

* அ௭. வாச்சியார்த்தத்தின் சம்பந்தி லக்ஷியார்த்தமாம்.

அந்த லக்ஷணை * அஅ ஜகல் (விட்ட) லக்ஷணை * அகூ. அஜகல் (விடாத) லக்ஷணை * கூ0. பாகத்தியாக (விட்டுவிடாத) லக்ஷணை

---

* அஅ. யாண்டு வச்சியார்த்த முழுவதையும் விட்டு அதன் சம்பந்தியாகிய வேறு அர்த்தம் கொள்ளப்படு கின்றதோ, ஆண்டு ஜகல்லக்ஷணை யுண்டு எங்ஙனம்: "கங்கையில் இடைச்சேரி" என்னும் வாக்கியத்தில் கங்கையென்னும் பதத்தின் வாச்சியார்த்தமாகிய தேவந தியின் பிரவாகத்தில் இடைச்சேரி சம்பவியாமையால், ஈண்டுக் கங்கையென்னும் பதத்தின் வாச்சியார்த்தம் முழுவதையும் (தேவநதியின் பிரவாகத்தை) விட்டு அதன் சம்பந்தியாகிய கரைவடிவ வேறு (லக்ஷிய) அர்த்தம் கொள்ளப்படுகின்றது. ஆதலால் இது ஜகல் லக்ஷணையாம்.

* அகூ. யாண்டு வாச்சியார்த்தத்தை விடாமல் அதன் சம்பந்தியாகிய அந்நிய (அதிக) அர்த்தம் கொள் ளப்படுகின்றதோ, ஆண்டு அஜகல்லக்ஷணை யுண்டு எங்ஙனம்: "சிவப்பு ஓடுகின்றது" என்னும் வாக்கியத் தில் "சிவப்பு" என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாகிய சிவப்பு நிறத்தில் ஓடுதல் சம்பவியாமையின் அதன் சம்பந்தியாகிய (ஆசிரயமான) குதிரை வடிவ அந்நிய அர்த்தம் கொள்ளப்படுகின்றது. ஆதலால் இது அஜ கல்லக்ஷணையாம்.

* கூ . யாண்டு வாச்சியார்த்தத்தினின்றே விரோதி பாகத்தைவிட்டு அவிரோதிபாகம் கொள்ளப்படுகின்ற தோ, ஆண்டுப் பாகத்தியாகலக்ஷணை யுண்டு. எங்ங

என்னும் பேதத்தால் மூன்று வகைத்தாம். அவற்றில் * ௬௧. மகாவாக்கியத்தில் பாகத்தியாகமே உபயோகமாம்.

---

ணம்: "அவனே இத் தேவதத்தன்" என்னும் வாக்கியத்தில் பூதகாலமும் தூரதேசத்துள்ள தேவதத்தனது சரீரமும் அவன் என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம். வர்த்தமானகாலமும் சமீப தேசத்திலுள்ள தேவதத்தனது சரீரமும் "இந்த என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம். சமான (ஒரேமுதல்) வேற்றுமையின் பலத்தால் அவ்விரண்டு வாச்சியார்த்தங்களின் ஒருமை அறிவிக்கப்படுகின்றது. அவ்வொருமை ஒன்றற்கொன்று விரோதியான இரண்டு பதார்த்தங்களுக்குச் சம்பவியாது, ஆதலால் தேச கால வடிவ விரோதி பாகத்தைவிட்டு அவிரோதியான தேவதத்தனது சரீரத்தின் ஏகத்துவம் நிச்சயிக்கப் படுகின்றது. ஆதலால் இது பாகத்தியாகலக்ஷணையாம்.

* ௬௧. சகலவாச்சியபாகத்தை(ஜீவேசுவரர்களை)யும் விடுதலாற் சேதனபாகமும் நீங்குதலின் மகாவாக்கியத்தில் ஜகல்லக்ஷணை சம்பவியாது. வாச்சியார்த்தத்தைப் போல ஏகத்துவத்திற்கு விரோதமிருத்தலின் மகாவாக்கியத்தில் அஜகல்லக்ஷணையும் சம்பவியாது. ஆனால் விரோதியாகிய வாச்சியபாகத்தை (தர்மத்தோடு மாயை அவித்தைகளை) விடுதலால் அவிரோதியாகிய சேதனபாகம் கொள்ளப்பட்டு ஏகத்துவத்தின் நிச்சயம் உண்டாகுதலால் மகாவாக்கியத்தில் பாகத்தியாகலக்ஷணையே சம்பவிக்கின்றது.

## கூஅ. தத்துவம்பதங்களது லக்ஷி யார்த்தத்தின் ஒருமை.

எங்ஙனம் கடாகாச மடாகாசங்களிலுள்ள கட மட வடிவ உபாதிபாகத்தை விட்டு எஞ்சி நிற்கும் கட மட சம்பந்தியான ஆகாயம் ஒன்றாகவே இருக்கிறதோ, அங்ஙனமே ஈசுவரனிடத்தும் ஜீவனிடத்துமுள்ள மாயையும் புத்தியுமாகிய உபாதிபாகத்தைச் சிதாபாசன் சர்வஞ்ஞத்தன்மை முதலியனவும் அற்பஞ்ஞத்தன்மை முதலியனவுமான மாயை அவித்தையிலாகிய தர்மம் என்னுமிவற்றுடன் விட்டால் எஞ்சி நிற்கும் பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றேயாம்

க. தத்பத துவம்பதங்களுக்கு ஈசுவரனும் ஜீவனுமாகிய இருவரும் கிரமமாக வாச்சியர்.

உ. பிரஹ்மமும் ஆத்மாவுமாகிய இரண்டும் கிரமமாக லக்ஷியமாம்.

அவற்றில் பாகத்தியாகலக்ஷணையினால் * கூஉ. விரோதியான வாச்சிய பாகத்தை விட்டு அவிரோதியான லக்ஷியார்த்தம் இரண்டும் ஏகமேயாம்.

---

கூஉ. * தர்மத்தோடு கூடிய மாயை அவித்தையென்னும் உபாதிவடிவ.

எங்ஙனம. தீபத்தின் அக்கினி அற்ப உபாதியுடையதா யிருத்தலின் அற்பமாம் சூரியனது அக்கினி விசேஷமா (பெரிய உபாதியுடையதா) யிருத்தலின் பெரிதாம். இவ்வாறு அவற்றிற்கு உபாதியினாலாகியபேதம் உண்டு. ஆனால் எரிக்குந்தன்மை உஷ்ணத்தன்மை பிரகாசிக்குந் தன்மை வடிவ மகாதேயுவின் தர்மங்கள் எவையோ அவை இரண்டிலும் ஒன்றும் (சமமாம்). ஆதலால் சாமானியவடிவ மகாதேயு இரண்டிலும் ஒன்றேயாம்.

அங்ஙனமே வியஷ்டிவடிவ அற்ப உபாதியினையுடைய சேதனம் ஜீவன், சமஷ்டிவடிவ பெரிய உபாதியினையுடைய சேதனம் ஈசுவரன், என்று இவ்வாறு அவற்றிற்கு உபாதியினாலாகிய பேதம் தோற்றுகின்றது. ஆனால் சத்து சித்து ஆநந்தவடிவ பிரஹ்மத்தின் தர்மம் இரண்டிலும் ஒன்றும. ஆதலால் ஜீவனும் ஈசுவரனுமாகிய இவ்விரண்டிலும் கலந்துள்ள சாமாநிய சேதனவடிவ உபாதியின்றிய பிரஹ்ம சேதனம் எதுவோ, அது ஜீவன் ஈசுவரன் இரண்டிலும் அகண்டமாம் (ஒன்றேயாம்).

௬௩௯. இப்போது அபேதத்தை உபதேசித்தும் ஒருகால் செவ்வையான அபேதஞான

மின்மையால் சிஷ்யனுடைய இருதயத்தில் தத்பதத்தின் அர்த்தத்தில் பரோக்ஷத்தன்மையின்பிராந்தியும், துவம்பதத்தின் அர்த்தத்தில் பரிச்சின்னத்தன்மையின் பிராந்தியும் எஞ்சியிருக்குமாயின், அதனை நிவர்த்தித்தற் பொருட்டு ஸ்ரீ குருவானவர் பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் ஏகத்தன்மையைச் சொல்லுதலாகிய * கூ௯. ஓதப்புரோதபாவத்தை உபதேசஞ் செய்கின்றார்:—

க. "அது" (தத்பதத்தின் லக்ஷியமாகிய பிரஹ்மம்) "நான்"

உ. "நான்" (துவம்பதத்தின் லக்ஷிய ஆத்மா) "அது" (பிரஹ்மம்) என்று இவ்வாறு ஓதப்புரோத பாவத்தினால் பிரஹ்மம் ஆத்மா என்னும் இரண்டுமே ஏகமாம். சிஷ்யனே நீ இரண்டென்று அறியற்க. எவன் பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் இரண்டென்று அறிகின்றானோ அவனுக்கு ஒரு குருவும் கிடைத்திலர் அவன் குருவின்றியவனே யாவன்.

எ0. இப்போது முற்கூறிய அர்த்தத்தில்

---

கூ௯. பரஸ்பரத்தில் பரஸ்பரத்தைச் சேர்த்தலாகிய வியதிகாரத்தினை ஓதப்புரோத மென்பர்.

பிரமாணவடிவ சகல சாஸ்திரங்களின் சாரத்தையும் கூறுகின்றோம்:—

* கூச. விருத்தம்.

திருத்தகு கோடி நூலாற்றெரித்திடுபொருள்களெல்லா
மரைச்செயு டன்னால் யானு மறைகுவன் சாரமாகப்
பெருத்ததோர் பிரம மெய்யே பேசிடு முலகு பொய்யா
மருத்தியில் சிவனே ஜீவ னந்நிய மில்லை சற்றும்.

கோடி நூல்களின்சாரத்தை அரைச்செய்யுளால் சொல்லுகின்றேன்:— இந்த ஜகத்தின் சகல வஸ்துக்களிலும்,

க அஸ்தி (இருக்கிறது) உ. பாதி (விளங்குகிறது) ந. பிரியம் ச. நாமம் (பெயர்) ரு ரூபம் (வடிவம்) என்னு ஐந்து அம்சங்களுண்டு அவற்றின் ஆதி மூன்றும் பிரஹ்மவடிவமாம்; பின் இரண்டும் மாயாவடிவமாம். அவற்றுள்,

---

* கூச. “ஶ்லோகார்த்தேந ப்ரவக்ஷ்யாமி யதுக்தம் க்ரந்தகோடிபி: | ப்ரஹ்ம ஸத்யம் ஜகந்மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர: ||

கோடி நூல்களாற் சொல்லப்பட்ட தெதுவோ அதனை அரைச் சுலோகத்தினால் கூறுகின்றேன்:— “பிரஹ்மம் நித்தியம், ஜகத்து மித்தை, ஜீவன் பிரஹ்மமே; வேறில்லை” என்னும் சுலோகப்பொருளே இச்செய்யுளில் கூறப்படுகின்றது.

௧-௩. அஸ்தி பாதி பிரியவடிவப் பிரஹ்மம் எதுவோ, அது எல்லாக் காலத்திலும் எல்லா வற்றிலும் சமானமாக அநுசூதமாயி (கலந்தி) ருக்கின்றது. ஆதலால் அவ்வியபிசாரியாம்; அதனாலே சத்தியமாம்.

௪-௫. நாமரூப மயமான மாயிகஜகத்து ஒருகால் ஒவ்வோரிடங்களி லிருக்கின்றதாக லின் வியபிசாரியாம்; இதனானே மித்தையாம்.

மித்தையான ஜகத்தின் உள்ளடங்கியன வாகிய சுத்தசேதனத்தில் ஈச ஜீவத்தன்மை களின் உபாதிவடிவ தேகாதிகள் எவையோ அவையும் சொப்பனத்தின் யானைமுதலியவற் றைப்போல இல்லாதனவாய் விளங்குகின்றன ஆதலால் மித்தையாம். இதனானே அவ்வுபாதி களா லாக்கப்பட்ட ஈச ஜீவபாவமும் மித்தை யாம் ஆதலால்,

ஜீவன் எதுவோ அது பிரஹ்மம் என்பது சர்வசாஸ்திரங்களின் நிச்சயமாகிய சாரமாம். அதனைச் செவ்வையாகத் தாரணஞ்செய்க.

ஈண்டு இது தாற்பரியமாம்:— நான்கு உப வேதங்களும் ஆறு வேதாங்கங்களும் புராணம் நியாயம் மீமாம்ஸை தர்மசாஸ்திர மென்னும் நான்கு வேதத்தின் உபாங்கங்களுமாகிய அவ்

வெல்லாவற்றிற்கும் வேதத்தின் அர்த்தத்தி லேயே தாற்பரியமுண்டு. நான்குவேதங்களின் கர்ம உபாசனு காண்டங்களுக்குச் சித்தசுத்தி வாயிலாக அத்வைத ஞானத்தில் தாற்பரிய மாம். ஞானகாண்டமாகிய வேதாந்தத்திற்கும் அதன் அநுசாரியான ஏனையப் பிரஹ்மசூத் திரம் கீதைமுதலிய சம்ஸ்கிருத பிராகிருத நூல்களுக்கும் சாக்ஷாத் அத்வைத ஞானத் திலேயே தாற்பரியமுண்டு. ஆதலால் முற் கூறிய அர்த்தம் சர்வகிரந்தங்களின் சாரமாம்.

எக. "ஸத்ய வ்ரதம் ஸத்யபரம் த்ரிஸத்யம்
ஸத்யஸ்ய யோநிம் நிஹிதம் ச ஸத்யே |
ஸத்யஸ்ய ஸத்யம் ருதஸத்ய நேத்ரம்
ஸத்யாத்மகம் த்வாம் ஶரணம் ப்ரபந்நா: ||

எதற்குவிரதம் (மாயையின் விருத்திவடிவ சங்கற்பம்) சத்தியமா யிருக்கின்றதோ, எதன் கண் பரம் (சிரேஷ்டபிராப்தியின் சாதனம்) சத் தியமாயிருக்கின்றதோ, சிருஷ்டிக்கு முன்னும் பிரளயத்திற்குப் பின்னும் ஸ்திதிகாலத்திலும் இம்மூன்று காலத்திலும் எது சத்தியமாய் (வியபிசாரமின்றியுளதா) யிருக்கின்றதோ, எது சத்திய (பஞ்சபூதத்தின்) யோநியோ (விவர்த்

தோபாதானகாரணமோ), [இதனால்சிருஷ்டிக்குமுன் உள தென்னுந் தன்மை சொல்லப்பட்டது.] எது சத்தியத்தில் (முற்கூறிய பஞ்சபூதத்தில்) உளதோ [இதனால் ஸ்திதிசமயத்திலும் சத்தியத்தன்மை கூறப்பட்டது.] அங்ஙனமே எதுசத்தியத்தின் (வியாவகாரிக ஆகாய முதலியவற்றின்) சத்தியமோ (பாரமார்த்திக சத்தியமா யுளதோ), 'பிராணனேசத்தியம். அவற்றிற்கு இது சத்தியம். நித்தியங்களுக்கு நித்தியம் சேதனங்களுக்குச் சேதனம் என்றல் முதலிய சுருதியினால். இதனால் அப்பூதங்கள் நாசமாகியும் அவசேஷமா யிருத்தலின் பிரளய காலத்திலும் அவதி (எல்லை) இருத்தலின் சத்தியத்தன்மை காட்டப்பட்டது இவ்வாறு மூன்று காலத்திலும் சத்தியத்தன்மை சம்பாதிக்கப் பட்டது., அங்ஙனமே சத்திய பாஷணமும் சத்தியத்தின் (சமதரிசனத்தின்) நேத்திரமும் (பிரவர்த்தகமு)மாம். இவ்வாறு எல்லாவிதத்தானும் சத்தியவடிவமாயுள்ள உம்மை யாம் (பிரஹ்மாதிதேவர்கள்) சரணமடைந்திருக்கின்றோம்." இது ஸ்ரீ பாகவதத்தின் பத்தாவது ஸ்கந்தத்தினது முற்பாதியின் இரண்டாவது அத்தியாய வாக்கியமாம். இவை முதலிய அநேக சாஸ்திரவசனங்களாலும் யுக்தியினாலும் பிரஹ்மத்திற்குச் சத்

தியத்தன்மை சித்திக்கின்றது. ஜகத்தின் மித்தியாத்தன்மையினை ஸ்ரீ குருவானவர் கூறுகின்றார்:—

எஉ 𑌏𑌕𑌾𑌯𑌨𑍋𑌽𑌸𑍌 𑌦𑍍𑌵𑌿𑌫𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌮𑍂𑌲

𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑌸𑌃 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑌃 𑌷𑌡𑌾𑌤𑍍𑌮𑌾 ।
𑌸𑌪𑍍𑌤𑌤𑍍𑌵𑌗𑌷𑍍𑌟𑌵𑌿𑌟𑌪𑍋 𑌨𑌵𑌾𑌕𑍍𑌷𑍋
𑌦𑌶𑌚𑍍𑌛𑌦𑍀 𑌦𑍍𑌵𑌿𑌖𑌗𑍋 𑌹𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑍃𑌕𑍍𑌷𑌃 ॥

எதற்கு அயனம் (மாயாவடிவ ஆசிரயம்) ஒன்றுயிருக்கின்றதோ, எதற்குப் (பயன்) இரண்டு (சுக துக்க) வடிவமாயிருக்கின்றதோ, எதற்கு மூலம் மூன்று (குண) வடிவமோ, எதன் ரசம் (தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷமென்னும்) நான்கு (புருஷார்த்த) வடிவமாயிருக்கின்றதோ, எதனது (ஞானத்தின்) தன்மை ஐந்து(இந்திரியங்)களாயிருக்கின்றனவோ, எதன் சுபாவம் (ஜன்மமுதலிய) ஆறு (விகாரவடிவ) அலைகளாயிருக்கின்றனவோ. எதன் பட்டை சப்த (தாது) வடிவமோ, எதன் கொம்புகள் எட்டு (பஞ்சபூதம் மனது புத்தி அகங்காரமென்னும் அபரப்பிரகிருதி) களோ, எதன் பொந்து ஒன்பது (துவாரங்)களோ, எதன் இலைகள் (பிராணதிநாகாதி) பத்து (வாயு)க்களோ, எதில் பக்ஷி

கள் இரண்டு ஜீவேசுவர வடிவங்களோ எதன் ஜன்மகாரணம் சத்திய பரப் பிரஹ்மமோ, எதன் லயஸ்தானமும் பாலனஞ் செய்வதும் சத்தோ (பிரஹ்மமோ), அது இந்தப் பிரசித்த மான சமஷ்டி வியஷ்டிப் பிரபஞ்சவடிவ ஆதி விருக்ஷமாம்.''

க. இவ்வாறு ஸ்ரீ பாகவதத்தின் முற் கூறிய ஸ்தலத்திலேயே இதனை விருக்ஷவடி மாகச் சொல்லுதலானே விருக்ஷத்தினைப் போல இதன் விநாசிவடிவத் தன்மையும் சொல்லப்பட்டது, அதுவே மித்தியாத்தன்மை யின் இலிங்கமாம் அதனை (மித்தியாத்தன்மை யை) இப்போது கூறுகின்றார்.

எங்ஙனம் இந்திரஜாலவடிவ மாயையினால் ஆக்கப்பட்ட விருக்ஷம் மூன்று காலத்திலும் மித்தையாகவே உளதாகின்றதோ, அங்ஙனமே மாயாசத்தியினால் ஆக்கப்பட்ட சகல ஜகத்துக் கூட்டவடிவ விருக்ஷத்தினை மூன்று காலத்தி லும் மித்தை யென்றறிக.

இந்த (ஜகத்தின் மித்தியாத்தன்மைவடிவ) அர்த்தத்திலேயே.

உ. சொப்பனம் கந்தர்வநகரம் கண்ணாடி யில் நகரத்தின் பிரதிபிம்பம் முதலிய மற்றும்

அநேகதிருஷ்டாந்த வடிவ உபமானப்பிரமா ணங்களுள.

௩. பிரபஞ்சம் மித்தையாம், திருசியமா யிருத்தலின், சொப்பன முதலியவற்றிற்போல என்பது அநுமானப்பிரமாணமாம்.

௪. 'சாஸ்திர வாக்கியம், யுக்தி, தத்துவ ஞானம்' என்பவற்றால் பிரபஞ்சத்தின் மித்தி யாத்தன்மை நிச்சயவடிவ அல்லது மூன்று காலத்தைய அபாவநிச்சயவடிவ எந்த (விஷயீ) பாதம் உண்டாகின்றதோ. அது முன்னமே சித்தித்துள்ள பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மை யின்றியேனும் முக்காலத்தைய அபா வ (விஷயபாத) மின்றியேனும் நிகழாததாக அதனை (விஷயரூப பாதத்தை)க் கற்பித்தறி விக்கின்றது இது அர்த்தாபத்திப் பிரமாண மாம்.

௫. பிரபஞ்சத்தினது பாரமார்த்திக அபா வத்தை நிச்சயிக்கும் விசாரம் அல்லது ஞான தசையில் பரமார்த்த சத்தையினால் பிரபஞ்சத் தின் அப்பிரதீதிவடிவம் அநுபலப்திப்பிரமாண மாம்

௬. ஞானத்தின் பின் பிரபஞ்சத்தின் முக் காலத்தைய இன்மை வித்வான்களது பிரத்தி

யக்ஷ அநுபவத்திற்குக் கோசரமாம் இது பிரத்தியக்ஷ அல்லது அநுபவப்பிரமாணமாம்.

எ. பரம்பரையாக உலகத்தில் ஜகத்து மித்தையென்று சொல்லிக்கொள்ளுதல் ஐதிகப்பிரமாணமாம்.

அ. "[illegible]

ஆதலால் இந்த ஜகத்து மித்தையாம்" "இந்த ஜீவனுக்கு மூன்று அவஸ்தைகளுண்டு; மூன்றும் சொப்பனமாம் (மித்தையாம்)" என்றல் முதலிய சுருதியும்,

"அர்தே ஹ்யவித்யமானேऽபி ஸம்ஸ்ருதிர் ந நிவர்ததே । த்யாயதோ விஷயானஸ்ய ஸ்வப்நேऽனர்தாகமோ யதா

அர்த்தம் இல்லாதிருக்கவும் சம்சாரம் நிவிருத்தியாகிறதில்லை; விஷயங்களைத் தியானிக்கின்ற இவனுக்குச் சொப்பனத்தில் அநர்த்தத்தின் பிராப்தியுண்டாவதுபோல"

"த்ருஷ்டம் ஶ்ருதம் [illegible] ஸம்விம்ருஶ்ய । ஸம்ஸ்ருதி[illegible] [illegible]

திருஷ்டமாகிய இந்த லோகத்தோடு சுருத மாகிய சுவர்க்காதி லோகங்களையும் அசத் தென் றறிந்து அதனைத் தியானிக்கலாகாது; அநுபவிக்கவும் கூடாது. அந்தத் திருஷ்ட சுருதங்களின் தியானமுதலியவற்றில் சம்சா ரத்தையும் தனது நாசத்தையும் எவன் அறி கின்றானோ, அவன் ஆத்மஞானியாவன்." என் றல் முதலிய ஸ்ரீ பாகவதத்தின் வாக்கியமும் சப்தப்பிரமாணங்களாம். ஜகத்து மித்தை யென்பதில் இத்துணைப் பிரமாணங்களுள.

## எஉ. பதார்த்தசோதன ஐக்கியமான சர்வாத்மத்தன்மை.

இப்போது ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்து வத்தினது திடத்தன்மையின் பொருட்டு அதில் பிரமாணவடிவ சாஸ்திரவாக்கியங்க ளின் அர்த்தத்தைக் கிரமமாக துவம்பதார்த்த சோதன தத்பதார்த்தசோதன வாக்கியார்த்த சர்வாத்மத்தன்மை பூர்வகமாக ஸ்ரீ குருவான வர் கூறுகின்றார்:—

மனமுதலியவற்றின் திருஷ்டாவாயிருத்த லின் பிரஹ்மம் மனம் சக்ஷு முதலிய இந்திரி யங்கள் என்பவற்றிற்கு வேறாயிருக்கின்றது.

எது எதற்குத் திருஷ்டாவாயிருக்கின்றதோ, அது அதனின் பின்னமாகின்றது எங்ஙனம் கடத்தின் திருஷ்டா கடத்தினும் வேறோ, அங்ஙனமே மன இந்திரியங்களின் திருஷ்டாவாகிய ஆத்மவடிவப் பிரஹ்மம் மன முதலியவற்றின் வேறாம். அல்லது "என் மனம் என் நேத்திரம்" என்றல் முதலிய அநுபவத்தினுலும் மமதைக்கு விஷயமாகிய அந்த மன முதலியவற்றால் அகம் பிரத்தியயத்திற்கு விஷயமான ஆத்மவடிவப் பிரஹ்மம் பின்னமாக (சத்தையின் பேதமுடையதாக)ச் சித்திக்கின்றது.

ஆத்மாவிற்கு அபின்னமான பிரஹ்மம் மன முதலியவற்றிற்கும் மனமுதலியனவாம். ஏனெனின்,

"ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மநஸோ மநோ
யத்வாசோ ஹ வாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராண:
சக்ஷுஷஶ்சக்ஷுரதிமுச்ய தீரா: ப்ரேத்ய
அஸ்மால்லோகாதம்ருதா பவந்தி ॥

கற்பித சர்ப்பத்தின் சொரூபமாகிய இரஜ்ஜுவினைப்போலச் சுரோத்திரமுதலியவற்றின் சொரூபமும் சாமர்த்தியவடிவுமாயிருத்தலின் எந்தப் பிரஹ்மம் சுரோத்திரத்திற்குச்

சுரோத்திரமும் மனதிற்கு மனமும் வாக்கிற்கு வாக்குமா யிருக்கிறதோ, அதுவே பிராணனுக்குப் பிராணனும் சக்ஷுவிற்குச் சக்ஷுவுமாம். இவற்றால் உபலக்ஷிக்கப் பட்டனவும் சொல்லப் படாதனவுமாகிய மற்ற இந்திரியங்களுக்கும் இந்திரியமாம் (சத்தையைத் தருவதும் பிரகாசஞ் செய்வதுமாம்) என்றறிந்து தீரபுருஷன் சுரோத்திர முதலியவற்றில் ஆத்மபாவத்தைவிட்டு இந்த [யான் எனதெனுந் தன்மை வடிவ அல்லது தேகவடிவ] லோகத்தினின்றும் பிரிந்து அமுதன் (மரணரகிதன்) ஆகின்றான்" என்னும் சுருதியினால் ஆத்மவடிவப் பிரஹ்மம் வாஸ்தவமாக மனமுதலியவற்றின் சொரூபமாம்.

பிரஹ்மம் மன முதலியவற்றினால் அறியப் படாததாம். ஏனெனின்,

॥ 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨 𑌵𑌾𑌗𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨𑍋
𑌮𑌨𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌮𑍋 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌮𑍋 𑌯𑌥𑍈𑌤𑌦
𑌨𑍁𑌶𑌿𑌷𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑌦𑍇𑌵 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌥𑍋 𑌅𑌵𑌿
𑌦𑌿𑌤𑌾𑌦𑌧𑌿 । 𑌇𑌤𑌿 𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂
𑌯𑍇 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌚𑌚𑌕𑍍𑌷𑌿𑌰𑍇

ஆண்டுச் சக்ஷு (இதனால் உபலக்ஷிக்கப் பட்ட சர்வ ஞானேந்திரியங்களும்) செல்லுவ தில்லை; வாக்கு (இதனால் உபலக்ஷிக்கப்பட்ட சர்வ கர்மேந்திரியங்களும்) செல்லுவதில்லை; மனம் (அந்தக்கரண சதுஷ்டயம்) செல்லுவ தில்லை. ஆதலால் "அந்தப் பிரஹ்மம் இவ் வாறிருக்கின்றது" என்று யாம் அறியேம். இதனை எவ்விதத்தால் இந்தப் பிரஹ்மம் சிஷ்யர்களுக்கு உபதேசிக்கப்படுமோ, அது எமக்குத் தெரியவில்லை. [காணங்களுக்கு விஷயமாகாததா யிருத்தலின் ஜாதி, குணம், கிரியை, சம்பந்தமென்னும் விசேஷணங்க ளால் * கூடு. அறிதற்காகவேனும் சாஸ்திரத்

* கூடு. பலவியாப்தி (சிதாபாசனுக்கு விஷயமாந் தன்மை) யினால் அறியமுடியாததாயிருத்தலின் என்ப தன் பொருள் இதுவாம்:—அந்த காரத்திலுள்ள கட முதலிய அப்பிரகாச வடிவ பதார்த்தங்கள், விளக்கும் கண்ணுமாகிய இரண்டினாலும் அறியப்படுகின்றன. அதுபோலக் கடமுதலியனவும், அங்ஙனமே சூரியாதி களுமாகிய சகல அப்பிரகாச (ஜட) வடிவ பதார்த்தங் களும், அந்தக்கரணத்தின் விருத்தியிலுள்ள பலமாகிய சிதாபாசன், விருத்தியென்னும் இரண்டினாலும் அறி யப்படுகின்றன; கேவல விருத்தியினா லன்று. அவற் றில், விருத்தியினால் கடாதியவச்சின்ன சேதனத் தின் ஆவரணம் நீங்குகின்றது. சிதாபாசனால் கட

*தினாலும் குருவினாலும் * கூசு. உபதேசஞ் செய்தற்காகவேனும் முடியாததா யிருத்தலின் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களுக்கு*

---

*முதலிய ஜடபதார்த்தங்களின் பிரகாச முண்டாகின்றது.* **எங்ஙனம்** *சூரியனையும் தீபத்தையும் அறிதற் பொருட்டுக் கேவல சக்ஷுவின் அபேக்ஷையுண்டோ, வேறு பிரகாச (தீப) த்தின் அபேக்ஷை இல்லையோ,* **அங்ஙனமே** *பிரத்தியகபின்ன பிரஹ்மத்தை யறிதற் பொருட்டுக் கேவலவிருத்தியின் அபேக்ஷையுண்டு; சிதாபாசனது அபேக்ஷையில்லை. ஆண்டு யான் பிரஹ்மமென்னும் வடிவினதாகிய விருத்திசேதனத்தின் ஆவரணத்தை விலக்குகின்றது. சுயம்பிரகாசவடிவமா யிருத்தலின் அதற்குச் சிதாபாசவடிவ வேறு பிரகாசத்தின் அபேக்ஷையில்லை. ஆதலால் பிரஹ்மம் பலவியாப்தியினால் அறியத்தகாததா யிருத்தலின் மனதிற்கு (சிதாபாசனோடு கூடிய விருத்திக்கு) விஷயமாகாததாம்*

** கூசு. சப்தத்தின் சக்திவிருத்தியினால் உபதேசஞ் செய்ய முடியாததா யிருத்தலின் என்பதன் பொருள் இதுவாம் :—ஜாதி முதலிய விசேஷண முடையதா யிருக்கின் அது மனதினால் (சிதாபாசனோடு கூடிய விருத்தியினால்) அறியப்படும். வாக்கி (சப்தத்தின் சக்திவிருத்தி)னாலும் அறியப்படும். பிரஹ்மம் ஜாதி முதலியவைகளின்றியதா யிருத்தலின் மனதிற்கும் (பலவியாப்திக்கும்) வாக்கிற்கும் (சக்தி விருத்திக்கும்) விஷயமாகத்தகாததாம்.*

அநேகாசரமாயினும் பிரஹ்மம் * கள. விருத்தி வியாப்தியினால் அறியப்படுகின்றது; சாஸ்திரத்தினாலும் குருவினாலும் லக்ஷணா விருத்தியினால் உபதேசிக்கப் படுகின்றது. ஆதலால் சுருதி கூறுவதாவது:—] அது விதிதத்தினும் (ஞானத்தின் விஷயமான வியாகிருத வடிவ காரியத்தினும்) அந்நியமேயாம்; அவிதிதத்தினும் (அறியப்பட்டதினும் வேறாகிய அவ்வியாகிருதவடிவ காரணத்தினும்) அந்நியமாம் என்று இவ்வாறு யாம் பூர்வாசாரியர்களது வசனத்தைக் கேட்டிருக்கின்றோம். அவர்கள் எங்களுக்கு அந்தப் பிரஹ்மத்தை ஸ்பஷ்டமாகச் சொன்னார்கள்” என்னும் சுருதியினாலும், இவ்வர்த்தத்தினையே அநுசரித்த

“ைநதநெநா விஶதி வாஙாத வக்ஷ-
ஶாதுா வாணெந்திபாணி வக்ஷயா

ஷிஃ ஷாஃ | ஶஸொா஽விஷொயக நிஷெய
தபாதுகூஶ ஃபெயுாகூஶாஹ யதூஜெதந நி
ஷெயவிஜிஃ

---

* கள. சூரியனுக்கு எதிர்முகமாக வைக்கப்பட்ட தீபம் மழுங்க நேத்திரத்தினால் சூரியனது பிரகாசம் உண்டாவதுபோலப் பிரஹ்மாகார விருத்தியிலுள்ள

இந்தப் பிரஹ்மத்தினிடத்து மனம், வாக்கு, சக்ஷு, அகங்காரம் என்பன பிரவேசிக்கிறதில்லை. பிராணனும் (சொல்லப்படாத மற்ற) இந்திரியங்களும் பிரவேசிக்கிறதில்லை. எங்ஙனம் அக்கினியினிடத்து அதன் ஜ்வாலை பிரவேசிக்கிற(தாகஞ்செய்கிற)தில்லையோ, அங்ஙனமே அவையும் பிரவேசிக்கிறதில்லை. சப்த (வேத)மும் "எதனினின்றும் வாக்குகள் நிவிருத்திக்கின்றனவோ" என்று போதிக்கும் தன்னை நிஷேதிப்பதாயிருத்தலின் அர்த்தத்தினால் முற்கூறிய தனது மூலத்தை (பிரஹ்மத்தைக்) கூறுகின்றது. அஃதின்றி நிஷேதத்தின் சித்தியுண்டாகாது. (அதிஷ்டான வடிவ அவதியின்றிப் பாதவடிவ நிஷேதமின்மையின்)" என்னும் ஸ்ரீபாகவதத்தின் ஏகாதச ஸ்கந்தத்திலுள்ள மூன்றாவது அத்தியாயத்தின் வசனத்தினாலும் பிரஹ்மம் மனமுதலியவற்றினாலும் அறியப்படாததாம்.

அந்த அநாதி (ஜன்மமின்றிய, இதனாலேயே ஷட்விகாரமின்றிய) பிரஹ்மம் (நிரதிசய வியாபக சச்சிதாநந்தகனவஸ்து) நீயாகின்றாயென்று குருவானவர் சொல்லுகின்றார்:—

* சிதாபாசன் மழுங்க அவ்விருத்தி மாத்திரத்தால் பிரஹ்மத்தின் பிரகாசம் (ஆவரணபங்கம்) உண்டாகின்றது;

சிஷ்யனே ! நீ யிருக்கின்றாய் என்று இது முற்கூறிய துவம்பதார்த்தசோதனத்தின் இடத்தன்மையின் பொருட்டு அநுவாதஞ் செய்யப்பட்டது. இவ்வர்த்தம் (துவம்பதார்த்தத்தின் சோதனம்) ஸ்ரீபஞ்சதசியின் பஞ்சகோசவிவேகமென்னும் மூன்றாவது பிரகாணத்திலும், அங்ஙனமே கூடஸ்ததீபமென்னும் எட்டாவது பிரகாணத்திலும் உரையில் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஈண்டுச் சுருக்கமாக அதன்றன்மை மாத்திரம் காட்டப்பட்டது.

இப்போது குருவானவர் பிரபஞ்சத்தின் நிஷேத பூர்வகமாகத் தத்பதார்த்தத்தின் சோதனத்தைக் கூறுகின்றார்:—

இவ்வெல்லா ஜகத்தும் சத்துவடிவமேயாம்;

“ ஸஜீஉ௦ ஸவ_ூ௦ ஸஉஸ௯

இந்த சத்து அசத்து (காரியகாரண வடிவம்) முழுவதும் சத்தே (பரமார்த்த சத்தை வடிவப் பிரஹ்மமே) யாம்” என்னும் சுருதியும், கற்பிதத்திற்கு அதிஷ்டானத்தினும் வேறான சத்தையின்மையை நிச்சயிக்கும் யுக்தியுமிருத்தலின்.

இவ்வெல்லாம் சித்ரூபமேயாம் ;

" ஹிஜீ ஜ०ஸவ-ு० வ ஜ்காஶ்தெ

இவ்வெல்லாம் சித்து (பிரஹ்மசேதன) வடிவமாய்ப் பிரகாசிக்கின்றன" என்னும் சுருதியும், கற்பிதத்திற்கு அதிஷ்டானத்தின் பின்னமான ஸ்பூர்த்தி (விளக்கம்) இன்மையை நிச்சயிக்கும் யுக்தியு மிருத்தலின்.

யாவும் பிரஹ்மமாம்;

" ஸவ-ு० வஷ்ஜி० ஜ்ஹ

இவ்வெல்லாம் (காணப்படுகின்ற ஜகத்து) நிச்சயமாகப் பிரஹ்மமேயாம்" என்னும் சுருதியிருத்தலின்.

எல்லாம் ஆத்மாவாம்;

" ஆசெதவெஷ०ஸவ-ு०

இவ்வெல்லாம் ஆத்மவடிவமேயாம்" என்னும் சுருதியிருத்தலின்.

இவ்வாற்றால் "புருஷன் ஸ்தாணு" என்னும் வாக்கியத்தில் எங்ஙனம் புருஷனைப் பாதித்து ஸ்தாணுவை எஞ்சவைத்தலாகிய "பாதசாமாநாதிகரணியம் (புருஷன் ஸ்தாணு என்னும் இரண்டு பதங்களுக்கும் ஒரு பொருளுடைமை)" இருக்கின்றதோ, அங்ஙனமே சகலப் பிரபஞ்சத்தினையும் "பாதசாமாநாதிகர

ணிய" த்தினால் அதிஷ்டானப் பிரஹ்ம வடிவமென்றறிந்து ஜிஞ்ஞாசுக்களே! சமஷ்டி வியஷ்டிவடிவத் தேகத்தினையும் அதன் கர்வ (அகந்தை மமதை இதந்தை வடிவ அபிமான)த்தையும் விடு (மித்தையென் றறிந்து நீக்கு)ங்கள். இது (நாமரூபத்தைப் பாதித்து அஸ்திபாதிப்பிரியவடிவப் பிரஹ்மத்தை மிஞ்சவைத்தல்) விதிமுக சுருதிகளின் பொருளாம். அது கநிஷ்ட மத்திம அதிகாரிகளுக்குத் தத்பதார்த்த சோதனத்தில் உபயோகமுள்ளதாம்; இலக்ஷணைமுதலிய கிலேசத்தின் அங்கீகாரத்தால்.

ஸ்தூலம், அணு (சூக்ஷ்மம்), நீட்சி, குறுமை என்னும் வடிவமுடையது பிரஹ்மமன்று;

"அஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கம்

ஸ்தூலமில்லாததும் அணுவல்லாததும் நீளமில்லாததும் குறுகலில்லாததுமா யிருப்பதனை" என்றல் முதலிய சுருதிகளான்.

சப்தமுதலியவற்றின் விலக்ஷணம் பிரஹ்மமாம்;

"அசப்தமஸ்பர்சமரூபமவ்யயம் ததா(அ)ரஸம்
நித்யமகந்தவச்ச யத்

சப்தமில்லாததும், ஸ்பரிசமில்லாததும், ரூபமில்லாததும், குறைவு நிறைவில்லாததும், ரசமில்லாததும், நித்தியமும், கந்தமுடைமை யில்லாததுமாய் எது இருக்கின்றதோ" என்னும் சுருதியினால்.

சத்தும் (ஸ்தூலகாரியமும்) அசத்தும் (சூக்ஷ்மகாரணமும்) அன்று ; ஏனெனின்,

"நெதிநெதி

இங்ஙனமன்று, இங்ஙனமன்று" என்னும் சுருதியும்,

"அநாதிமத்பரம்ப்ரஹ்ம நஸத்தந்நாஸதுச்யதே

அநாதியாயுள்ள பரப்பிரஹ்மம் சத்தும் (காரியமும்) அசத்தும் (காரணமும்) அன்றென னப்படுகின்றது" என்னும் கீதாஸ்மிருதியு மிருத்தலால்

இதில் (பலவாகாதப் பிரஹ்மத்தில்) நாநா வென்பது சிறிதுமில்லை ;

"நேஹ நாநாஸ்தி கிஞ்சந

இதில் நாநா என்பது சிறிதுமில்லை" என்னும் சுருதி யிருத்தலின்.

ஜிஞ்ஞாசுக்களே! இவ்வாறறிந்து நிஜசொரூபத்தில் மதர்த்திருப்பீர்களாக. இது (நாமரூபமுதலிய பிரபஞ்சத்தை நிஷேதித்துப் பொருளால் அஸ்தி பாதிப் பிரியவடிவ பிரஹ்மத்தை சத்தியமென் றறிந்து எஞ்சவைத்தல்) நிஷேதமுக சுருதிகளுக்குப் பொருளாம். இது லக்ஷணை முதலிய கிலேசமின்மையால் உத்தமாதிகாரிக்குத் தத்பதார்த்த சோதனத்தில் உபயோகியாம்.

இதில் இது திருஷ்டாந்தமாம்:—

ஒருவனுடைய ஆ எருமைமுதலிய தனத்தைத் திருடன் கொண்டுபோனான். அப்போது அவன் பைரவ தெய்வத்தின் முன் "இந்தத் தனம் உடையவனுக்குக் கிடைக்காதிருக்குமாயின், யான் இதில் இன்ன எருமையை உனக்கு அர்ப்பணஞ் செய்வேன்" என்று பிரதிஞ்ஞை செய்கின்றான். பின்னர் உடையவன் தேடப் புறப்பட்டான். அப்போது அவனும் பைரவ தெய்வத்திற்குமுன "அந்தத் தனம் எனக்குக் கிடைக்குமாயின், இதில் இன்ன எருமையை யான் உனக்கு அர்ப்பணஞ் செய்வேன்" என்று பிரதிஞ்ஞை செய்கின்றான். இரண்டு பக்ஷத்திலும் அந்த ஒரே எருமையின் மரணம் நிச்சயிக்கப்பட்டது.

தார்ஷ்டாந்தம்:-அங்ஙனமே ஈண்டு (வேதத்தில்) விதிமுகமும் நிஷேதமுகமுமாகிய சுருதிகளுக்கு ஞானவடிவ னைபரவன்பொருட்டு நாமரூபமுதலிய பிரபஞ்சசொரூப எருமையினை ஆர்ப்பணஞ்செய்து (பாதித்து), அதன் அதிஷ்டானமாகிய அஸ்தி (சத்து) பாதி (சித்து) பிரிய (ஆநந்த) வடிவப் பிரஹ்மத்தைச் சத்தியமென் றறிந்து மிஞ்சவைத்தலே தாற்பரியமாகிய அர்த்தமென நிச்சயிக்கப்படுகின்றது. இல்லையாயின் (முக்கியார்த்தமாயின்) சுருதிஸ்மிருதிகளாலும் வித்வான்களது அநுபவத்தினாலும் பெறப்பட்ட திருஷ்டா முதலியவடிவினதும் பாவவடிவினதுமான பிரஹ்மத்திற்குத் திருசியாதிபாவமும் அபாவவடிவத்தன்மையும் நேரும் இது தத்பதார்த்த சோதனத்தின் திடத்தன்மையின் பொருட்டு அநுவாதஞ் செய்யப்பட்டது. இந்த (தத்பதார்த்தத்தின் சோதனை வடிவ) அர்த்தமே ஸ்ரீபஞ்சதசியின் பூதவிவேகமென்னும் இரண்டாவது பிரகரணத்தின் வியாக்கியானத்தில் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஈண்டுச் சுருக்கமாக அதன்றன்மைமாத்திரம் அறிவிக்கப்பட்டது.

இப்போது குருவானவர் நான்கு வேதத்

தியுமுள்ள மகாவாக்கியங்களின் அர்த்தத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

க "ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம"

என்னும் ருக்வேதத்தின் ஐதரேய உபநிஷத்தின் கண்ணுள்ள மகாவாக்கியத்தின் அர்த்தம் "பிரஞ்ஞானம் (பிரத்தியக்சேதனம்) எதுவோ அது பிரஹ்மம்" என்பதாம். (பிரத்தியக்=உள்.)

உ. "அஹம் ப்ரஹ்மாஸ்மி"

என்னும் யஜுர்வேதத்தின் பிருகதாரணியக உபநிஷத்தின்கண்ணுள்ள மகாவாக்கியத்தின் அர்த்தம் "யான் (பிரத்தியகாத்மா) பிரஹ்மம்" என்பதாம்.

௩. "தத்வமஸி"

என்னும்சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின்கண் ணுள்ள மகாவாக்கியத்தின் அர்த்தம் "அது (பிரஹ்மம்) நீ (ஆத்மா)" என்பதாம்.

ச. "அயமாத்மா ப்ரஹ்ம"

என்னும் அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்திலுள்ள மகாவாக்கியத்தின்

அர்த்தம் "இந்த (ஞானத்திற்கு விஷய மாகாத நித்தியாபரோக்ஷமாயுள்ள) ஆத்மா பிரஹ்மம் (எல்லாவற்றினும் அதிக வியாபக மான சச்சிதாநந்தகனம்)" என்பதாம்.

ஆதலால் பிரஹ்மத்திற்கு வேருக யான் இல்லையென்றறிக. இந்நான்கு மகாவாக்கியத் தின் கண்ணுள்ள "பிரஞ்ஞானம், அகம், த்வம், ஆத்மா என்னும் பதங்களுக்கு வாச் சியார்த்தம் ஜீவனும், லக்ஷியார்த்தம் கூடஸ்த வடிவ சாக்ஷியுமாம். பிரஹ்மம், பிரஹ்மம், தத், பிரஹ்மம் என்னும் நான்கு பதங்களுக் கும் வாச்சியார்த்தம் ஈசுவரனும் (* கூஅ. சப ளப் பரஹ்மமும்), லக்ஷியார்த்தம் சுத்தப் பிர ஹ்மமுமாம். அவற்றினுள் வாச்சியார்த்தத் திற்கு ஐக்கியம் சம்பவியாமையின் ஈண்டு லக்ஷியார்த்தங்களுக்கு ஐக்கியம் கொள்ளப்பட் டிருக்கின்றது. நான்கு மகாவாக்கியங்களின் அர்த்தம் ஸ்ரீ பஞ்சதசியின் ஐந்தாவது மகாவா க்கிய விவேகத்தில் விஸ்தாரமாய் வர்ணிக்கப் பட்டிருக்கின்ற தாகலின் ஈண்டு அதன் றன்மை மாத்திரம் அறிவிக்கப்பட்டது.

இப்போது

---

* கூஅ. சபளப் பிரஹ்மம்=மாயையோடுகூடிய பிரஹ்மம்.

"ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஸம்பச்யன் ப்ரஹ்ம பரமம் யாதி நான்யேன ஹேதுனா ॥"

என்னும் உபதேசசாகஸ்ரியாகிய நூலி லுள்ள பாஷியகாரர் வசனத்தின் அநுசாரமாக சர்வாத்மத்தன்மையைக் கூறுகின்றார். சிதாத்மாவாகிய நானே ஆகாயத்தைப் போலச் சகல பூதங்களிலும் கலந்திருக்கின்றேன், (ஆகாயத்தில் வாயு முதலியவற்றைப் போல) என்னிடத்தில் யாவும் அத்தியஸ்தமா யிருக்கின்றன என்று அறிகின்றவனுக்குஜன்ம மில்லை.

இவ்வர்த்தத்தில் பிரமாணவடிவ

"ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வ பூதானி சாத்மனி । ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥

யோகத்தோடு கூடிய மனமுடையவனும் எங்கும் சமதரிசன முடையவனும் எவனோ, அவன் சர்வபூதங்களிலும் ஆத்மாவையும் ஆத்மாவினிடத்துச் சர்வபூதங்களையும் காண்கின்றான்" என்னும் கீதாவசனமும்.

"ஸர்வபூதேஷு ய: பச்யேத் பகவத்பாவமாத்மந: | பூதாநி பகவத்யாத்மந்யேஷ பாகவதோத்தம: ||

எவன் சர்வபூதங்களிலும் ஆத்மாவின் (தனது) பகவத் பாவத்தை காண்கின்றானோ, பகவத்வடிவ தன்னிடத்துப் பூதங்களைக் காண்கின்றானோ, அவன்பாகவத (பக்த)ர்களில் உத்தம (ஞானியாகியபக்த) னுவன்." என்னும் பாகவதத்தின் ஏகாதச ஸ்கந்தத்தின் இரண்டாவது அத்தியாயத்தினது வசனமு மிருக்கின்றன. இங்ஙனம் ஓதப்புரோதபாவ வடிவ சர்வாத்மத்தன்மை சொல்லப்பட்டது.

௭௪. இப்போது பிரமேயத்தின்கண் ணுள்ள சம்சயத்தினது நிவிருத்தியின் பொருட்டு வேதாந்தத்தில் அவசியமாய் அறியத்தக்க பிரமேய (பதார்த்த)ங்களைச் சிஷ்யன் கேட்கின்றான்:—

ஐயனே! (இந்நூலின்) கூறப்பட்டனவும் கூறப்படாதனவுமாகிய பதார்த்தங்களை ஒருங்கே சொல்லுதலாகிய சங்கிரகத்தைச் சொல்லுதல்வேண்டும், அதனால் எனக்குப் பிரமேயத்தின்கண்ணுள்ள சம்சயம் ஒழியும், பிர

மாணகத சம்சயமோ ஈசுவர வடிவமாக மதிக்கப்பட்ட தமது வேதத்திற்குச் சமானமான வசனங்களைப் பூர்ண விசுவாசத்தோடு கேட்டலாலும் எனக்கு (உத்தமாதிகாரிக்கு) நஷ்டமாகும்; இதனுலே எனக்கு நிஜசொரூபம் நிச்சயிக்கப்பட்டதாகும். [இது சிஷ்யன் லக்ஷணாவலியை (இலக்ஷணங்களின் வரிசையை) அறிதற்பொருட்டு வினவியதாம்.]

## ஸ்ரீ குருவானவர் சொல்லுகின்றார்.

லக்ஷணாவலி இதுவாம்:—

க. அசாதாரண தர்மத்தினை லக்ஷணமென்பர். ஒன்றிலிருப்பதாகிய தர்மத்தினை அசாதாரணதர்ம மென்பர்.

உ. அவ்வியாப்தி அதிவியாப்தி அசம்பவ மென்னும் மூன்று தோஷங்களு மின்றிய லக்ஷணத்தினை ஸத்லக்ஷணம் (நல்லிலக்கண) மென்பர்

௩. முற்கூறிய மூன்றுதோஷங்களுள் யாதேனும் ஓர் தோஷத்தோடு கூடிய லக்ஷணத்தினை அஸத்லக்ஷண (தீயவிலக்கண) மென்பர்.

௪. எப்போதும் இருப்பதாய் எது வியா

வர்த்தகமா (வேறு பிரித்தறிவிப்பதா) கின்ற தோ அதனை ஸ்வரூபலக்ஷணம் என்பர்.

ரு. ஓர் காலத்திருப்பதாய் வியாவர்த்தகஞ் செய்வது எதுவோ அதனைத் தடஸ்தலக்ஷண மென்பர். இத்னையே உபலக்ஷண மென்றும் கூறுவர்.

க. லக்ஷியத்தின் ஏகதேசத்தில் இலக்ஷண மிருத்தலை அவ்வியாப்தி யென்பர்.

எங்ஙனம்: கபிலத் தன்மை (ஓரேபிங்கள வர்ணத்தோடு கூடியத்தன்மை) ஆவின்லக்ஷண மாம். அந்தக் "கபிலத்தன்மை" ஆவடிவ இல க்ஷியத்தின் ஏகதேசத்திலேயே யிருக்கின்றது ஆமாத்திரத்தில்லை. ஆதலால் இந்த லக்ஷ ணம் அவ்வியாப்திவடிவ தோஷத்தோடுகூடிய தாம்.

உ. இலக்ஷியத்தில் முழுவதும் வியாபித்து இலக்ஷியமல்லாததன் கண்ணும் இலக்ஷண மிருத்தலை அதிவியாப்தி யென்பர்.

எங்ஙனம்: "கொம்புடைமை" ஆவின் இல க்ஷணமாம். அது இலக்ஷியமாகிய ஆ முழுவதி னுமிருந்துகொண்டு இலக்ஷியமல்லாத எருமை முதலியவற்றின்கண்ணு மிருக்கின்றது. ஆத

லால் இந்த ஆவின் லக்ஷணம் அதிவியாப்தி வடிவ தோஷத்தோடுகூடியதாம்.

௩. இலக்ஷியத்தை விட்டு அலக்ஷியத்தி லேயே இலக்ஷணமிருத்தலை அசம்பவ மென்பர்.

எங்ஙனம்: "ஒற்றைக்குளம்புடையது ஆ" என்பது ஆவின் இலக்ஷணமாம். அது இல க்ஷியமாகிய ஆவினை விட்டு இலக்ஷியமல்லாத குதிரையின்கண் ணிருக்கின்றது. ஆதலால் இந்த லக்ஷணம் அசம்பவதோஷத்தோடுகூடிய தாம்.

க. வஸ்துவில் (பொருளில்) அவஸ்துவை (பொருளல்லாததனை)க் கூறுதலை அத்தியாரோப மென்பர்.

உ. அதிஷ்டான சேஷத்தை (அதிஷ்டா னம் மிஞ்சுதலை) அபவாத மென்பர்.

க. சுத்தப் பிரஹ்மத்தை வஸ்து வென்பர்.

உ. அஞ்ஞானத்தையும் அதன் காரியமான ஸ்தூல சூக்ஷ்ம முதலிய பிரபஞ்சத்தினையும் அவஸ்து வென்பர்.

க. ஆவரணவிக்ஷேப சக்திகளையுடைய அ நாதிபாவரூபத்தை அஞ்ஞான மென்பர். அது வே மாயை, அவித்தை, பிரகிருதி, பிரதா

னம், சக்தி, அவ்வியக்தம், அக்ஷரம் முதலிய பெயர்களாற் சொல்லப்படுகின்றது.

உ. அஸ்தி பாதி (இருக்கிறது விளங்குகின்றது) என்னும் வியவகாரத்திற்கு (சொல்லுதல் தோற்றுதல்களுக்கு) யோக்கியமான வஸ்துக்களில் நாஸ்தி நபாதி (இல்லை தோற்றவில்லை) என்னும் விபரீத வியவகாரத்தைச் சம்பாதித்தல் ஆவரணமாம்.

(க) நாஸ்தி (இல்லை) என்னும் வியவகாரத்திற்கு ஏது அசத்துவாபாதக (அசத்துத்தன்மையைச் சம்பாதிக்கும்) ஆவரணமாம்.

(உ) நபாதி (தோற்றவில்லை) என்னும் வியவகாரத்திற்கு ஏது அபானுபாதக (தோற்றமின்மையைச் சம்பாதிக்கும்) ஆவரணமாம்.

ங. ஸ்தூலம் சூக்ஷ்மமுதலிய பிரபஞ்சத்தையும் அதன் ஞானத்தையும் விக்ஷேபமென்பர்.

க. ஆவரணத்திற்கு ஏதுவான சக்தியினை ஆவரணசக்தி யென்பர்.

உ. விக்ஷேபத்திற் கேதுவான சக்தியினை விக்ஷேபசக்தி யென்பர்.

க. சுத்த சேதனத்தை மறைக்கும் அஞ்ஞானத்தை மூலாஞ்ஞான மென்பர்.

உ. இரஜ்ஜு முதலிய உபகிதசேதனத்தை மறைக்கும் அஞ்ஞானத்தைத் தூலாஞ்ஞான மென்பர். இதனையே அவஸ்தாஞ்ஞான மென்றுங் கூறுவர்.

க. பிராந்தி ஞானத்தினையும் அதன் விஷயத்தினையும் காரியாஞ்ஞான மென்பர்.

உ. பிராந்திக்கு ஏதுவான அஞ்ஞானத்தினைக் காரணாஞ்ஞான மென்பர்.

க. அத்தியாசத்தைப் பிராந்தி யென்பர். அதிஷ்டானத்தின் விஷம (விபரீதமான) சத்தையுடைய அவபாசத்தினை அல்லது தனது அபாவாதிகரண (ஆசிரய) த்தில் அவபாசத்தினை அத்தியாச மென்பர். ஞானத்தினையும் அதன் விஷயத்தினையும் அவபாச மென்பர்.

க. பிராந்தி ஞானத்தினை ஞானாத்தியாச மென்பர். ஒன்றில் மற்றொன்றின் ஞானத்தைப் பிராந்திஞான மென்பர். அதுவே விபரியயமும், விபரீதபாவனையுமாம்.

உ. பிராந்தி ஞானத்தின் விஷயத்தினை அர்த்தாத்தியாச மென்பர். [அது க. சம்சர்க்

காத்தியாசம், உ. சொரூபாத்தியாசம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.]

க. கற்பிததாதாத்மிய சம்பந்தத்தினைச் சம்சர்க்காத்தியாச மென்பர். அதுவே சம்பந்தாத்தியாசமாம். [இவ்வாறு சத்தியாத்மாவினது அநாத்மாவிலிருக்கும்.]

உ. சம்பந்தியின் அத்தியாசத்தைச் சொரூபாத்தியாச மென்பர். அதுவே அந்நியதராத்தியாச மென்றும் சொல்லப்படும். [இவ்வாறு மித்தையாகிய அநாத்மாவினது ஆத்மாவிலிருக்கும்.]

க. கற்பித பேதத்தோடு வாஸ்தவ அபேதத்தைக் கற்பிததாதாத்மிய சம்பந்த மென்பர்.

உ. பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் அத்தியாசத்தினை அந்நியோந்நியாத்தியாச மென்பர்.

[இவ்வாறு ஆத்மாநாத்மாக்களுக்கு யாண்டும் தம்மில் அத்தியாசமிருக்கும்]

க. எவற்றில் பிரஹ்மஞானமின்றிப் பாதம் (மித்தியாத்துவ நிச்சயம்) உண்டாகிறதில்லையோ, பிரஹ்ம ஞானத்திற்குப் பின் எவற்றிற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தாஸ்பூர்த்தி தோற்றுகிறதில்லையோ, அத்தன்

மைய மாயையும் அதன் காரியமும் வியாவ காரிகமாம். அவற்றின் சத்தையினை வியாவ காரிகசத்தை யென்பர்.

உ. எவற்றிற்குப் பிரஹ்ம ஞானமின்றி ரஜ்ஜு முதலியவற்றின் ஞானத்தினாலேயே பாதமுண்டாகிறதோ, அத்தன்மைய தூலாஞ் ஞானமும் அதன் காரியமான ரஜ்ஜு சர்ப்ப முதலியனவும் பிராதிபாஸிகமாம். அவற்றின் சத்தையினைப் பிராதிபாஸிகசத்தை யென்பர்.

௩. எதற்கு மூன்று காலத்திலும் பாத முண்டாகிறதில்லையோ, அத்தன்மைய உற்பத்தி நாசமின்றியதா யிருத்தலின் நித்திய (சத்திய) மான சேதனம் எதுவோ அது பாரமார்த்திகமாம். அதன் சத்தையினை (இருப்பை)ப் பாரமார்த்திகசத்தை யென்பர்.

[ஈண்டு மந்திரி முதலியோரிடத்து எங்ஙனம் ராஜாவின் சத்தையே அநுகூதமா யிருக்கின்றதோ, அவர்களுக்குச் சுதந்திர சத்தை லேசமாத்திரமும் இல்லையோ, அங்ஙனமே வியாவகாரிகப் பிராதிபாஸிக பதார்த்தங்களிலும் ஒரு சேதனத்தின் சத்தையே அநுகூதமாய், "கடமிருக்கிறது படமிருக்கிறது" என்று இருக்கிறதென்னும் வியவகாரத்திற்கு

ஏதுவாய்த் தோற்றுகின்றது. அவற்றிற்குச் சுதந்திர சத்தையோ லேசமாத்திரமும் இல்லை. இதில் கூத்தாடியின் திருஷ்டாந்தம் சொல்லப் பட்டிருக்கின்றது.]

க. வியாவிருத்தியினை அவச்சேத மென்பார். பிறவற்றினின்றும் வேறுபிரித்து அறிவித்தலை வியாவிருத்தி யென்பார்.

உ. அவச்சேத முடையதனை அவச்சின்ன மென்பார். இதனையே அவச்சேத்தியம், வியா விருத்தம், வியாவர்த்தியம், வியாவர்த்தநீயம் என்றும் கூறுவர்.

ங. வேறுபிரித்தறிவிப்பதனை வியாவர்த்தக மென்பார். அதனையே அவச்சேதக மென்றுங் கூறுவர். [இத்தன்மையன விசேஷணம், உபா தி, உபலக்ஷணம், உபரஞ்சக மென்பனவாம்.]

(க) காரியத்தில் சம்பந்தமுடைய வர்த்த மான வியாவர்த்தகத்தினை விசேஷண மென் பார்.

[எங்ஙனம்: "ஜலத்தினால் நிரப்பப்பட்ட கடம்" ஜலாகாசத்தின் போக்குமுதலிய காரி யங்களில் சம்பந்தியாய் ஜலாகாச (ஜலநிரம்பிய கடத்திலும் அதிலுள்ள ஆகாசத்தின் பிரதி

பிம்பத்தோடுகூடிய கடதேசத்திலுமுள்ள ஆகாச)த்தின் வியாவர்த்தகமாம். இதனுனே வியாவர்த்தநீய (வேறு பிறித்தறிவித்தற்குரிய ஜலாகாச)த்திற்குச் சமானமான தேசகாலங்களி லிருக்கின்றது. ஆதலால் அதன் விசேஷணமாம். எங்ஙனம் : "அந்தக்கரணம்" ஜீவனது ஜன்மமுதலிய (சம்சாரவடிவ) காரியத்தில் சம்பந்தியாய் வியாவர்த்தகமாம். இதனுனே வியாவர்த்தநீயத்திற்கு (ஜீவனுக்கு)ச் சமான தேசகாலங்களி லிருக்கின்றது. ஆதலால் அதன் விசேஷணமாம்.]

(உ) காரியத்தில் சம்பந்தமில்லாததா யிருக்கின்ற வர்த்தமான வியாவர்த்தகத்தினை உபாதி யென்பர்.

[எங்ஙனம் :— "ஜலம் நிரம்பிய கடம்" கடாகாசத்தின் (கடத்தின்கண்ணுள்ள ஆகாசத்தின்) அதிகரண (ஆசிரய)த் தன்மைவடிவ காரியத்தில் சம்பந்தமில்லாததாய் வியாவர்த்தகமா யிருக்கின்றது. இதனுனே வியாவர்த்தநீய (கடாகாச)த்திற்குச் சமானமான தேசகாலங்களி லிருக்கின்றது ஆதலால் அதன் (கடாகாசத்தின்) உபாதியாம். எங்ஙனம்:— "அந்தக்கரணம்" சாக்ஷியின் (கூடஸ்தசேத

னத்தின்) அதிஷ்டானத் தன்மைவடிவ காரியத்தில் சம்பந்தமில்லாததாய் அதன் வியாவர்த்தகமா யிருக்கின்றது. இதனுலேன வியாவர்த்தநீயத்தின் (சாக்ஷியின்) சமானதேசகாலங்களி லிருக்கின்றது. ஆதலால் அது சாக்ஷிக்கு உபாதியாம்.]

(௩) காரியத்தில் சம்பந்தமில்லாததான வியாவர்த்தகத்தினே. உபலக்ஷண மென்பர்.

[எங்ஙனம்: "ஜலநிரம்பிய கடம்" முற்கூறிய கடத்தினுல் அவச்சின்னமாகாத ஆகாசம் எதுவோ, அது "மகாகாசமா" மென்னும் ஜனங்களது பிரவிருத்தியாகிய காரியத்தில் சம்பந்தமில்லாததாய் (முற்கூறிய கடமிருக்கினும் இல்லாவிடினும் முற்கூறிய காரியமிருத்தலின்) மற்றைய (கடாகாசமுதலிய) ஆகாயங்களினின்றும் அதனே (மகாகாயத்தை) வேறுபிரித்தறிவிப்பதாம். இதனுலேன அதில் அது ஓரிடத்தும் ஓர்காலத்து மிருக்கின்றது; ஆதலால் அதன் (மகாகாசத்தின்) உபலக்ஷணமாம். எங்ஙனம்: "அந்தக்கரணம்" அந்தக்கரண அநவச்சின்ன சேதனம் ஈசுவரசாக்ஷியா (சுத்தப்பிரஹ்மமா) மென்னும் ஜனங்களது பிரவிருத்திவடிவ காரியத்தில் சம்பந்தமில்லாததாய் (ஜீவன்முக்தியில் அந்தக்கரண மிருக்கி

னும், அல்லது விதேகமுக்தியில் அது இல்லாதிருக்கினும் சொல்லப்பட்ட வியவகார மிருத்தலால்) மற்றைய (ஜீவன்முதலிய) சேதனங்களினின்றும் அதனை வேறுபிரித்தறிவிப்பதாம். இதனுலேனே அது அதில் சிலவிடத்தும் சிலகாலத்தும் இருக்கின்றது. ஆதலால் அதற்கு (ஈசுவரசாக்ஷிக்கு) அது (அந்தக்கரணம்) உபலக்ஷணமாம்.]

(ச) இயல்பாய்ப் பெறப்பட்ட தர்மவடிவ வியாவர்த்தகத்தினை உபரஞ்சக மென்பர். அதனையே சொரூபலக்ஷணமென்றுங் கூறுவர்.

[எங்ஙனம்: ஆகாயத்தின் நிரவயவத்தன்மை விபு (வியாபக)த்தன்மை சேதிக்கப்படாமை முதலிய தர்மங்கள் எவையோ, அவை அதற்குச் சுபாவமாகச் சித்தித்தவியாவர்த்தக தர்மங்களாம்; ஆதலால் உபரஞ்சகமாம். எங்ஙனம்: பிரஹ்மத்தின் சத்தியத்தன்மை ஞானத்தன்மை அநந்தத்தன்மை முதலிய தர்மங்கள் அதன் சுபாவமாகச் சித்தித்துள்ள வியாவர்த்தக தர்மங்களாம்; ஆதலால் உபரஞ்சகமாம்.]

க. விசேஷணமுடையதனை விசிஷ்ட மென்பர்.

உ. உபாதியுடையதனை உபகித மென்பர்.

ந. உபலக்ஷணமுடையதனை உபலக்ஷித மென்பர்,

ச. உபரஞ்சகமுடையதனை உபரஞ்சித மென்பர்.

௧ சத்தசத்திற்கு விலக்ஷணமானதை அநிர்வசநீய மென்பர். அதனை மித்தை யென்றுங் கூறுவர். மூன்றுகாலத்திலும் பாதிக்கப்படாததனைச் சத்தென்பர். சொரூபமின்றியதனை (சூநியத்தினை) அசத்தென்பர். பாதயோக்கிய சொரூபமுடையதனை சத்தசத்விலக்ஷண மென்பர்.

௧. மித்தியாத் தன்மையினையும் மித்தியாத் தன்மை நிச்சயத்தினையுப அல்லது மூன்று காலத் தபாவத்தினையும் மூன்று காலத்தபாவ நிச்சயத்தினையும் பாத மென்பர். இதனையே அத்தியந்தநிவிருத்தி யென்றுங்கூறுவர்.

(௧.) மித்தியாத் தன்மையினையேனும் முக்காலத்தின்மையினையேனும் விஷயவடிவபாத மென்பர். அதனையே நித்தியவிருத்தியென்றுங் கூறுவர்.

(௨.) மித்தியாத்தன்மை நிச்சயத்தினையேனும் முக்காலத்தின்மையின் நிச்சயத்தினையேனும் விஷயீவடிவபாத மென்பர். அதனையே

நித்திய நிவிருத்தத்தின் நிவிருத்தியென்றுங் கூறுவர்.

உ. உபாதான காரணத்தில் காரியம் விலய மாதலை (அல்லது பிரதியோகியின் பிரதீதிபூர் வக காரியத்தின் விலயத்தினை) நாசமென்பர். அதனையே பிரத்துவம்சாபாவ மென்றுங்கூறுவர்.

க. உபாதானத்திற்குச் சமானமான சத்தையுடைய அந்நியதா (வேற்றுச்) சொரூபத்தைப் பரிணாம மென்பர். அதனையே விகார மென்றுங் கூறுவர்

உ. அதிஷ்டானத்தினும் விஷம (குறைந்த) சத்தையுடைய வேற்றுச் சொரூபத்தை விவர்த்த மென்பர். அதனையே கற்பிதகாரிய மென்றுங் கூறுவர்

க. காரியத்தினும் நியமிக்கப்பட்ட அவ்வியவஹித முற்காலத்திருப்பதனைக் காரண மென்பர்.

(க) அந்தராயம் (மறைப்பு) உள்ளதனை வியவகித மென்பர்.

(உ) அந்தராய மின்றியதனை அவ்வியவகித மென்பர்.

க. உற்பத்தி மாத்திரத்தின் காரணத்தை நிமித்தகாரண மென்பர்.

உ. உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணத்தினை உபாதானகாரண மென்பர்.

க. பரிணாமவடிவ காரியத்தின் காரணத்தினைப் பரிணாமிஉபாதான மென்பர்.

உ. விவர்த்தவடிவ காரியத்தின் காரணத்தினை விவர்த்தஉபாதான மென்பர் அதனையே அதிஷ்டான மென்றுங் கூறுவர்,

க. எது பிராந்தி காலத்திலும் பிராந்தியின் நிவிருத்தி காலத்திலும் தோற்றுகின்றதோ, அதனைச் சாமானியஅம்ச மென்பர். அதனையே ஆதார மென்றுங் கூறுவர்.

உ எது பிராந்திகாலத்தில் தோற்றுகிறதில்லையோ எதன் தோற்றத்தால் பிராந்தி நீங்குகின்றதோ, அதனை விசேஷஅம்ச மென்பர். அதனைஅதிஷ்டான மென்றுங்கூறுவர்.

௩. எது அஞ்ஞான காலத்திற்றோற்றுகின்றதோ; ஞானகாலத்திற் றோற்றுகிறதில்லையோ அதனைக் கற்பிதவிசேஷஅம்ச மென்பர். அதனையே அத்யஸ்த மென்றுங் கூறுவர்.

க. கேவல அஞ்ஞானத்தினாற் றோன்றும் பிராந்தியினை நிருபாதிகப்பிராந்தி யென்பர். இத்தன்மையது சர்ப்பமுதலிய வற்றினதாம்.

உ. உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தினாற் றோன்றும் பிராந்தியினைச் சோபாதிகப் பிராந்தி யென்பர். இத்தன்மையது கண்ணாடியிற் பிரதிபிம்பம் ஜகத்து முதலியவற்றினதாம். காரியத்தின் சமகாலத் திருப்பதாகிய (பிம்பத்தின் சந்நிதியும் பிராரப்தமுதலியனவுமாகிய) நிமித்த காரணத்தினை ஈண்டு உபாதி யென்பர்.

பாதத்தை யடைந்ததனைப் பாதித மென்பர். பாதிதத்தின் அநுவிருத்தியினைப் பாதிதாநுவிருத்தி யென்பர். பின்றோற்று வதை அநுவிருத்தி யென்பர்.

க. அது இருந்தால் அது இருத்தல் அந்வயமாம். அல்லது அநுவிருத்தி (மாலையில் நூலினைப்போல அநுசூதத்தன்மை) யினை அந்வய மென்பர்.

உ. அஃது (காரணம்) இல்லா திருக்க அஃது (காரியம்) இல்லா திருத்தல் வியதிரேகம் அல்லது வியாவிருத்தியினை (பேதஞானத்தினை) வியதிரேக மென்பர்.

க. இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு ஏதுவான அஞ்ஞான அந்தக் கரணங்களின் பரிணாமத்தினை விருத்தி யென்பர்.

க. யதார்த்த அநுபவத்தினைப் பிரமை யென்பர்.

உ. பிரமையின் வேறாய ஞானத்தினை அப் பிரமை யென்பர்.

க. உற்பூத (எழும்பிய) சம்ஸ்காரமாத்தி ரத்தால் தோன்றும் ஞானத்தினை ஸ்மிருதி யென்பர்.

உ. ஸ்மிருதியின் வேறாய ஞானத்தினை அநுபவ மென்பர்.

க. இருகோடியினை (இரண்டு பக்ஷங்களை) யுடைய ஞானத்தினைச் சம்சய மென்பர்.

உ. சம்சயத்தின் வேறாகிய ஞானத்தினை நிச்சய மென்பர்.

(க) விபரீத நிச்சயத்தினை விபரியய மென் பர்.

(உ) யதார்த்த நிச்சயத்தினை நன்ஞானம் தெளிந்தஞானம்) என்பர்.

க. பிரமையின் கரணத்தினைப் பிரமாண மென்பர்.

(க) வியாபாரத்திற்கு வேருகிய அசாதாரண காரணத்தினைக் கரண மென்பர்

[க] காரணத்தினின்றும் உண்டாய்க் காரியத்தினை உண்டுபண்ணுவது எதுவோ அதனை வியாபார மென்பர்.

க. சகல காரியங்களின் காரணத்தினைச் சாதாரணகாரண மென்பர். [இத்தன்மையன ஈசுவரன், அவர் ஞானம், இச்சை, பிரயத்தினம், அதிருஷ்டம், பிராகபாவம், பிரதிபந்தகாபாவம், காலம், திக்கு என்னும் ஒன்பதேயாம்.]

உ. யாதேனும் ஓர்காரியத்தின் காரணத்தினை அசாதாரணகாரண மென்பர். [இத்தன்மையன கடமுதலியவற்றின் காரணமாகிய கபாலமுதலியனவாம்.]

க. சகல அநர்த்தமும் நீங்கிப் பரமாநந்தமடைதலை மோக்ஷ மென்பர்.

(க) அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும் அநர்த்த மென்பர். அதனையே பந்தமென்றும் துக்க மென்றும் கூறுவர்.

(உ). பரமப் பிரேமையின் விஷயத்தினைப் பரமாநந்த மென்பர் எல்லாவற்றினும் அதிகமான பிரேமையை (பிரியத்தினை)ப் பரமப் பிரேமை யென்பர். அதனையே நிரதிசயப்பிரேமை யென்றுங்கூறுவர்.

க. தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக் கொண்டிருக்கப் பிரஹ்ம சொரூபமாக நிலைத்தலை ஜீவன்முக்தி யென்பர்.

(க) நிராவரண பரிபூரண விருத்தியோடு கூடிய ஆநந்தத்தை ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்த மென்பர்.

உ. பிரபஞ்சத் தோற்றமின்றிய பிரஹ்ம சொரூபமான நிலையினை விதேகமுக்தி யென்பர்.

க. நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மாத்மாவினது ஏகத்துவத்தின் ஞானத்தைத் தத்துவ ஞான மென்பர்.

ஆத்மாநாத்மாக்களின் பேத ஞானத்தினை விவேகஞான மென்பர்.

உ. விடுதலின் இச்சையினை அல்லது இச்

சையின்றிய தன்மையினை வைராக்கிய மென்பர்.

௩. ஆறு சாதனங்களின் அடைவை ஷட் சம்பத்தி யென்பர்,

(௧) வெளிவிஷயங்களினின்றும் மனதைத் தடுத்தலைச் சம மென்பர்.

(௨) வெளி விஷயங்களினின்றும் இந்திரியங்களைத் தடுத்தலைத் தம மென்பர்.

(௩) வாந்தியினைப்போல விட்டபின் மீண்டும் வந்தடைந்த விஷயத்தினை விடுதலை உபரதி யென்பர்.

(௪) துவந்துவ (சீதோஷ்ணமுதலிய) தர்மங்களைச் சகிக்கும் இயல்பினைத் திதிக்ஷை யென்பர்.

(௫) சாஸ்திர வாக்கியத்திலும் குருவாக்கியத்திலும் உண்டாகும் விசுவாசத்தினைச் சிரத்தை யென்பர்.

(௬) சொரூபத்தில் சித்தம் ஏகாக்கிர மாதலைச் சமாதான மென்பர்.

௪. மோக்ஷ இச்சையினை முமுக்ஷுத்துவ மென்பர்.

சு. பூஜ்ஜியபுத்தியோடு உண்டாகும் பிரீதியை (சிநேகத்தை)ப் பக்தி யென்பர். [இத்தன்மைய பிரீதி ஈசுவரன் குரு முதலியோரிடத்துண்டாவது.]

ரு. ஷட்லிங்கவடிவ யுக்திகளால் வேதாந்தத்தின் தாற்பரியத்தை நிச்சயித்தலைச் சிரவண மென்பர்.

சு. பேதத்திற்குப் பாதகமும் அபேதத்திற்குச் சாதகமுமான யுக்திகளால் அத்வைதப் பிரஹ்மத்தைச் சிந்தித்தலை மனன மென்பர்.

எ. அநாத்மாகார விருத்திகளைத் தடுத்தல் பூர்வகமான ஆத்மாகார விருத்திகளின் பிரவாகத்தை நிதித்தியாசன மென்பர்.

அ. வியஷ்டி சமஷ்டிப் பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் விவேகித்தலைப் பதார்த்தசோதன மென்பர்.

கூ. பிரஹ்மாத்மாவின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியத்தினை மகாவாக்கியமென்பர்.

கo. "தத் துவம், துவம் தத் (அது நீ, நீ அது)" என்னும் பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் ஐக்கியத்தினை அந்வய மென்பர். அதனை

யே ஓதப்புரோதபாவ மென்றும் வியதிகார மென்றுங் கூறுவர்.

க. சகல அநாத்மாகார விருத்திகளின் நிரோத முண்டாகப் பிரஹ்மாகாரமாகிய விருத்தியிலுண்டாம் அகம் பிரத்தியயத்தினைச் சாக்ஷாத்கார மென்பர். அதுவே "யான் பிரஹ்மம்" என்னும் ஞானமாம். அதனையே அபரோக்ஷஞான மென்றும் தத்துவஞான மென்றுங் கூறுவர்.

உ. பிரஹ்ம மிருக்கின்றது என்னும் ஞானத்தினைப் பரோக்ஷஞான மென்பர்.

க. சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தத்தினை விருத்தி யென்பர்.

(க) சப்தத்தில் அர்த்தத்தின் ஞானத்தை உண்டுபண்ணும் சாமர்த்தியத்தை (ஆற்றல் வடிவ சம்பந்தத்தினை)ச் சக்திவிருத்தி யென்பர்.

(உ) சக்கியத்தின் சம்பந்தத்தினை லக்ஷணை யென்பர்.

க. சக்தி விருத்தியினால் தோற்றுவதாகிய அர்த்தத்தினைச் சக்கியார்த்த மென்பர். அதனையே வாச்சியார்த்த மென்றுங் கூறுவர்.

உ. லக்ஷணா விருத்தியினால் தோற்றுவதாகிய அர்த்தத்தினை லக்ஷியார்த்த மென்பர். அதனையே சக்கியசம்பந்தி யென்றுங் கூறுவர்.

க. துவம்பதத்தின் வாச்சியம் ஜீவன்.

உ. தத்பதத்தின் வாச்சியம் ஈசுவரன்.

க. துவம்பதத்தின் லக்ஷியம் கூடஸ்தன். அதுவே ஜீவசாக்ஷி.

உ. தத்பதத்தின் லக்ஷியம் சுத்தப்பிரஹ்மம். அதுவே ஈசுவரசாக்ஷி.

க. அந்தக்கரண விசிஷ்டசேதனம் ஜீவன்.

உ. அந்தக்கரண உபகித சேதனம் சாக்ஷியாம். அல்லது உதாசீனமாய்ச் சமீபத்திலிருந்துகொண்டு அறிவதாகிய சேதனம் சாக்ஷியாம். அல்லது அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலுமுள்ள சேதனமாத்திரம் சாக்ஷியாம்.

க. மாயா விசிஷ்ட சேதனம் ஈசுவரன்.

உ. மாயா உபகித சேதனம் ஈசுவரசாக்ஷியாம். அதுவே சுத்தப்பிரஹ்மமாம்.

க. மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததனைச் சத்தென்பர்.

உ. உற்பத்தி நாச மின்றியதனை நித்திய மென்பர்.

௩. அலுப்த (கேடின்றிய) பிரகாசத்தினைச் சித் தென்பர்.

௪. பரமப் பிரீதியின் விஷயத்தினை ஆநந்த மென்பர்.

௫. எல்லாவற்றினும் அதிக வியாபகத்தினைப் பிரஹ்ம மென்பர்.

௬. தனது பிரகாசத்தில் அந்நியப் பிரகாசத்தின் அபேக்ஷை யில்லாததாய் எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பதனைச் சோப்பிரகாச மென்பர். அதனையே சுவப்பிரகாசமென்றும், சுயம்பிரகாச மென்றுங் கூறுவர்.

௭. கூடத்தை (கொல்லன் பட்டடையை)ப் போல இருப்பதனை அல்லது கூட (கபடவடிவ மாயையின் பரிணாமமான அந்தக்கரண)த்தில் இருப்பதனைக் கூடஸ்த னென்பர்; அல்லது கூட (நிச்சல)த்தன்மையாக நிற்பதனைக் கூடஸ்த னென்பர்.

௮. அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலு முள்ள சேதனமாத்திரத்தினைச் சாக்ஷி யென்பர்.

௯. பார்க்கின்றவனை அல்லது திருஷ்டியின் கர்த்தாவைத் திருஷ்டா வென்பர்.

௧0. அறிகின்றவனை அல்லது ஞானத்தின் கர்த்தாவை ஞாதா வென்பர்.

௧௧. சமீபத்திலிருந்து காண்பவனை உப திருஷ்டா வென்பர்.

௧௨. உபலப்தியின் (ஞானத்தின்) கர்த் தாவை உபலப்தா வென்பர்.

[எங்ஙனம்: சூரியன் பிரகாசத்தைச் செய் கின்றான் என்பது உபசார மாத்திரமோ, அங் ஙனமே ஆத்மா திருஷ்டியை அல்லது ஞான த்தை அல்லது உபலப்தியைச் செய்கின்றா னென்பது உபசார மாத்திரமாம். அல்லது சக்ஷு அந்தக்கரணங்களின் விருத்திபேதத் தால் இருவகை அநித்திய திருஷ்டி யுண்டு. சேதனவடிவம் நித்தியதிருஷ்டியாம். அவற் றினும் பிரதிபிம்பவடிவப் பிரகாசத்தைச் செய் யும் சூரியனைப்போல அநித்தியதிருஷ்டிக்கு ஆசிரயமாயிருத்தலால் உபசாரமாகத் திருஷ்டி யின் கர்த்தா ஆத்மா எனப்படுகின்றது. ராகு வின் சிரசைப்போல நித்தியதிருஷ்டியோ ஆத் மாவின் சொரூபமேயாம். இவ்வாறு உப

லப்தி முதலியவற்றின் கர்த்திருத்தன்மையி லும் அறிந்துகொள்க.]

கங. எல்லாவடிவத்தையும் சர்வாத்மா வென்பர். [இவை ஆத்மாவின் விதேயவிசேஷ ணங்களாம்.]

கச. தேச கால வஸ்துக்களா லாகிய அந்த (பரிச்சேத) மின்றியதனை அநந்த மென்பர். அதனையே அபரிச்சின்னம், பூமா, வியாபகம், விபு என்று கூறுவர்.

கரு. ஜீவேசுவரர் முதலிய பஞ்ச பேதங் கள் அல்லது சஜாதீயாதி மூன்று பேதங்க ளின்றியதனை அகண்ட மென்பர்.

கசு. சம்பந்த (சங்க) மின்றியதனை அசங்க மென்பர்.

கஎ. துவைத மின்றியதனை அத்வைத மெ ன்பர்.

கஅ. அவயவ (அங்க)ங்க ளின்றியதனை நிர வயவ மென்பர்.

ககூ. ஜன்ம மின்றியதனை அஜன்ம மென் றும் அஜ மென்றுங் கூறுவர்.

உ0. மரண மின்றியதனை அமர மென்பர்

அதனையே அவிநாசி யென்றும் அமிருத மென்றுங் கூறுவர்.

உக. ஜரை (மூப்பு) இன்றியதனை அஜர மென்பர்.

உஉ. கிரியை யின்றியதனை அஷ்கிரிய மென்றும் நிஷ்கிரிய மென்றுங் கூறுவர்.

உங. ஷட் (ஆறு) விகாரங்களு மின்றியதனை நிர்விகார மென்பர். அதுவே அக்கிரியமும் கூடஸ்தருமாம்.

உச. ஸ்தூல முதலிய (நான்கு) வடிவங்களின்றியதனை நிராகார மென்பர்.

உரு. மன இந்திரியங்களுக்குக் கோசர (விஷய) மாகாததனை அவ்வியக்த மென்பர்.

உசு. பிரமாணத்திற்கு விஷயமாகாததனை அப்பிரமேய மென்பர்.

உஎ. தேய்தலும் வளர்தலு மின்றியதனை அவ்விய மென்பர்.

உஅ. க்ஷரண (க்ஷய) மின்றியதனை அக்ஷர மென்றும் அக்ஷய மென்றுங் கூறுவர். (க்ஷயம் =குறைவு) [இவை ஆத்மாவின் நிஷேத்திய விசேஷணங்கள்.]

இவ்வாறு லக்ஷணாவலி சொல்லப்பட்டது.

௭௫. இப்போது தமது உபதேசத்தைச் சமாப்தி செய்கின்றவராய் ஸ்ரீ குருவானவர் தம் சிஷ்யனுக்கு ஞானம் திடமாகுதற்பொருட்டுச் சூசனை செய்கின்றார்:—

சிஷ்யனே! நீ எனது வேதோக்தமான இவ்வுபதேசத்தைக் கேட்டாய். அதனால் சப்தத்தின் சுபாவத்தினால் உன்னுடைய சித்தத்தில் திடமாக (சம்சய விபரீத பாவனைகளின்றியதாக) வேனும், அல்லது அதிடமாக (சம்சய விபரீதபாவனைகளோடு கூடியதாக) வேனும், அபரோக்ஷஞானம் அவசியம் உண்டாயிருக்குமென்பது எனக்கு அநுமானப்பிரமாணத்தினால் நிச்சயமாயிற்று. ஏனெனின்,

க. சப்தத்திற்கு இது சுபாவமாம். தேசத்தின் அந்தராயமுடைய (மறைப்புள்ள) அல்லது காலத்தின் அந்தராயமுடைய வஸ்துவின் ஞானம் சக்தி லக்ஷணைகளின் ஞானமுடைய புருஷனுக்குச் சப்தத்தினால் பரோக்ஷமாகவே உண்டாகின்றது; அபரோக்ஷமாக உண்டாகிறதில்லை.

எங்ஙனம்: தேச காலங்களின் அந்தராயமுடைய சுவர்க்கத்தின் ஞானமும் இந்திராதி

தேவர்களின் ஞானமும் சாஸ்திரவடிவ சப்தத்தினால் பரோக்ஷமாகவே உண்டாகின்றன; அபரோக்ஷமாக உண்டாகிறதில்லை.

உ. தேச காலங்களின் அந்தராய மின்றியதா யிருத்தலின் சமீப தேசத்திலும் வர்த்தமான காலத்திலு முள்ள வஸ்துவின் ஞானம் சப்தத்தினால் பரோக்ஷம் அபரோக்ஷ மென்னும் இருவகையாக உண்டாகின்றது.

எங்ஙனம் : தசமனிருக்கின்றான், மறந்த கழுத்தின் ஆபரணமிருக்கின்றது, என்று இருக்கிறதென்னும் வடிவத்தால் சப்தத்தினால் அறிவிக்கப்பட்ட அந்தராயமின்றிய தசமனது ஞானமும் கண்டத்தினது ஆபரணத்தின் ஞானமும் கேட்பவனுக்குப் பரோக்ஷமாக உண்டாகின்றன. அங்ஙனமே "சத்திய ஞானாநந்தவடிவப் பிரஹ்ம மிருக்கின்றது" என்று அவாந்தர வாக்கியத்தினால் இருக்கிறது என்னும் வடிவத்தால் அறிவிக்கப்பட்ட சுரோதாவின் சொரூபமாயிருத்தலின் அந்தராயமின்றிய பிரஹ்மம் எதுவோ, அதன் ஞானம் கேட்பவனுக்குப் பரோக்ஷமாகவே உண்டாகின்றது; அபரோக்ஷமாக உண்டாகிறதில்லை. இவ்வாறு ஞேயவஸ்துவின் சொரூபத்தை அறிவிக்கும் பதமின்றிய வாக்கியத்தினால் அந்த

ராயமின்றிய வஸ்துவின் ஞானமும் சக்தி லக்ஷணைகளின் ஞானமுடைய புருஷனுக்கு நியமமாகப் பரோக்ஷமாகவே உண்டாகின்றது.

எங்ஙனம்: நீ பத்தாமவன் இது கழுத்தின் ஆபரணம் என்று வஸ்துவின் சொரூபத்தை அறிவிக்கும் பதத்தோடுகூடிய வாக்கியத்தினால் அறிவிக்கப்பட்ட பத்தாமவன் கழுத்தின் ஆபரணமென்பவற்றின் ஞானம் சப்தத்தின் சக்தி லக்ஷணைகளின் ஞானமுடைய புருஷனுக்கு அபரோக்ஷமா யுண்டாகிறது; பரோக்ஷமா யுண்டாகிறதில்லை அங்ஙனமே சுரோதாவின் (கேட்பவனது) சொரூபத்தை அறிவிக்கும் "துவம்" முதலிய பதத்தோடுகூடிய "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களால் அறிவிக்கப்பட்ட சுரோதாவின் சொரூபமா யிருத்தலால் அந்தராயமின்றிய பிரஹ்மம் எதுவோ அதன் ஞானம் சப்தத்தினது சக்தியும் லக்ஷணையுமாகிய விருத்தியின் (சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தத்தின்) * கூஅ ஞான

* கூஅ. ஈண்டு இது அபிப்பிராயமாம்:—சப்தத்தின் சக்திலக்ஷணைகளின் ஞானமின்றிச் சப்தத்தினது அர்த்தத்தின் ஞானமுண்டாகுமாயின்: தேசாந்தரத்தில் வசிக்கும் புருஷனுக்கு வேறு தேசத்தினது பாஷையின் ஞானம் படித்தலின்றியே உண்டாதல்வேண்டும்;

முடைய புருஷனுக்கு நியமமாகத் திடமாகவாவது அதிடமாகவாவது உண்டாகின்றது.

(க) அத்தியந்த சுத்த அந்தக்கரணமுடைய உத்தம அதிகாரிக்கோ முற்கூறிய சப்தத்தினுல் திடஞானமே உண்டாகின்றது. அவனுக்கோ அபரோக்ஷஞானம் உதயமாகிய பின் சம்சய முதலியவற்றை நிவர்த்தித்தற்பொருட்டுச் சிரவண மனனுதிவடிவப் பிரயத்தினம் செய்யவேண்டியதில்லை.

(உ) எந்தப் புருஷனது அந்தக்கரணம் அத்தியந்தம் சுத்தமாகாது, சிறிது மலம் அல்லது விக்ஷேப முதலிய தோஷங்களோடு கூடியதாயிருக்கின்றதோ, அவன் மத்திம அல்லது கநிஷ்ட அதிகாரியாவன். அவனுக்கு முற்கூறிய மகாவாக்கியவடிவ சப்தத்தினுல் அந்தராயமின்றிய வஸ்துவின் ஞானமும் அதிட அபரோக்ஷமா யுண்டாகின்றது. அவனுக்கு அபரோக்ஷஞானம் உதயமாகிய பின்னும் சம்சயாதி நிவாரணத்தின் பொருட்டுச் சிரவண மனனுதி வடிவப் பிரயத்தனம் செய்யத்தக்கதாம்.

---

உண்டாகிறதில்லை. ஆதலால் பதார்த்தங்களின் ஞானத்தில் சக்திலக்ஷணைகளின் ஞானம் அபேக்ஷிக்கப்படுவதாம்.

இவ்வர்த்தம் பிரசங்கத்தாற் கூறப்பட்டது.

சிஷ்யனே! நீ சாஸ்திராப்பியாச வாயிலாகவும் முற்கூறியவிதத்தினாலும் சப்தத்தின் (தத்பத துவம்பதங்களின்) சக்திவிருத்தி லக்ஷணாவிருத்திகளின் ஞானமுடையவனாயிருக்கின்றாய், சுருதி யுக்தி எனது (குருவின்) வாக்கியம் உனது அநுபவம் என்னும் பிரமாணங்களால் உனக்கு அறியத்தக்க பிரஹ்மத்தின் வேறாகாத ஆத்மவடிவப் பிரமேயம் எதுவோ, அது சர்வாத்மா யிருத்தலால் ஒன்றற்குத் தூரமென்றும் சமீபமென்றும் சொல்லப்படுகிறதில்லை. ஆனால் எல்லாவற்றிற்கும் தானே தானாயிருத்தலின் எல்லாவற்றிற்கும் அத்தியந்த சமீபமாயிருக்கின்றது.

க. அந்த அத்தியந்த சமீபத்துள்ள பிரஹ்மவடிவ ஆத்மாவின் உபதேசத்தை யான் "தத்துவமஸி" என்றல் முதலிய மகாவாக்கியங்களால் செய்திருக்கின்றேன்.

உ. நான் உன்னை அறியத்தக்க பிரஹ்மாத்மாக்களின் ஏகத்துவவடிவ தத்துவத்தின் அஞ்ஞானத்தினாற் செய்த பிரசினையினின்றும் உபராமமாயினை யென்று காண்கின்றேன்.

ரு. உனக்கு முமுக்ஷுத்தன்மைக்குப் பின்னர் விரும்பப்பட்ட ஆத்மாவின் அபின்னமும் விஸ்மரணமடைந்த கண்டபூஷணத்தைப் போல நித்தியப்பிராப்தமுமாகிய எந்தப் பிரஹ்மத்தின் பிராப்தி இருந்ததோ அது அதன் ஞானவாயிலாகச் சித்தித்தது ஆதலால் புத்தியின் சஞ்சலத்தன்மைக்கு ஹேதுவான ரஜோகுணஜந்நிய இச்சாவிருத்தியின் நிவிருத்தி வாயிலாக அந்தர்முகமாகிய புத்திவிருத்தியில் பிரதிபிம்பத்தை யடைந்த சொரூபாநந்தத்தினது அநுபவத்தின் சூசனையைச் செய்வதாகிய முகத்தின் பிரசன்னத்தன்மை உண்டாயிருக்கின்றது. அதனையும் காண்கின்றேன். ஆதலால்,

முற்கூறிய இலிங்கங் (குறி) களால் உனக்கு அவசியம் பிரஹ்மாத்மாவினது ஐக்கியத்தின் அபரோக்ஷஞானம் உதயமாயிருக்கின்றதென்று எனக்கு நிச்சயமுண்டா யிருக்கின்றது. ஆனால் அந்த ஞானம் திடமாயிருக்கின்றது அல்லது அதிடமாயிருக்கின்றது என்னும் நிச்சயம் எனக்கு உண்டாகவில்லை. ஏனெனில்,

க. அந்தக்கரணமும் அதன் விருத்தியும் சூக்ஷ்ம பஞ்சபூதங்களின் காரியமாம். ஆத

லால் இந்திரிய வடிவப் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விஷயமாகா ஆனால் அவை (அந்தக்கரணமும் அதன் விருத்தியும்) சாக்ஷிக்கு (அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலுமுள்ள சேதன மாத்திரத்திற்கு) விஷயமாம்.

உ. தத்துவஞானமும் அந்தக்கரணத்தின் விருத்திவடிவமாம். ஆதலால் அது இந்திரியங்களுக்கு விஷயமாகாது. இதனாலே பிரத்தியக்ஷத்தன்மையினால் உன்னுடைய ஞானத்தின் திடத்தன்மையையேனும் அதிடத்தன்மையையேனும் அறியமாட்டேன்.

ங. அல்லது, ஞானியின் ஸ்வசொரூபத்தில் கதி (பிரவேச) வடிவ ஞானம் எதுவோ, அது மனிதனால் அறியத்தக்கனவாகிய ஆகாயத்தில் பறக்கும் பக்ஷியின் கதி, க்ஷணநேரமிருப்பதாகிய மின்னலின் கதி, சுகதுக்க முதலிய தர்மங்களால் முகத்தின் வாட்டத்திற்கும் மலர்ச்சிக்கும் ஏதுவான மனதின் கதி என்பவற்றிற்கு விலக்ஷணமாம்; சாதாரண மனிதனால் அலக்ஷியமா (அறியத்தகாததா) யிருத்தலின்.

ச. யோகியினால் லக்ஷியமாகும் ஜலப்பிரவாகத்தில் எதிர்த்துச் செல்வதாகிய சொற்ப

மச்சத்தின் கதி எதுவோ, அதனினும் முற்கூறிய ஞானியின் கதி விலக்ஷணமாம்; சர்வஞ்ஞனாகிய சித்தயோகியினாலும் அலக்ஷியமாயிருத்தலின்.

ரு. தன்னினும் அதிகனான வேறு சித்தயோகியினால் அறியத்தக்கதா யிருத்தலின் துர்லக்ஷியமாகும் (துக்கத்தினால் அறியத்தக்கதாயிருக்கும்). சர்வஞ்ஞ சித்தயோகியின் கதியினும் முற்கூறிய ஞானியின் கதி விலக்ஷணமாம்; மகாயோகியினாலும் அலக்ஷியமாயிருத்தலின். ஆதலால்,

ஞானமார்க்கத்தை யறியாத அஞ்ஞ புருஷர்களாலோ ஞானத்தின் கதி முற்றும் அலக்ஷியமாம்.

௬. ஞானமார்க்கத்தைக் கண்ட வேறு அறிஞன் எவனோ, அவன் மற்றைய ஞானியினது நிஷ்டையினைத் தனது சொரூபத்திற்குப் பின்னத்தன்மையாகக் காண்பானாயின், துவைதத்தைக் காண்பவனாகுதலின் தான் அஞ்ஞானியாவன். அதனை (முற்கூறிய நிஷ்டையினை) அவன் (மற்றைய அறிஞன்) தனது சொரூபத்தின் அபின்னத்தன்மையாகக் காண்பானாயின், அது (தனது ஆத்மாவினும் வேறாகாத தன்

மையாகக்காணுதல்) தனது நிஷ்டையேயாம். அதனையே காண்கின்றான். மற்றைய ஞானியின் நிஷ்டை (கதி) யினைக் காண்கிறதில்லை. ஆதலால் மற்றைய அறிஞனும் ஞானியின் கதி பிரத்தியக்ஷத்தன்மையினால் அறிதற்கரியதாம். ஆதலால் அபரோக்ஷத்தன்மையினால் உன்னுடைய ஞான நிஷ்டையின் திடத்தன்மையினையாவது அதிடத்தன்மையினையாவது யான் அறியமாட்டேன்.

எ. வெகுகால சகவாசத்தினால் வசனமுதலிய லிங்கங்களால் அறிவிக்கப்பட்ட

க. குணாதீதத்தன்மை,

உ. சமீபித்திருக்கும் மிருத்தியுவின் (மரணத்தின்) ஞானத்தினால் பயமின்மை,

ங. இஷ்டாநிஷ்டங்களில் மோகமும் சோகமுமின்மை என்றல் முதலிய ஞானியின் * கூகூ. ஸ்வசம்வேத்திய லக்ஷணங்களினால்

---

கூகூ. எந்த லக்ஷணம் பாகவதத்தின் ஏகாதசஸ்கந்தத்திற் கூறிய மேலான கிருபையுடைமை முதலிய(ஙo) பாசம்வேத்திய (பிறராலறியப்படும்) லக்ஷணங்களைப் போலப் பிறருக்கு அறிய வருகிறதில்லையோ, ஆனால் ஞானியாகிய தனக்கே அறியவருகின்றதோ, அது ஞானியின் ஸ்வசம்வேத்திய (தன்னால் அறியப்படும்) லக்ஷணமாம்.

வேறு அறிஞுல் அநுமானத்திஞல் அறியத் தக்கது ஞானியின் கதியாம். ஆஞல் உபதே சத்திற்குப்பின் உனக்கும் எனக்கும் வெகு காலபரியந்த சகவாசம் (கூடவிருத்தல்) உண் டாகவில்லை. ஆதலால் உனக்குண்டாகிய ஞா னம் எதுவோ அது திடம் அல்லது அதிடம் என்பதை அநுமானத்திஞலும் யான் அறிய மாட்டேன்.

அ. முமுக்ஷுவிற்கோ (க) பூர்வ புண்ணி யத்திஞலும், (உ) உலகத்தில் அவனது பிரஹ் மவித்துத் தன்மையின் பிரசித்தியிஞலும், (௩) அவனது பிரமநிவிருத்திவாயிலாகச் சாந்தியை யுண்டுபண்ணும் வசனங்களிஞலும் "இவன் ஞானி" என்னும் பாவனை உண்டாகின்றது.

க. ஆதலால் சிஷ்யனே! நான் உனக்கு இதனைத் தெரிவிக்கின்றேன்:—உனக்குச் சம் சய விபரியயவடிவ தோஷமின்றிய திடஞான முண்டாயிருக்குமாயின், நீ கிருதகிருத்திய (செய்யவேண்டியவற்றைச் செய்தவ)னும் பிரா ப்தப்பிராப்பிய (அடையவேண்டியவற்றை அ டைந்தவ)னுமாவாய். ஆதலால் உனக்கு அத் தோஷங்களின் நிவிருத்தியின்பொருட்டுச் சிர வண மனன முதலிய எம்முயற்சியும் செய்ய வேண்டியதில்லை.

உ. உனக்குச் சம்சய விபரியய வடிவ தோஷத்தோடு கூடிய "யான் பிரஹ்மம்" என்னும் நிச்சயவடிவ அதிட (மந்த) போத முண்டாயிருக்குமாயின், அப்போது உனக்குச் சிரவணுதிகள் மூன்றும் செய்யத்தக்கனவாம்.

க. அவற்றுள்ளும், உனக்கு உபநிஷத்து வடிவ அல்லது அதன் அநுசாரியான ஏனைச் சம்ஸ்கிருத அல்லது பிராகிருத பாஷைகளின் கிரந்தவடிவ வேதாந்தசாஸ்திரம் பிரஹ்மாத்ம ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கின்றதா? அல்லது வேறுபொருளைப் பிரதிபாதிக்கின்றதா? என்னும் வடிவினதாகிய கேவலப் பிரமாணகதசம்சய முண்டாயின், அப்போது உனக்குச் சிரவணமாத்திரம் செய்யவேண்டியதாம்.

உபநிஷதங்களின் அப்பியாசவடிவ அல்லது அதனை யநுசரித்த மற்றைய சம்ஸ்கிருத அல்லது பிராகிருத பாஷாகிரந்தங்களின் அப்பியாசவடிவ விசாரமாகிய சாதன (குருமுகமாக வாக்கியத்தின் சிரவணவடிவ அங்கியின் வேருகிய அங்கச்) சிரவணமெதுவோ அதன்வாயிலாக.

க. உபக்கிரம உபசம்ஹாரம் (ஆரம்பம் சமாப்தி),

௨. அப்பியாசம் (அடிக்கடி சொல்லுதல்),

௩. அபூர்வதை (சுருதிக்குவேருகிய பிரமாணங்களுக்கு விஷயமாகாமையினுலேனும் சொப்பிரகாசத்தன்மையினுலேனும் அத்வைத வஸ்துவின் அலௌகிகத்தன்மை),

௪. பலம் (அநர்த்தநிவிருத்தியும் பரமாநந்தப்பிராப்தியுமாகிய மோக்ஷம்.)

௫. அர்த்தவாதம் (பேதஞானத்தின் நிந்தையும் அபேதஞானத்தின் ஸ்துதியும்),

௬. உபபத்தி (அத்வைதஞானத்திற் கநுகூலமான திருஷ்டாந்தவடிவ யுக்தி) என்னும் இவை தாற்பரியத்தை நிச்சயிக்கும் ஆறுலிங்க வடிவ யுக்திகளாம். [ஸ்ரீபஞ்சதசியின் திருப்திதீபத்தினது கoக-வது சுலோகத்தின் டிப்பணத்திலும் அங்ஙனமே ஸ்ரீ விருத்திரத்நாவலியிலும் அங்ஙனமே ஈசோபநிஷத்தின் வியாக்கியானத்திலும் இவ்விலிங்கரூப யுக்திகள் சிறிது வர்ணிக்கப்பட்டிருக்கின்றன வாகலின் ஈண்டெழுதப் படவில்லை.] இந்த ஆறுலிங்க வடிவ யுக்திகளால் வேதாந்தத்தின் (உபநிஷதங்களின்) தாற்பரியத்தை நிச்சயித்தல் சிரவணமெனப்படுகின்றது. அது உனக்குக் கர்த்

தவ்வியமாம். இதனால் (சிரவணத்தினால்) முற்கூறிய பிரமாணகத சம்சயத்தின் நிவிருத்தி உண்டாகின்றது.

உ. உபநிஷதங்களின் விசாரத்தினாலேனும் அல்லது அதனை அநுசரித்த மற்றைய சம்ஸ்கிருத பிராகிருத கிரந்தங்களின் விசாரத்தினாலேனும், அல்லது உண்மை யுரைக்கும் குருவின் வாக்கியத்திலுள்ள திட விசுவாசத்தினாலேனும் உபநிஷதவடிவப் பிரமாணத்தினால் அறியத்தக்க பிரஹ்மாத்ம ஐக்கியவடிவப் பிரமேயம் எதுவோ, அது உபநிஷதங்களில் அவசியம் நிரூபணஞ் செய்யப்பட் டிருக்கின்றது என்னும் நிச்சயத்தினால் உனக்குப்பிரமாணகத சம்சய முண்டாகாமல், பிரஹ்மமாகிய பரமேசுவரன்,

(க) சர்வஞ்ஞத் தன்மைமுதலிய குணங்களோடுகூடியவன்;

(உ) க. அவித்தை, உ. அஸ்மிதை, ௩. ராகம், ச. துவேஷம், ரு. அபிநிவேசம் என்னும் ஐந்துகிலேசங்களு மின்றியவன்;

(௩) எங்கும் பூர்ணன்;

(ச) எனது உபாசியன் (உபாசிக்கப் படுபவன்); ஜீவனாகிய யான்,

(க) அற்பஞ்ஞத்தன்மை முதலிய குணங்களோடு கூடியவன்;

(உ) அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்களோடு கூடியவன்;

(ங) தேகத்தின் சம்பந்தியா யிருத்தலின் பரிச்சின்னன்;

(ச) அதன் (பிரஹ்மத்தின்) உபாசகன் என்னும் இத்தன்மைய அசம்பவத்தினல் பிரஹ்ம ஆத்ம ஐக்கியவடிவ வேதாந்தத்தின் பிரமேயம் எதுவோ, அது என்னுடைய புத்தியில் வருவதில்லை. ஆதலால் "பிரஹ்மாத்ம ஐக்கியம் சத்தியமா?" என்னும் வடிவுடைய கேவலப் பிரமேய சம்சயமுண்டாயின், உனக்கு,

(க) இரஜ்ஜு சர்ப்பம், சுத்தி ரஜதம், கண்ணுடியிலுள்ள நகரபிரதிபிம்பம் என்றல் முதலிய திருஷ்டாந்த வடிவமும்,

(உ) [க] பேதமின்றிய ஆத்மாவில் பிரஹ்மத்தின் பேதமிருக்கின்றதா? [உ] அல்லது பேதத்தோடுகூடிய ஆத்மாவில் பிரஹ்மத்தின் பேதமிருக்கின்றதா?

(ங) க. பெயர் ஜாதிமுதலிய துவைத வடிவ விகற்பமின்றிய ஆத்மாவில் விகற்ப

மிருக்கிறதா? உ. அல்லது விகற்பத்தோடு கூடியதில் விகற்ப மிருக்கின்றதா? என்னு மிரண்டிடத்திலும்,

[௧] முதற் பக்ஷத்தில் வியாகாத தோஷ முளது,

[௨] இரண்டாவது பக்ஷத்தில் ஆத்மாசிரயம் அந்நியோந்நியாசிரயம் சக்கிரிகை அநவஸ்தைமுதலிய தோஷங்களுண்டாகின்றன என்பதுமாகிய,

இவைமுதலிய பேதத்தின் பாதகயுக்திகளாலும்,

(௪) கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் சொரூபமாக என்றும் அபேதமுண்டு: அங்ஙனமே நிருபாதிகப் பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் சொரூபமாக என்றும் அபேதமுண்டு என்றல் முதலிய அபேதத்தின் சாதக யுக்திகளாலும்,

அத்வைதப் பிரஹ்மத்தின் (பிரஹ்மாத்மாவினது அபேதத்தின்) சிந்தித்தல்வடிவ மனனஞ் செய்யத்தக்கதாம்.

௫. உனக்கு முற்கூறிய இருவகைச் சம்சயமுண்டாயின் நீ முற்கூறிய வகையான சிரவண

மனனங்களிரண்டையும் செய்யவேண்டும்.

ச. உனக்கு எவ்வகையான சம்சயமும் இல்லாமல் ஞானத்திற்குமுன் சகுணப் பிரஹ்மத்தின் பூரண உபாசனையினால் உண்டாகும் சித்தத்தின் ஏகாக்கிரதன்மை யின்மையினால் "நான் ஜீவனாயிருக்கின்றேன்; பிரஹ்மத்திற்கும் எனக்கும் உள்ளபேதம் சத்தியம்; தேகமுதலிய ஜகத்து சத்தியம்" என்னும்வடிவினதான க்ஷணங்கள் தோறும் எழும்புவதாகிய புத்தி வடிவ கேவலவிபரீத பாவனை (ரஜ்ஜுவில்சர்ப்பத்தின் நிச்சயம்போல ஆத்மாவின் யதார்த்த சொரூபத்திலும் விபரீதமான நிச்சயம்) உண்டாகுமாயின், அப்போது நீ விஜாதீயப் பிரத்தியயங்களின் (அநாத்மாகார விருத்திகளின்) நீக்கத்தோடு கூடிய சஜாதீயப் பிரத்தியயங் (ஆத்மாகார விருத்தி)களின் பிரவாக வடிவ நிதித்தியாசனத்தை (சவிகற்பசமாதியை)ச்செய்யவேண்டும.

ரு. உனக்கு இருவகைச் சம்சயமும்விபரீத பாவனையு முண்டாகுமாயின், அப்போது நீ முற்கூறிய சிரவணம் மனனம் நிதித்தியாசனம் என்னும் மூன்றனையும் செய்யவேண்டும். அஞ்சனத்தி (மையி) னால் நேத்திர ரோகத்தின் நிவிருத்திவாயிலாகச் சூரியனது சாக்ஷாத்கார

முண்டாகுதலைப்போல அச்சிரவணாதி சாத னங்களைச்செய்ய நிதித்தியாசனத்தின் பரி பாக அவஸ்தைவடிவத் தியானிப்பவன் தியா ன மென்பவற்றின் மறதியுண்டாய் அத்விதீய சொப்பிரகாச பிரத்தியகபின்ன பிரஹ்மவடி வத் தியேயாகார (தியானிக்கப்படு பொருள் வடிவ) விருத்தியின் ஸ்திதிமயமான க்ஷணிக (கணப்போதிருப்பதான) சமாதிவடிவ சாக்ஷா த்கார (திட அபரோக்ஷஞான) முண்டாகும். அதனால் அதேகணத்தில் காரியத்தோடு கூடிய அவித்தையின் நிவிருத்தியும் (முக்காலாத்தின் மையின் நிச்சயவடிவ பாதமும்) பரமானந்த வடிவப் பிரஹ்மத்தின் ஆவிர்ப்பாவமுமாகிய ஜீவன் முக்தியுண்டாகும்.

ஆதலால் இப்போது நீ சிரவண மனனத் தியானங்களால் உதயமாகிய ஞானத்தினைத் திடஞ்செய்க. பின்னர்,

க. உனக்கு உத்தமப் பிராரப்த முளதாயின் உன்னுடைய ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந் தத்தினது அநுபவத்தின் பொருட்டு வித்வத் சந்நியாச (ஞானவான் சந்நியாச) வடிவ நிவி ருத்தியைக் கொள்ளுதலோடு நிர்விகற்ப சமா தியின் அதிக அப்பியாசம் உண்டாகும்.

உ. உனக்கு மத்திமப் பிராரப்தமுளதாயின் ஸ்நானம், சந்தியை, தேவபூஜை, சாதுசேவை குருபக்தி, சாஸ்திராத்தியயனம் என்னும் இவைமுதலிய சாஸ்திரத்திற் கூறப்பட்ட வியவகாரங்கள் உண்டாகும்.

௩. உனக்குக் கநிஷ்ட பிராரப்த முளதாயின் வேளாண்மை, வாணிபம், சேவகம், குடும்பசம்ரக்ஷணே, ராஜ்யபாலனம் என்றல் முதலிய கிலேசவடிவ கனிஷ்டமான லௌகிக வியவகாரமுண்டாகும். ஆனுல்,

கானல் ஜலத் தோற்றத்தால் பிருதிவியின் நனேதலுண்டாகாமை போலப் பாதமாகிய பிரபஞ்சத்தின் அநுவிர்த்தியி (பின் தோற்றத்தி) ஞல் தேகம் விழும்வரையில் பிராரப்தாநுசாரமாகத் தோற்றிய இந்த வியவகாரங்களால் உனக்கு ஒரு ஹாநியும் லாபமு மில்லே.

சிஷ்யனே! நீ திடஞானத்தால் முன்னிருந்த பேதவாதி வயிறு வளர்க்கும் பாமரன் என்பவர்களது சங்கத்தையும், ஸ்திரீயினேயும் ஸ்திரிகளின் சங்கமுடைய விஷயிபுருஷர்களின் சங்கத்தையும் விட்டுவிடுக. ஏனெனின், அவர்கள் சங்கம் எதுவோ அது உதயமாகிய மந்தபோதத்தை நாசஞ்செய்வதாம்,

அங்ஙனமே குருவடிவ ராஜா மோக்ஷமென்னும் காரியசித்தியின் பொருட்டு முமுக்ஷு வடிவப் பிராஹ்மணரைச் சாஸ்திரத்திற்கூறிய சச்சிதாநந்தாதி லக்ஷணங்களோடுகூடிய ஆத்ம வடிவ பசுவினை விசாரித்து நிச்சயஞ் செய்தலாகிய பிராப்தியின் பொருட்டுச் சாஸ்திர யுக்திகளால் விசாரஞ் செய்தலாகிய தேசாந்தரத்துக் கனுப்பினார். அப்போது அம்முமுக்ஷுவாகிய பிராஹ்மணர் பிரஹ்மத்திற் கபின்னமான ஆத்மாவின் நிச்சயவடிவ அப்பசுவின் அடைவைச் செய்தார். ஆனால் பேதவாதிமுதலிய ஜனசமுதாய வடிவ திருடர்களின் சங்கத்தால் சம்சயத்தையும் தேகமுதலிய அநாத்மாவின் யான் எனதென்னுந் தன்மைவடிவ விபரீத பாவனையையும் அடைகின்றார். அவருக்கு மறுபடியும் குருவடிவ ராஜாவின் சங்கம் கிடைக்குமாயின், அந்த விபரீதபாவனை நிவிருத்தியாய் விடும். இல்லையாயின் ஆத்மாவாகிய பசுவைப் போக்கடித்து, ஜனன மரண முதலிய சம்சாரமென்னும் பச்சாத்தாபத்தினை (பின்னிரங்குதலை)யே அநுபவிப்பர். ஆதலால் பேதவாதி முதலியோர்களின் சங்கவடிவ குசங்கம் திடஞானத்திற்கு முன்னரே நீக்கத்தக்கதாம்.

திடஞானத்திற்குப் பின்னும் ஜீவன்முக்தி

யினது விசேஷசுகத்தின் பொருட்டு முற்கூறிய ஜனங்களது சங்கம் விடத்தக்கதாம்.

“ 𑌨𑌿𑌸𑍍𑌸𑌙𑍍𑌗𑌤𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌪𑌦𑌂 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂 𑌸𑌙𑍍𑌗𑌾𑌦𑌶𑍇𑌷𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌦𑍋𑌷𑌾𑌃 | 𑌆𑌰𑍂𑌢𑌯𑍋𑌗𑍋𑌽𑌪𑌿 𑌨𑌿𑌪𑌾𑌤𑍍𑌯𑌤𑍇𑌽𑌧𑌃 𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑍀 𑌕𑌿𑌮𑍁𑌤𑌾𑌲𑍍𑌪𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 ||

முயற்சியுடைய புருஷர்களுக்குச் சங்கத்தின் அபாவ (ஜனங்களோடு ராகத்துவேஷ முதலியவை யின்றிய தன்மையாகிய உதாசின) த்தன்மை முக்திபதமாம். சங்கத்தினால் சகல தோஷங்களும் உண்டாகின்றன. யோகாரூட புருஷனும் சங்கத்தினால் நழுவுகின்றானெனின், அற்பசித்தியுடைய புருஷன் (அபக்குவ யோகி) சங்கத்தினால் நழுவுவன் என்பதில் என்ன சொல்லவேண்டி யிருக்கிறது?” என்று வேறு சாஸ்திரத்திற் சொல்லப்பட் டிருக்கின்றது. இவ்வர்த்தத்தில் மற்றும் அநேகப் பிரமாணங்களுள. அவை விரிவஞ்சி எழுதப்படவில்லை ஆஸ்திக அதிகாரிகளுக்கு விசேஷப் பிரமாணங்களின் அபேக்ஷையில்லை. ஏனெனின்,

“ 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍋𑌪 𑌭𑌵𑌤𑌿

பிரஹ்மவித்து (பிரஹ்மத்தை யறிந்தவன்) பிரஹ்மமேயாகின்றான்" என்னும் சுருதியினால் அவனுக்கோ (மிகுந்த விசுவாசமுள்ள அதிகாரிக்கோ) பிரஹ்மஞானியாகிய புருஷர்களது சகல (சமஸ்கிருத அல்லது பிராகிருத பாஷையின்) வாக்கியங்களும் பேதப் பிராந்தியைச் சேதிப்பனவா யிருத்தலின் வேதவடிவமாய்க் காணப்படுகின்றன. இதனானும் இந்நூலிற் சிலவிடத்துச் சுருதிமுதலிய பிரமாணங்கள் விசேஷமாய் எழுதப்படவில்லை. ஆதலால் ஞானம் உண்டாகிய பின்னரும் குசங்கத்தினின்றும் விலகியிருத்தல் தகுதியாம்.

சங்கதோஷத்தைக் கெடுப்பவர்களாகிய சத்புருஷர்களது சங்கம் செய்யவே பலத்தினால் நிஸ்ஸங்கத்தன்மையை யடைகின்றான். ஆதலால் வாசனக்ஷய முதலிய பலத்திற்கு ஏதுவாயிருத்தலின் அந்தச் சாதுசங்கம் எப்போதும் செய்யவேண்டியதாம்.

எ௬. க. வைராக்கியம், உ. ஞானம், ௩. உபரதி என்னும் மூன்றற்கும் க. ஏது, உ. சொரூபம், ௩. பலம், ௪. அவதி என்பவற்றை அறிந்து அவற்றை இருதயத்தில் தாரணஞ்செய்க. இம்மூன்றையும் ஒருங்கே

கொள்ளுதல் ஜீவிக்கின்ற நரனுக்கு அவதியின் றிய சுகமாம். அதாவது ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்தத்திற்கு ஏதுவாம்.

க. (க) இந்த லோகத்தின் விஷயங்களி லும் பரலோகத்தின் விஷயங்களிலும் அநித்தி யத்தன்மையின் புத்திவடிவ தோஷதிருஷ்டி (விவேகம்) வைராக்கியத்தின் ஏதுவாம்.

(உ) ஜிஹாஸை (விடுதலின் இச்சை) வை ராக்கியத்தின் சொரூபமாம்.

(ங) விட்டபின் அந்தப் போக்கிய (விஷய) ங்களில் உண்டாகும் உபரதி வைராக்கியத்தின் பலமாம்.

(ச) எல்லாவற்றினும் மேலான பிரஹ்ம லோகத்தையும் துரும்புபோற் (துச்சமாக்) காணுதல் [அப்போது இந்தலோக முதலிய வற்றைத் துரும்புபோற் காண்பதிற் சொல்ல வேண்டிய தென்னே?] வைராக்கியத்தின் அவ தியாம்.

இவை விராகத்தின் ஏதுமுதலியன வென்ற றிக.

உ. (க) குருமுகமாக மகா வாக்கியத்தின் உபதேசமும் சாஸ்திரத்தின் விசாரமுமாகிய

இருவகைச் சிரவணாதி (சிரவண மனன நிதித்தியாசன மென்னும்) மூன்றும் ஞானத்திற்கு ஏதுவாம்.

(உ) மித்தையினையும் (சகல அநாத்ம வஸ்துகளையும்) தத்துவத்தையும் (பிரத்தியக பின்ன பிரஹ்மத்தையும்) விவேகித்தல், அதாவது நிஷ்பிரபஞ்ச ஆத்மாவின் (தன்னின்) வேறாகாத பிரஹ்மத்தின் நிச்சயம் தத்துவ ஞானத்தின் சொரூபமாம்.

(ங) மீண்டும் கிரந்தி (முடிச்சு) உதயமாகாமை அதாவது காரண (அவித்தை) காரியங் (ஜந்மாதி) களோடு கூடிய அந்நியோந்நியாத் தியாசவடிவ சித் ஜடக் கிரந்தியின் அத்தியந்த நிவிர்த்தி (பரமாநந்தத்தின் பிராப்திவடிவ மோக்ஷம்) தத்துவஞானத்தின் பலமாம்.

(ச) தேகத்திற்போல அதாவதுமுன் (அஞ்ஞானதசையில்) தேகத்தில் ஆத்ம புத்தியிருப்பதுபோல அதன் (தேகத்தில் ஆத்மஞானத்தின்) பாதகமான ஒரே (பிரஹ்மத்திற்க பின்னமான) ஆத்மாவில் புத்தியுண்டாயின் அது தத்துவஞானத்தின் அவதியாம்.

ங. (க) இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம்,

சவிகற்பசமாதி, என்னும் எட்டும் உபரதிக்கு ஏதுவாம்.

(உ) சித்தத்தின் நிரோதவடிவ யோகம் (நிருவிகற்பசமாதி) உபரதியின் சோரூபமாம்.

(௩) வியவகாரத்தின் விஸ்மிருதி (மறதி) உபரதியின் பலமாம்.

(௪) சுழுத்தியைப்போல உண்டாயின் அது உபரதியினது (உபசத்தியினது) அவதி (எல்லை) யின் சோரூபமாம்.

க. வைராக்கியம் ஞானத்திற்கு ஏதுவாம்.

உ. ஞானம் உபரதிக்கு ஏதுவாம்.

௩. உபரதி சாந்திக்கு ஏதுவாம்.

௪. சாந்தி சுகத்திற் கேதுவாம்.

க. வைராக்கியத்தினுல் வாசனை நசிக்கின்றது.

உ ஞானத்தினுல் அஞ்ஞானம் கெடுகின்றது.

௩. உபரதியினுல் மனதின் நாசம் உண்டாகின்றது. அதாவது பிரஹ்மாப்பியாச பலத்தாற் ரஜோகுண தமோகுணங்கள் திரஸ்கார

மாக (நீங்க) சத்துவகுணத்தின் ஆவிர்ப்பாவம் (வெளிபடுதல்) உண்டாகின்றது.

ஈண்டு மனமென்னும்சொல்லால் ரஜோகுண தமோகுணங்களால் சத்துவகுணம் நீங்குதலாகிய மனதின் ஸ்தூலத்தன்மை கொள்ளப்படுகின்றது மனோநாசமென்னுஞ் சொல்லால் முற்கூறிய மனதின் ஸ்தூலத்தன்மையினது நாசம் கொள்ளப்படுகின்றது.

இவ்வாறு வாசனாக்ஷயம், அஞ்ஞானக்ஷயம், மனோநாசம் என்னும் மூன்றும் சித்திக்கவேமூன்று தேகத்தின் அபிமானமும் நிவிருத்தியாயிற்று.

ஈண்டு இது விவேகமாம்:—

க. ஸ்தூலதேகத்தினது அபிமானத்தின் நிவிருத்தியினால் சகல வாசனைகளும் க்ஷயமாகின்றன.

உ. சூக்ஷ்மதேகத்தினது அபிமானத்தின் நிவிருத்தியினால் மனோநாசம் உண்டாகின்றது.

௩. காரணதேகத்தின் நிவிருத்தியினால் அவ்வடிவ அஞ்ஞானத்தின் நாசம் சித்தமாகின்றது. இவ்வாற்றால் ஞானிக்கு விவேகத்தின்

பலத்தினாலேயே வாசனாக்ஷய முதலியவற்றின் சித்தி சகஜமா யுண்டாகின்றது. அதுவே மீண்டும் அப்பியாசபலத்தால் வளர்த்தற்குரியதாம்.

எஎ. இவ்வாறு நிவிருத்தியின் பிராரப்தத்தையுடைய ஞானிக்கு ஜீவன்முக்தியின் விலக்ஷணானந்தத்தின் பொருட்டு வாசனாக்ஷய மனோநாசங்களின் விசேஷ அப்பியாசவடிவ கர்த்தவ்யத்தைச் சொல்லி, இப்போது பிரவிருத்தியின் பிராரப்தத்தையுடைய ஞானிக்கு வெளி வியவகாரத்தில் தோஷ திருஷ்டி மித்தியாத்துவ புத்திகளாற்றோன்றிய திட வைராக்கியத்தினால் உள்ளில் நிர்மோகமா (அகந்தை மமதை வடிவமயக்கமின்றி) யிருத்தல் தகுதியாம் என்பதை யுபதேசித்தற்பொருட்டு மோகஜித்தின் கதையை ஸ்ரீ குருவானவர் கூறுகின்றார்.

ஓர் அரசனது குலமுழுவதும் (க ராஜன், உ. ராணி, ௩. ராஜபுத்திரன், ௪. புத்திரனது மனைவி, ௫. தாசி) என்னுமிவர்கள் ஞானமுடைமையால் மோகஜித்தா (மோகத்தை ஜயித்தவர்களா) யிருந்தார்கள் என்பது ஓர் உதாரணம். இந்த மோகமின்றிய வார்த்தையைக் கேட்கின் சிறிதும் மோக முண்டாகாது.

மோகஜித்தின் கதை வருமாறு:—

ஓர் ஞானமுடைய ராஜாவின் குலமுழுவதும் மோகத்தை ஜயித்தவர்களாயிருந்தனர். ஒரு சமயத்தில் ஓர் வனத்தின் சிங்கம் ராஜநகரத்தின் ஜனங்களை நாள்தோறும் வந்து கொல்லத்தொடங்கியது. அதனைக் கொல்லுதற்பொருட்டு அநேக மனிதர்களோடு மகாராஜகுமாரன் குதிரையில் ஏறியவனாய் வனத்திற்குச் சென்றான். அந்தச் சிங்கம் கண்ணுக்குப் புலப்படவே எல்லா மனிதர்களையும் பின்விட்டுத் தான் ஒருவனாகவே சிங்கத்தின் வழியை அநுசரித்தான் பின்னர்ச் சாயங்காலத்தில் அச்சிங்கம் மகாவனத்தில் மறைந்துவிட, அப்போது அவ்விராஜகுமாரன் ஆண்டுக் கங்கையின் சமீபத்திருந்த ஓர் யோகியின் ஸ்தானத்தைக் கண்டு, அதன் சமீபத்திற்சென்று அந்த யோகீசுவரருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தான். அவனைப் பார்த்து யோகீசுவரர் நீ யார் என்று கேட்டார். அப்போது ராஜகுமாரன் யான் மோகஜித்தென்று சொன்னான். அதனைக் கேட்டு யோகி ஆச்சரியமடைந்தார். அதனைக்கண்டு மீண்டும் ராஜகுமாரன் யோகீந்திரரே! யான் மாத்திரமே மோகஜித்தல்லன்; என் குலமுழுவதும் மோகஜித்தாம் என்று

கூறினான். அதனைக் கேட்டு யோகீசுவரர் மிகுந்த ஆச்சரியத்தை யடைந்து ராஜகுமாரனை! உங்களுடைய குலமுழுவதும் மோகஜித்தென்னும் வார்த்தையினை யான் எப்படி அறிவது என்று கேட்க ராஜகுமாரன் சொல்லுகின்றான்:—செந்நிறப்பழத்தினது சாயத்தின் கறையோடுகூடிய எனது வஸ்திரங்களையும் குதிரை நகை முதலியவற்றோடு சஸ்திரங்களையும் தாம் ராஜ நகரத்திற் கொண்டுபோய்ப் பரீக்ஷிக்கலாம் என்றான். அப்போது அந்த யோகி முற்கூறிய சகல சாமக்கிரியைகளையும் உடன்கொண்டு ராஜநகரத்திற் சென்றார்

ஆண்டு முதலில் மகாராஜகுமாரனது தாசிக்குச் சகல சாமக்கிரியைகளையும் காட்டி,

"இறைமகன்வார்த்தை தாசி யியம்புவ னுனக்குக் கேண்மோ, நிறைவலிச் சீய மன்னோ னீடுடல் பிளந்து தந்தப், பொறையுட லெனது வீட்டிற் பொருந்துறக் கிடவாநின்ற, தறைதரு கின்ற தண்மை யையுறே லிறையு மாதோ"

என்று சொன்னார்

அதனைக் கேட்டுத் தாசி,

"அடிமையா னல்லன் கண்டீ ரவ்விறை மகனுக் கிந்தப், படிமிசை யடியேற்கன்னோன் பற்றுள விறைவ

னல்லன், மடிதிரைக் கடலி னோடை மாண்பயன் கட த்த லன்றிக், கடியமற் றதனாற் கொள்ளுங் காரியம் பிறிதொன் றுண்டோ"

என்று உத்தரஞ் சொன்னாள்.

மீண்டும் அந்த யோகி ராஜாவின் ஆசிரய மிருத்தல்பற்றி இத்தாசிக்குச் சோகமுண்டாக வில்லை ஆனால் அவனுடைய பத்தினிக்கு மோகபூர்வகமான சோகமுண்டாகும் என்றெ ண்ணி அவளுக்குச் சர்வ சாமக்கிரியைகளையும் காட்டி,

"சுந்தரி நினது மேன்மைச் சுவாமியின் வார்த்தை கேட்டி, விந்தையீ துனது நேயன் வீரிய முள்ளான் றன்னை, யந்தரி யூர்தி யந்தோ வதிர்த்துமே கொன்ற தந்தச், சுந்தரச் செல்வனைய் துணைவனை யிகந்தா யன்றே."

என்று சொன்னார்.

அதனைக்கேட்டு மகாராஜகுமாரனது பத்தினி

" தவமுடை முனிவ செய்யுந் தகைபெறுதவத்தை நீக்கி, யவமதா மமதை தன்னா லாகிய சோகங் கொண் டா, யவருட னடிய னேனுக் கமைந்தவோர் சேர்க்கை யிந்தப், பவமதி லினைத்து நாளாம் பான்மையையுடைய தன்றே "

என்று உத்தரஞ் சொன்னாள்.

மீண்டும் வேறு தாயின் புத்திரியாகிய அந்த ராஜகுமாரனது மனைவிக்கு ராஜசுக மிருத்தல் பற்றிச் சோகமுண்டாகவில்லை. ஆனால் அவனுடைய தாய்க்கு அவசியம் மோக பூர்வகமான சோகமுண்டாகுமென் றறிந்து, அந்த யோகியானவர் அவனது தாயினிடத்துச் சென்று சகல சாமக்கிரியைகளையும் காட்டி,

"அன்னையே யந்தோ கேளா யறைவனென் றனைது மேன்மை, முன்னிய சுதனைக் காய்ந்து முனணரி யேறு கொன்ற, தன்னவ னிறந்த தாய காரிய மதனன் யானு, மென்ன தின் னுணவு மின்னு மேற் றில னென்னே செய்வல்"

என்று கூறினார்.

அதனைக் கேட்டு அவன் தாய்.

"விடபங்க ளநேக மாகும் விருக்கம தொன்றே யாண்டுக், குடிநைக ளளவிலாத குடிக்கொளு மிராக் காலத்தில், விடியவி லவைக ளெல்லாம் வியன்றரு வதனை விட்டுச், சடிதியிற் றுமே தாமாய்த் தீங்கிடா தோடு மன்றே."

என்று உத்தரஞ் சொன்னாள்.

அதனைக் கேட்டு அந்த யோகி தாய்க்குத் தனது பதியிருத்தல்பற்றிச் சோக முண்டாகாது. ஆனால் ராஜனுக்கு ஜராவஸ்தையில்

(கிழத்தனத்தில்) யௌவனமான புத்திரனது நாசத்தால் அவசியம் மோகபூர்வகமான சோக முண்டாகுமென்று விசாரித்து ராஜாவினிடத்துச் சகல சாமக்கிரியைகளையும் காட்டி,

"அரசனே யந்தோ கேண்மோ வாகாசெய்வதென்னே, யுரைதடு மாறு கின்ற துள்ளமுங் கலங்குகின்ற, திரிதர நினதுமைந்த னின்னுயி ரரிமாசெய்த, தருமையா மாக மென்ன தகத்தினில் வீழ்ந்ததன்றே" என்று கூறினார்.

அதனைக் கேட்டு ராஜா.

யோகி நீ ரியற்று மேன்மை யோகினை விட்டு வீணே, சோகமாஞ் சங்கந் தன்னுற் றுயரினைப் பெறுவதென்னே, போகுமோர் நெறியின் சார்பிற் பொருந்துறு தடாக தீரத், தேகுறு வழிச்செல்வோர்க ளெவருமே நில்லார் கண்டீர்,"

என்று உத்தரஞ் சொன்னார்.

இவ்வாறு அந்த யோகியானவர்

"தத்ர கோ மோஹ: க: ஶோக: ஏகத்வமனுபஶ்யத:

ஐக்கியத்தை இடைவிடாது காண்கின்ற ஞானிக்கு அங்குச் சோகம் யாது? மோகம் யாது?" என்னும் ஈசாவாஸ்ய சுருதியின் அநு

சாரமான அவர்களது சோக (ஆவரண) மோக (விக்ஷேப) மின்றியதன்மையை யநுபவித்து [தாசி, புத்திரன் மனைவி, ராஜன் மனைவி யென்பவர்கள் முன்னொரு சமயத்தில் இராஜாவினுலும் இராஜபுத்திரனுலும் பரீக்ஷையின்பொருட்டு விடப்பட்டபோது சோகமின்றி யிருந்தபடியே யிருந்தார்கள் என்னும் வார்த்தையைக் கேட்டு அவர் (தாசி முதலியோர்) களது முன் கற்பிக்கப்பட்ட தோஷாரோபத்தை விட்டு], இதனை யான் பரீக்ஷையின்பொருட்டுச் சொன்னேன். ஆனுல் ராஜகுமாரன் எனது ஆசனத்தில் சௌக்கியமா யிருக்கிருன் என்று அவர்களுக்குச் சொன்னுர். அதனைக் கேட்டு அவர்களெல்லோரும் சந்தோஷத்தையும் அடையவில்லை. ஆனுல் "அங்ஙனமாயினும் நலமே" என்று சொல்லிச் சமத்தன்மையிலேயே யிருந்தார்கள்.

பின் அந்த யோகி ராஜபுத்திரனைப் பரீக்ஷித்தற்பொருட்டுச் சகல சாமக்கிரிகளோடும் தனதிடத்திற்கு வந்து இராஜ புத்திரனை நோக்கி,

"அரைய குமார கேணீ யரையுமென் வார்த்தை தன்னைப், பெரியவெஞ் சோகங் கொள்ளும் பெற்றிய தாகு மஃது, விரைவினி னீயு மன்று வேட்டைக்கு

வந்த பின்னர், மூரியவே யடித்தா ருன்றன் முழுக்
குல மதனை யந்தோ ''

என்று கூறினார்.

அதனைக் கேட்டு இராஜகுமாரன்,

'' ஒருதின முடிவதாக வுலகர்க்குக் குடும்பந்தன்னி,
னொருவுத லுண்டா மன்றி யொன்றுமே நில்லாதத்தா,
னொருவகைப் பற்று மென்னி லுதித்திடா வண்ண
முன்னே, வுரமதா லுண்மையாக வொழித்தனன் சங்
கந் தன்னை. (க)

நடப்பதற் கமைந்த பாட்டை நடுவழி யதனுட் சார்
ந்த, வடத்தரு நீழ றன்னில் வைகினு ரிளைப்பு நீங்கக்
கடப்பரக் கணத்துங் காலங் கழிந்ததின் பின்பு மெல்ல,
நடப்பர்கள் முன்பின்னாக நாழிகை காத தூரம். (உ)

மூன்றுநாள் வாழ்வ தாகு முன்னுறினிவைகடாமு,
மேன்றசொப் பனத்திற் போல விருப்பிலா தனவே
யாகும், தோன்றிய காரியங்கள் சுகநுகர்ச்சிகளி னைசை,
யீண்டிய விவற்றினுற்பே றில்லையென்ளளவும்வீணே

செய்வது யாது யாது சேர்வது சொற்ப நாட்க,
ளுய்வதன் பொருட்டா மித்தை யுலகினர் தாமு நாடு,
மெய்மனை தனத்தினேடு மேற்குல மிராச்சியங்க,
ளெய்தியே கண்கூ டாக வேகுவர் விட்டுவிட்டே.(ச)

மலடியின் மைந்தன் றன்னல் விருவியோ கத்தி
னைத்தா, னுலகினிற் றன்ப மென்றே யுணர்வரெத்
துணையுந் தாங்கள், பலமுறை மாய்ந்து மாய்ந்து பல

மெனுங் கும்பி பாகத், தலமரல் செய்குவார்க ளவர்க
ளத்துணையு மங்தோ." (ரு)

இவ்வாறு ராஜபுத்திரனுடைய வாக்கியங்களைக் கேட்டு அவ்வெல்லோருடைய மோகமின்மையையும் நிச்சயித்து, அந்த யோகியானவர் மிகச் சந்தோஷ மடைந்து ராஜபுத்திரனைச் சிலாகித்தார் இவ்வாறே எல்லா ஞானிகளும் சோகமோகமின்றி யிருத்தல் தகுதியாம்.

எஅ. பின்னர் ஸ்ரீ குருவானவர் முற்கூறிய அர்த்தத்தினது திடத்தன்மையின் பொருட்டு ஓர் பதிவிரதா ஸ்திரீயின் பிரசங்கத்தைச் சொல்லலாயினர்:—

ஓர் பிராஹ்மணரது பதிவிரதா ஸ்திரீக்குத் தன் பிதாவின் கிரகத்தில் புத்திரஜன்ம முண்டாயிற்று. அவளைத் தன் கணவன் வண்டியிலேற்றி வீட்டிற்கு அழைத்துவருங்காலத்து இடைவழியில் அவளுக்குத் தாகமுண்டாயிற்று. அப்போது அந்தப் பிராஹ்மணர் ஜலங்கொண்டுவரச் சென்று கானற்சலத்தைக் கண்டு அங்கு வெகுவாய்ப் பிரமித்துக் கொண்டே யிருந்தான் பின் வண்டியோடு வஸ்திராபரணங்களைத் திருடர் கொண்டு சென்றனர். அவள் மிக ரூபவதியாயிருப்பதைக்

கண்டு வேட்டைக்கு வந்த ஓர் அரசன் அவளைக் கொண்டு சென்றனன். அதன் பின்னர் மாமரத்திற் கட்டிய வஸ்திரத்தில் விளையாடும் குழந்தையைக் கண்டு அநேக எருதுகளிற் பொதிபோட்டுச் செல்லும் ஓர் வணிகன் கொண்டு சென்றனன். பிராஹ்மணன் திரும்பிவந்து பார்க்க ஒருவரும் காணாமைபால் தேடுதற்பொருட்டுத் தேச தேசாந்தரங்களில் பிக்ஷை வாங்கிக்கொண்டு திரிந்தார். அவர் தர்மபத்தினி "யான் சிலகாலம் வரையிலும் சைவ விரதத்தைக் கொண்டிருக்கிறேன். அதுபரியந்தம் எனக்குப் புருஷசங்கம் கூடாது புதிதாய் வருகின்றவர்களுக்கு உணவாதிகளைக் கொடுத்தல் வேண்டுமென்னும் சங்கற்பமுண்டு." என்றுசொல்ல அதனைக்கேட்டு ராஜா அவ்வாறே செய்க வென்றங்கீகாரஞ் செய்து கொண்டான். ஒருநாள் அந்தப் பிராஹ்மணரும் பிக்ஷயின் பொருட்டு அங்கு வந்தார். அப்போது அவ்விருவருக்கும் ஒருவருக்கொருவர் பதிபத்தினித் தன்மைகளின் ஸ்மரண முண்டாயிற்று. அப்போது ஸ்திரீயானவள் பதிக்குப் பாகசாமக்கிரிகளைக் கொடுத்து நகரத்திற்கு வெளியிலுள்ள சிவாலயத்தில் இருக்கும்படிக் குறிப்பிட்டனுப்பி விட்டு, தன் விரதசமாப்தியின் எண்ணங்கொ

ண்டு ராஜாவிற்கு விருந்து செய்வித்து ராத்திரி யில் விஷங் கலந்த அன்னத்தைக் கொடுத்துக் கொன்றுவிட்டு, அவனது ஆபரணம் வஸ்திரம் ஆயுத முதலியவற்றைத் தரித்துக் குதிரை யிலேறிச் சிவாலயத்திற்கு வந்தனள். ஆண்டுப் பாம்பினாற் கடிக்கப்பட்ட பதியினைதிப் பார்த்து, அவரைத் தோளின்மேரில் தூக்கிக்கொண்டு ஆற்றங்கரையில் வந்து அவரது சரீரத்தில் நெருப்பு மூட்டிச் செத்தைகளைப்போட்டுப் பூமியிற் புதைத்துவிட்டு ஸ்நானம் செய்தாள். அப்போது நான்கு திருடர்கள் வந்து எல்லாச் சாமக்கிரிகளோடும் அவளைத் தேசாந்தரத்திற் கொண்டு சென்றார்கள். ஒரே புருஷனது சங்கம் அவளால் விரும்பப்பட்டதென்னும் சங்கேதத்தால் அவளை வேசியினிடத்து விக்கிரயஞ் செய்தார்கள். அப்போது தெய்வயோகத்தால் கணிகை (வேசி) யானாள். ஓர் காலத்தில் அவளது புத்திரன் வியாபார நிமித்தம் அந்நகரத்திற்கு வந்தவன். அவளது எஜமானியாகிய வேசிக்கு விரும்பிய பணத்தைக கொடுத்துத் தனது மாதாவாகிய வேசியினிடத்துச் சென்றனன். அப்போது அவளது ஸ்தனங்களினின்றும் பால் ஒழுகிற்று. அதனால் அவன் இவள் என்தாயென்று நிச்சயித்து நமஸ்காரஞ் செய்து வீட்டிற்குச் சென்றான்.

பின்னர்ப் புத்திரன் பதியாக வந்தமையைக் கண்டு அந்த ஸ்திரீயானவள் பச்சாத்தாபத் தால் ஆற்றங் கரையில் அவனாலமைக்கப்பட்ட சிதை (ஸ்மசான அக்கினி) யிற் பிரவேசித் தாள். அப்போது அகால மழை யுண்டாய், அதனால் அவள் தசிக்கப்படாமல் ஆற்றின் பிர வாகத்தில் அடிக்கப்பட்டுச் சென்று தேசாந் தரத்தில் ஓர்கரையில் ஏறினாள். அவளை ஓர் இரக்கமுள்ள கோபாலன் (இடையன்) தனது வீட்டில் பெண்ணாகப் பாவித்து வைத்திருந் தான். அவள் ஒரு நாள் மற்றைய இடைப் பெண்களோடு நாள்தோறும் போலத் தயிர் விற்கப் புறப்பட்டாள். அப்போது வழியில் திடீரென ஓர் ராஜ குமாரனது குதிரை குதிக் கத் தொடங்கியது. அதனால் எல்லோரும் விழ அவர்களது தயிர்ப் பானைக ளெல்லாம் உடைந்தன. உடையவே மற்றைய எல்லாப் பெண்களும் அழுதார்கள். அந்தக் கன்னி கையாகிய பதிவிரதாஸ்திரீ சிரித்தனள். அப்போது அவர்களுள் ஓர் இடைச்சி "தயிர் போனதற்காக நாங்கள் எல்லோம் அழ நீ ஏன் சிரிக்கின்றாய்" என்று வைதாள். அதற்கு அக்கன்னிகை,

“ஹத்வா ந்ருபம் பதிமவேக்ஷ்ய புஜங்கதஷ்டம் தேசாந்தரே விதிவசாத் கணிகாஸ்மி ஜாதா | புத்ரம் பதிம் ஸமதிகம்ய சிதாம் ப்ரவிஷ்டா சோசாமி கோபக்ருஹிணீ கதமத்ய தக்ரம் ||

ஆசனைக் கொன்று பின்னே யரவது கடித்த வென்றன், புருடனைக் கண்டு வேறோர் புரத்தினிற் கணிகையாகி, மருவுறத் தைவீ கத்தான் வருதலும் பதியாப்பாலன், தருசிதைப் புகுந்தேற் கற்பத் தயிரினா லென்ன சோகம்.”

என்று கூறினாள்.

எசு. சிஷ்யனை நிஸ்புருஹ (இச்சையின்றியவ)னாக்குதற்பொருட்டு;

உதாரஸ்ய த்ருணம் வித்தம் சூரஸ்ய மரணம் த்ருணம் | விரக்தஸ்ய த்ருணம் பார்யா நிஸ்ப்ருஹஸ்ய த்ருணம் ஜகத் ||

என்னும் சுலோகத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—உதாரபுருஷனுக்குத் திரவியம் துரும்பாம் (துச்சமாம்); பொருளில் நசையின்மையால். சூரனுக்கு மரணம் துரும்பாம்;

சரீரத்தில் நசையின்மையால். விரக்தனுக்கு மனைவி துரும்பாவள்; ஸ்திரீயினிடத்து இச்சையின்மையால். நிஸ்புருஹனுக்கு (நிஜசொரூபத்தில் பற்றுள்ள ஞானிக்கு) ஜகத்து (சகலப்பிரபஞ்சவடிவ பந்தமும், அதனால் குறிப்பிக்கப்படும் மோக்ஷமும்) துரும்பாம்; உலகமுழுவதினும் விருப்பின்மையால். ஞானியின் அதிசய நிஸ்புருஹத்தன்மையினைச் சூசிப்பித்தற் பொருட்டு அவனைச் சுலோகத்தில் "நிஸ்புருகன்" என்னும் பெயராற் சொல்லியிருக்கின்றனர்.

அ௦. க. சிஷ்யனே! கூறிய இவ்வகையான குருவின் உபதேசத்தைக் கேட்டு, அக்கேட்டபொருளைக் கிரந்தவிசார பூர்வகமாக வேதாந்தத்தின் அத்வைதத்தில் தாற்பரிய நிச்சயவடிவ சிரவணத்தைச் செய்து,

உ. சுருதி யநுசரித்தப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் உபஜீவியாகிய (ஆசிரிதம்போன்ற) அநுமான உபமான (திருஷ்டாந்த) அர்த்தாபத்தி அநுபலப்திப் பிரமாணவடிவ ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தைப் பாதிப்பனவும் அபேதத்தைச் சாதிப்பனவுமாகிய யுக்திகளால் அத்வைதப் பிரஹ்மத்தின் சிந்தனவடிவ மனனஞ் செய்து,

௩. அநாத்மாவில் மித்தியாபுத்தியினால் அநாத்மாகார விருத்திகளின் திரஸ்கார பூர்வகமான பிரஹ்மாபின்ன ஆத்மாகார விருத்திகளின் பிரவாகவடிவ நிதித்தியாசனத்தைச் செய்து, அதாவது மூர்த்தி முதலியவற்றின் தியானத்தில் எங்ஙனம் குதிரை முதலியவற்றின் நிரோதத்தைப் போன்ற சித்தத்தின் நிரோத முண்டாகின்றதோ, அங்ஙனம் நிதித்தியாசனத்தில் சித்த நிரோதத்தின் அபேக்ஷையில்லை; ஆனால் கதை கேட்டலின் பிரசங்கத்தாலும் விசாரத்தின் பிரசங்கத்தாலும் பசியை நிவர்த்திக்கும் போஜனத்தைப் போலும் புத்தி விநோதத்திற்கு ஏதுவான நாட்டிய தரிசனம் போலும் ஆசன முதலியவற்றின் நியமமின்றி நடந்துகொண்டும் திரிந்துகொண்டும் சொரூபாகார விருத்தியின் அப்பியாசவாயிலாக நிதித்தியாசனம் சித்திக்கின்றதாகலின் அவ்வகையான நிதித்தியாசனத்தைச் செய்து,

௪. சகல அநாத்மகார விருத்திகளும் சகஜமாய் நிரோதமாகப் பிரஹ்மாகாரமாகிய சித்தத்தின் விருத்தியில் அகம்பிரத்தியயத்தின் (யானெனும் உணர்ச்சியின்) ஸ்புரண (விளக்க) வடிவ சாக்ஷாத்காரம் எதுவோ அதனைச் சம்பாதித்து,

ரு. அவித்தைவடிவ காரணத்தின் அத்தியாசத்தோடு அகங்காரமுதலியவற்றின் அத்தியாசவடிவ பந்தத்தினது பரமார்த்த திருஷ்டியினால் மூன்றுகாலத்தின்மையின் நிச்சயவடிவமும் வியவகாரதிருஷ்டியினால் மித்தியாத்தன்மை நிச்சய வடிவமுமான பாதம் செய்யப்பட்டது.

இதுவே சர்வ அநர்த்தத்தின் நிவிருத்தியாயிற்று. அர்த்தத்தினால் பரமாநந்தவடிவப்பிரஹ்மத்தின் ஆவிர்ப்பாவத்தையு மடைந்தான். ஆதலால் அவனுக்கு ஜீவன்முக்தி சித்தித்தது.

தத்துவம்பத வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களைச் சொல்லுதலோடு அதன் ஐக்கியத்தை நிரூபித்தலென்னும்

எட்டாவது உபதேசம் முடிந்தது.



# ஒன்பதாவது உபதேசம்.

## சிஷ்யனது அநுபவத்தைச் சொல்லு தல், வீட்டிற்குச் செல்லுதல், சந்நி யாசத்தோடு யோகத்தைக் கொள் ளுதலென்பவற்றைச் சொல்லு தலோடு கிரந்தத்தின் உபசம்ஹாரம்.

அக. இப்போது சிஷ்யன் தன் அநுபவத் தை குருவினிடத்துச் சொல்லுகின்றவனாய் முதலில் குருவின் உபதேசத்தை * கூ00. அநு வதிக்கின்றான்.

சிஷ்யன் சொல்லுகின்றான் :— ஐயனே! தாம் எனக்குத் தத்துவமஸி என்னும் மகா வாக்கியத்தை உபதேசஞ் செய்தீர்கள் அத ணுல் யான் எனது சொரூபத்தை யறிந்தேன். அதில் எம்மாத்திரமும் சமுசயமில்லை.

அஉ. இப்போது சிஷ்யன் தனது அநுப வத்தைக் கூறுகின்றான் :—

---

* கூ00. முன் சொல்லியபொருளைப் பின்னுஞ் சொல்லுதல் அநுவதித்தல்.

க. ஐயனே! யான் தேசகால வஸ்துக்களா லாகிய பரிச்சேதமின்றியவனா யிருத்தலின் பூரணனாயிருக்கின்றேன் (அநந்தனாயிருக்கின் றேன்).

உ. மித்தையாகிய உபாதியினாலாகிய வில க்ஷண தர்மங்களின்றி யிருத்தலால் நிர்விசேஷ வடிவமா யிருத்தலின் ஆகாசத்தைப்போல ஏகரசமாயிருக்கின்றேன்.

ங. ஸஜாதீய (சமஜாதியுடையதனோடுள்ள) சம்பந்தம், விஜாதீய (அந்நிய ஜாதியுடையத னோடுள்ள) சம்பந்தம், ஸ்வகத (தனது அவய வங்களோடுள்ள) சம்பந்தம் என்னும் சங்கமும் அல்லது தேகாதிகளிலுள்ள அகந்தையும் வீடு முதலியவற்றிலுள்ள மமதையுமாகிய சங்க மும்,

ச. ஜன்மம் அஸ்தித்துவம் (முன் இல்லாத தாய்ப் பின் இருத்தல்) வளர்ச்சி, திரிபு, குறைவு, அழிவு என்னும் ஆறு விகாரங்களு மாகிய இவைகளின்றிய அசங்கனும் நிர்விகார (கூடஸ்த)னுமா யிருக்கின்றேன்.

ரு. மீண்டும் ஸஜாதீய விஜாதீய சுவகத பேதமின்றியவனா யிருத்தலாலேனும், அல் லது மாயை அவித்தை அதன் காரியமாகிய

நாமரூபம் என்னும் உபாதிகளாற் கற்பிக்கப் பட்ட க. ஜீவேசுவர பேதம், உ. ஜீவர்களின் பரஸ்பர பேதம், ௩. ஜீவஜடங்களின் பேதம், ச. ஜடஜடங்களின் பேதம் ரு. ஜடஈசுவரபே தம் என்னும் ஐந்து பேதவடிவ வஸ்துபரிச் சேதமின்றியவனா யிருத்தலாலேனும் யான் அகண்டனா யிருக்கின்றேன்.

௬. மீண்டும் யான் நிஜசுக (ஆநந்த) வடிவ மா யிருக்கின்றேன். இவ்விசாரம் எனக்குத் திடமாயிற்று.

அ௩. சிஷ்யன் முன் ஞானவிருப்பகாலத் தில் குருவினிடத்துத் தனது சொரூபத்திற்கு வேறாக ஈசுவரத்தன்மையை அங்கீகரித்திருந் தேன்; பின் ஞானகாலத்தில் அவரிடத்துத் தனது சொரூபத்திற் கபின்னமான பிரஹ்மத் தன்மையை நிச்சயஞ் செய்திருக்கிறேன் என் பதனை இப்போது பிரகடஞ் செய்கின்றான்:—

ஐயனே? தாம் எங்கும் பூரணமான அத் வைத ஆத்மாராமனா யிருக்கின்றீர் பின்னர் ஆதியிலும் அந்தத்திலும் நடுவிலும் ஏகமா யிருக்கின்றீர். தாமே சுகஸ்வரூப பிரஹ்ம மாயிருக்கின்றீர்.

அ௪. ஐயனே! முன் அஞ்ஞானதசையில் எனக்கு இந்தலோகத்தின் வியவகாரத்தின் பொருட்டு வேளாண்மை வாணிபம் முதலியன செய்யவேண்டியதா யிருந்தது.

உ. அல்லது பரலோகத்தின் பொருட்டுச் சகாம கர்மமும் சகாம உபாசனை முதலியனவும் செய்யவேண்டி யிருந்தது.

௩. சித்தசுத்தி ஏகாக்கிரத்தன்மைகளின் பொருட்டு நிஷ்காமகர்மமும் நிஷ்காம உபாசனையுமாகிய கர்த்தவ்வியமிருந்தது.

௪ வேதாந்த சிரவணமுதலியவற்றினது அதிகாரத்தின் பொருட்டு விவேகம் வைராக்கிய முதலிய சாதனசமூகம் செய்யவேண்டியிருந்தது.

௫ அபரோக்ஷஞானத்தின் உற்பத்திநிமித்தம் குருமுகவாயிலாகத் தத்துவமஸி முதலிய மகாவாக்கியங்களினது அர்த்தத்தின் உபதேசவடிவ அங்கி (சாத்திய) சிரவணம் செய்யவேண்டி யிருந்தது

௬. சம்சய விபரீதபாவனைவடிவ ஞானத்தின் அதிடத் தன்மைக்கு ஏதுவான தோஷங்களின் நிவிருத்தியின் பொருட்டுச் சிரவண

மனன நிதித்தியாசனங்கள் செய்யவேண்டி யிருந்தன.

எ. தத்பதார்த்தத்தின் அர்த்தத்தில் பரோக்ஷத்தன்மைப் பிராந்தியையும், துவம்பதத்தின் அர்த்தத்தில் பரிச்சின்னத்தன்மைப் பிராந்தியையும் நிவிருத்தித்தற் பொருட்டு, "பிரஹ்மம் நான். நான் பிரஹ்மம்" என்னும் வடிவினதாகிய ஓதப்புரோதபாவம் (வியதிகாரம்) செய்யவேண்டியிருந்தது

அ. மோக்ஷத்தின்பொருட்டு முற்கூறிய சாதனங்களால் திட அபரோக்ஷஞானத்தைச் சம்பாதித்தில் செய்யவேண்டி யிருந்தது.

அவ்வெல்லாக் கிருத்தியங்களும் இப்போது திட அபரோக்ஷஞானம் சித்திக்கவே செய்யப்பட்டன.

விரும்பிய ஊரை யடைந்த பதிக (வழிப்போக்க)னுக்கு வழியிலுள்ள அங்கக நடத்தல் முதலிய பிரயத்தனவடிவக் கர்த்தவ்விய மிருந்ததில்லை அங்ஙனமே எனக்கு ஞானப் பிராப்தியினால் இவ்வுலக பரலோகங்களின் இச்சை பங்கமாகச் சகல சாதனங்களின் பூரணத்தன்மையும் முக்தியும் சித்தித்தன. ஆதலால் மோக்ஷத்தின்பொருட்டாவது ஞானத்

தின் பொருட்டாவது செய்யவேண்டியதொன் றிருந்ததில்லை.

சாஸ்திரத்தின் விதி நிஷேதவடிவ ஆணை யினுல் எந்தச் சாதனம் செய்யப்படுகின்றதோ, அது கர்த்தவ்விய மெனப்படுகின்றது.

விதிநிஷேதத்தைக் கொள்ளுதலின்றித் தனது இச்சையினுல் எந்த வேதாந்த விசார முதலிய சாதனங்கள செய்யப்படுகின்றனவோ, அவை கர்த்தவ்வியமன்று. ஆதலால்,

இப்போது விதி நிஷேதவடிவ ஆணையின் அங்கீகாரமின்றித் தனது இச்சையினுல் பிரஹ்ம விசாரமுதலிய சாஸ்திரத்திற் கூறிய எந்த ஆசரண (ஒழுக்க)ங்களை யான் செய்வே ேனு அவை கர்த்தவ்வியமாகா. ஆதலால் நான் எவற்றைச் செய்யவேண்டி யிருந்ததோ அவை யாவும் செய்யப்பட்டன. இதனுனே நான் கிருதகிருத்தியனுயினேன்.

முன் ௧. ஐகிய (இகலோகத்தைய) சுகம், ௨. பாரலௌகிக (பரலோகத்தைய) சுகம், ௩. அல்லது சித்தத்தின் சுத்தி, ௪. அல்லது ஏகா க்கிரத்தன்மைவடிவ அர்த்தம், ௫. அல்லது திடஅபரோக்ஷ ஞானவடிவ அர்த்தம், ௬. சஞ்

சித ஆகாமியகர்மமும் ஜன்மமுதலிய காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தியும் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியுமாகிய அர்த்தம் என்னுமிவை எனக்கு அடையத்தக்கனவாயிருந்தன. அவை யாவும் இப்போது ஞானத்தின் பிராப்தியினுல் அடையப்பட்டன. ஆதலால் இப்போது எனக்கு இஷ்டமான ஊரையடைந்த புருஷனைப்போல அடையத்தக்க தொன்றும் இருந்ததில்லை. இதனுலே நான் பிராப்தப் பிராப்பிய (கிருதார்த்த)ணுயினேன்.

ஆதலால் தமது திருவடியின் கிருபையினுல் இப்போது எனக்கு ஒரு சாதகமும் செய்யவேண்டியதில்லை. ஓர் தேவதை வடிவத்தாலேனும் அல்லது பகவானது பக்கத்திருப்பவர் முதலியோரது வடிவமாகவேனும்; அல்லது நித்தியப் பிராப்தமாகிய பிரஹ்மவடிவமாகவேனும், அல்லது வேறு வடிவமாகவேனும் ஒன்றும் ஆகவேண்டியதில்லை. இது பஞ்சதசியின் திருப்திதீபத்திலும் சொல்லப்பட்டுருக்கின்றது. அது "விஷயங்களினுல் எந்தத் திருப்தி யுண்டாகின்றதோ, அது சாங்குசமாம் (தடையுள்ளதாம்). இந்த (அபரோக்ஷ ஞானத்தாலுண்டாகிய) திருப்தி நிரங்குசமாம்

(தடையற்றதாம்). ஆதலால் எது செய்யத் தக்கதாயிருந்ததோ அது செய்யப்பட்டது; எது அடையத்தக்கதாயிருந்ததோ அது அடையப்பட்டது என்று இவ்வாறு ஞானி திருப்தியை (சந்தோஷத்தை) யடைகிறான் (௧). இவனுக்கு (ஜானிக்கு) முன் (அஞ்ஞான காலத்தில்) இந்தலோக பரலோக சம்பந்தி யான போகங்களின் சமூகம் சித்தித்தற்பொரு ட்டும் முக்தி சித்தித்தற்பொருட்டும் வெகு கிருத்திய (கர்த்தவ்விய) ங்களிருந்தன அவை யாவும் இப்போது (ஞானமுதயமகியபின்) செய்யப்பட்டன (௨).'' என்பதாம்.

௮௫. முற்கூறியபடி கிருத கிருத்தியத் தன்மையினாலும் ப்ராப்தப் பிராப்பியத் தன் மையினாலும் திருப்தனான வித்வானாகிய சிஷ் யன் தன் மனதினால் எப்படி (மேற்சொல்லும் விதத்தால்) மதிக்கின்றானோ, அவ்வாறே குரு வினிடத்து வார்த்தைவாயிலாக நிவேதனஞ் செய்கின்றான்:—

௧. ஐயனே! யான் தனது ஆத்மாவை*௧௦௧. பெயர் ஜாதிமுதலியவற்றினை அறிவதுபோல

---

*௧௦௧. அஞ்ஞானியாகிய புருஷன் திடமாக அப் பியசிக்கப்பட்ட தனது சரீரத்தின் பெயர் ஜாதி முத

அநாயாசமாக எப்போதும் அபரோக்ஷமா யறி கின்றே ஞகலின், அந்த ஞானத்தினுல் நான் தன்னியனுனேன் தன்னியனுனேன்.

௨. சார்வபௌமன் (சகலபிருதிவியையும் ஆளுவோன்) முதல் இரணியகர்ப்பன்வடிவ பிரஹ்மாபரியந்தமுள்ள சம்சாரசுகம் எதுவோ அது எதன் லேச (ஆபாச) மாயிருக்கின்றதோ, அத்தன்மைய பிரஹ்மாநந்தம் எனக்கு வெளிப் படையாக விளங்குகின்ற தாகலின், அந்தப் பிரஹ்மாநந்தத்தின் செவ்வையான விளக்கத் தால் நான் தன்னியனுனேன்.

௩. சம்சார சம்பந்தியான துக்கத்தை இப் போது யான் காணுமையின், அந்தச் சம்சார துக்கத்தின் தரிசனமில்லாமையால் நான் தன் னியனு யிருக்கின்றேன்.

---

லியவற்றை விசாரமின்றி யறிகின்முன்; சொப்பனத் திலும் மறக்கிறதில்லை; அதுபோலத் தேகத்தில் ஆத்ம ஞானத்தைப் பாதித்து எனக்கு ஆத்மாவில் திடஅப ரோக்ஷ ஞானமிருக்கின்றது என்பது பொருளாம். இது ஞானத்தின் அவதி சொல்லப்பட்டது. ஸ்ரீ பஞ்ச தசியின் திருப்திதீபத்தின்கண்ணுள்ள ஆறு சுலோகங் களின் அர்த்தம் இப்பிரசங்கத்தில் எழுதப்படுகின் றது.

௪. பர்வதத்தின் குகையிலுள்ள வெகு காலத்தைய இருள் தடியினலடித்தல் முதலிய வேறு பிரயத்தனங்களினல் ஓடுகிறதில்லை யாயினும், தீபமுளதாயின் அப்பொழுதே ஓடுகின்றது. அங்ஙனமே ஆத்மாவினது அஞ்ஞானம் கர்ம உபாசனை முதலிய மற்றக் கோடி உபாயங்களினலும் ஓடுகிறதில்லை யாயினும், "சகல ஜகத்தும் யானும் பிரஹ்மம்" என்னும் ஆகாரமுடைய திடஅபரோக்ஷ ஞானத்தால் அப்பொழுதே ஓடும்.

அந்த அஞ்ஞானத்தின் ஓட்டம் (நாசம்) எனக்கு ஞானத்தினல் சித்தித்தது. ஆகலின் அவ்வஞ்ஞானம் போகவே யான் தன்னியனனேன்.

௫. விதிநிஷேதவடிவ சாஸ்திரத்தின் வசனத்தினலுண்டாகிய விஹித (சுப) கர்மங்களில் புண்ணியவடிவ அபூர்வ வாயிலாக சுவர்க்க முதலிய இஷ்டபலப் பிராப்தியின் சம்பாவனை (நிகழ்ச்சி) வடிவ குணபுத்தியும் நிஷித்தகர்மத்தில் பாபவடிவ அபூர்வவாயிலாக நரகமுதலிய அநிஷ்ட பலப் பிராப்தியின் சம்பாவனைவடிவ தோஷபுத்தியுமாகிய அவ்விரண்டு புத்திகளானும் விஹிதகர்மத்தில் பிரவிருத்தித்தலும் நிஷித்தகர்மத்தினின்றும் நிவிருத்தியாதலுமாகிய

எந்தக்கிரியை யுண்டாகின்றதோ, அது கர்த்தவ்விய மெனப்படுகின்றது. தனது இச்சையினால் எந்த லௌகிக வைதிக கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ அவை கர்த்தவ்வியமன்று. முற்கூறிய விதமான கர்த்தவ்வியம் முன் (அச-வது பிரசங்கத்தில்) சொல்லியபடி எனக்கு நிவிருத்தியாய்விட்டமையின் கர்த்தவ்வியம் நீங்கியதனால் நான் தன்னியனானேன்.

௬. எங்ஙனம் எல்லாப் பிருதிவியிலுமுள்ள வாவிகூபதடாக முதலியவற்றினால் எவ்வளவு ஸ்நானபானாதி அர்த்தம் (பிரயோஜனம்) சித்திக்கின்றதோ, அவ்வளவு முழுப்பிரயோஜனமும் சுத்தோதகத்தில் (மதுரஜல சமுத்திரத்தில்) சித்திக்கின்றது எங்ஙனம் பத்துப் பொன்முதல் ஐம்பது பொன்வரையிற் கிடைப்பதினால் மேலும் மேலும் உண்டாகும் ஆநந்த முழுவதும் நூறு பொன் கிடைப்பதினால் சித்திக்கின்றதோ, அங்ஙனமே அநேகவித சகாம கர்ம உபாசனை முதலிய சாதனங்களால் அடையப்படும் சுவர்க்கம் வைகுண்டம் பிரஹ்மலோக முதலிய பயன்களை யடைவதினால் எத்தாரதம்மிய சுகங்களுண்டாகின்றனவோ, அவை யாவும் பிரஹ்மாநந்தத்தின் பிரதிபிம்பமா யிருத்தலின் அதன்கண் அடங்கியனவாம். ஆத

லால் அந்தப் பிரஹ்மாநந்தம் பரமப்பிரயோஜனமாம். அது எதனால் எனக்குத் தனது சொரூபமாகப் பிரஹ்மாநந்தத்தை யறிதலாலேயே சித்தித்ததோ, அதனால் அந்தப் பிரஹ்மாநந்தவடிவப் பிராப்பிய (பல) த்தின் சித்தியினால் நான் தன்னியனானேன்.

எ. ராஜாமுதல் பிரஹ்மலோக பரியந்தமுள்ள விஷயங்களினால் உண்டாகும் திருப்தி தன்னினும் அதிகமான வேறு விஷயத்தின் இச்சைவடிவ அங்குசத்தோடு கூடியதாயிருத்தலின் சாங்குசத்திருப்தியாம். ஆநந்தவடிவப் பிரஹ்மத்திற்கபின்னமான ஆத்மாவின் ஞானத்தால் உண்டாகும் திருப்தி முற்கூறிய அங்குசமின்றியதா யிருத்தலின் நிரங்குசத் திருப்தியாம். அதனால் அந்தத் திருப்தி உவமையின்றியதாம் ஆதலால் அந்த உவமையின்றிய நிரங்குசத் திருப்தியின் லாபத்தால் நான் அடிக்கடி தன்னியனா யிருக்கின்றேன்.

அ. ஞானத்திற்கு ஏதுவான நிஷ்காம கர்மத்தினாலுண்டாகிய சம்ஸ்காரவடிவ எனது புண்ணியம் எதனால் திடமாகப் பலித்திருக்கின்றதோ, அதனால் அது அதிசயமாம்.

௯. இப்புண்ணியத்தின் சம்பத்தினால் யான் எல்லோரினும் சிரேஷ்டனா யிருக்கின்றேன்.

௧0. இந்த வேதாந்த சாஸ்திரமும் குருவும் ஞானமும் நிரதிசயமாம்.

௧௧. ஞானத்தினால் வெளிப்பட்ட பிரஹ்மாநந்தம் நிரவதியாம் (எல்லையில்லாததாம்).

அ௬. இப்போது சுருதியிற்கூறிய இருதயக்கிரந்தி, சம்சயக்கிரந்தி, கர்மக்கிரந்தி என்னும் பேதத்தால் மூன்றுவகைக் கிரந்திகளுள. அவற்றிற்கு ஞானத்தால் நிவிருத்தியைச் சிஷ்யன் கூறுகின்றான்.

௧. ஐயனே! எப்போது (எந்தக்ஷணத்தில்) நான் பரப்பிரஹ்மத்தின் தரிசனத்தில் சமர்த்தனானேனோ, அப்போது என்னுடைய புத்தி ஆத்மாக்களின் தாதாத்மிய அத்தியாசவடிவ இருதயக்கிரந்தி (சித்ஜடக்கிரந்தியும் அதன் ஞானமாகிய விபரீதபாவனையும்) பேதிக்கப்பட்டன (நாசஞ்செய்யப்பட்டன).

புத்தி (அகங்கார) சிதாத்மாக்களது தாதாத்மிய அத்தியாசவடிவ இருதயக்கிரந்தியாதோ, அது வேறு காரியவடிவ இருதயக்கிரந்திகளுக்குக் காரணமாம். அது எதனால்

நீங்கிவிட்டதோ அதனால் காரியவடிவ இருதயக் கிரந்தியும் நீங்கிவிட்டது. "எனக்கு இது உண்டாகுக; எனக்கு இது உண்டாகுக." என்னும் வடிவினதாகிய இச்சாவிருத்தி எதுவோ அது சுருதியிற் கூறிய "காம" சப்தத்தின் வாச்சியமாம் அதற்கு (இச்சாவிருத்திக்கு) * க0உ. ஆசை, திருஷ்ணை, காமனை, வாஞ்சை, லோபம், தீனத்தன்மை முதலிய பேதங்களுண்டு. அவ்விச்சாவிருத்திகள் காரியவடிவ இருதயக்கிரந்திகளாம். அவையும் நாசமடைந்தன.

---

* க0உ. பிறரால் வருங்காலத்தி லடையத்தக்க வஸ்துவின் இச்சை எதுவோ அது ஆசையாம். அடைந்த பொருள் விருத்தியாக வேண்டுமென்னும் இச்சை எதுவோ அது திருஷ்ணையாம். அடைந்த பொருளை அநுபவிக்கவேண்டுமென்னும் இச்சை எதுவோ அது **காமனை**யாம். இதனையே **காம**மென்றுங் கூறுவர். நிகழ்காலத்தில் அடையத்தக்க பொருளின் இச்சை எதுவோ அது **வாஞ்சை**யாம். கிடைத்த தனமுதலியவற்றைச் செலவுசெய்யா திருக்கவேண்டு மென்னும் இச்சை லோபத்தின் பத்தினியாகிய **கிருபணத்தன்மை**யாம். வேறு புருஷர்களால் வர்த்தமானகாலத்தில் அடையப்படாத வஸ்துவினை அடையவேண்டுமென்னும் இச்சை **தீனத்தன்மை**யாம். இதனையே **லோப**மென்றுங் கூறுவர். இவையாவும் ஒரே இச்சையின் பேதங்களாம்.

ஆதலால் இப்போது அகங்காரத்தின் தர்ம வடிவ காமமுதலிய விருத்திகள் உதயமாயின், அவற்றில் சிதாத்மாவை பிரவேசிப்பியாது (அவற்றைச் சிதாத்மாவின் தர்மங்களாகக் கொள்ளாது), காமம் முதலிய தர்மங்களையுடைய அகங்காரத்தினைச் சிதாத்மாவிற்கு வேறும் மித்தியாவடிவமெனக் கண்டு பிராரத்த தோஷத்தினால் நான் கோடிவஸ்துக்களை இச்சிக்கின்றேன். இச்சிக்கினும் எனக்குப் பாதகமில்லை.

உ. என்னுடைய சகல சம்சயங்களும் ஒழிந்தன "இது இரஜ்ஜுவா அல்லது சர்ப்பமா" என்னும் வடிவினதாகிய இரண்டு கோடிகளையுடைய (யதார்த்த அயதார்த்தமென்னும் இரண்டு பக்ஷங்களை விஷயஞ்செய்யும்) ஞானம் சம்சய மெனப்படுகின்றது. அச்சம்சயம் ஆத்மாவின் கண்ணுள்ளது அநாத்மாவின் கண்ணுள்ளது என்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவற்றுள் அநாத்மாவின்கண்ணுள்ள சம்சயம் இருக்குக அல்லது போகுக. அதன் நிவிருத்தி அவசியமென்பதில்லை.

(க) ஆத்மாவின்கண்ணுள்ள சம்சயம் எதுவோ அது (க) பிரமாணகதசம்சயம் (உ) பிர

மேயகதசம்சயம் என்னும் பேதத்தால் இரு வகைத்தாம்.

[க] "உபநிஷதவடிவ வேதாந்தவாக்கியம் பேதத்தைப் பிரதிபாதிப்பதா?

[உ] அல்லது அத்வைதத்தைப் பிரதிபாதிப்பதா?

[ஙு] அல்லது வேறுபொருளைச் சொல்லுவதா?" என்னும் ஆகாரமுடையதாய் ஆறுலிங்கவடிவ யுக்திகளால் வேதாந்தத்தின் தாற்பரிய நிச்சயவடிவ சிரவணஞ் செய்வதற்குமுன் எச்சம்சய முண்டாகின்றதோ அது பிரமாணகதசம்சயமாம்.

(உ) வேதாந்தவடிவ பிரமாணத்தினால் அறியத்தக்க மோக்ஷமுதலிய பதார்த்தங்கள் எவையோ அவைமுழுவதும் பிரமேய மெனப்படுகின்றன. அவற்றின் சொரூபத்தில் எந்தச் சம்சயமுளதோ அது பிரமேயகதசம்சய மெனப்படுகின்றது. அந்தப் பிரமேயகதசம்சயம் விஷயபேதத்தால் அநேகவகைத்தாம்.

(அ) "சர்வதுக்க நிவிருத்தியும் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியுமாகிய

[௧] இதுவே * ௧௦௩. மோக்ஷமா?

[௨] அல்லது * ௧௦௪. மற்றமூவகைத் துக்கங்களின் நாசம்,

[௩] அல்லது * ௧௦௫. இருபத்தொரு துக்கங்களின் நாசம்,

[௪] அல்லது * ௧௦௬. பஞ்சக் கிலேசங்களின் நாசம்,

[௫] அல்லது * ௧௦௭. சுவர்க்க வைகுண்டமுதலிய விஷயசுகத்தின் லாபம் மோக்ஷமா?"

இவ்வாறு மோக்ஷத்தின் சொரூபத்தில் சம்சயங்களுள. அவை பிரயோஜனவடிவ பிரமேயகதசம் சயங்களாம்.

(ஆ) சகல அநர்த்தநிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் மோக்ஷமெனக் கொள்ளின்,

---

* ௧௦௩. இது சித்தாந்தத்தின் பக்ஷம்.

* ௧௦௪. இது சாங்கியமதம்.

* ௧௦௫. இது நியாயமதம்.

* ௧௦௬. இது யோகமதம்.

* ௧௦௭. இது கர்மிஷ்டர்களின் அல்லது உபாசகர்களின் மதம்.

[க] "அந்த மோக்ஷத்திற்குச் சாக்ஷாத் சாதனம் * ௧0அ. கர்மமா ?

[உ] அல்லது * ௧0௯. உபாசனையா ?

[௩] அல்லது * ௧௧0. கர்ம உபாசனைகளோடு கூடியஞானமா ?

[௪] அல்லது * ௧௧௧. கேவல ஞானமா ?

[௫] கேவல ஞானமெனின், * ௧௧உ. பேத ஞானமா அல்லது * ௧௧௩. அபேத ஞானமா ? என்றல் முதலியவடிவ சம்சயங்கள் மோக்ஷ சாதனத்திலுள அவை சாதனவடிவப் பிரமேயகத சம்சயமாம்.

[௬] மோக்ஷத்தின் சாதனம் அபேத ஞானமே எனக் கொள்ளின்,

---

* ௧0அ. இது மீமாம்சகர் (கர்மிஷ்டர்) களது மதம்.

* ௧0௯. இது உபாசகர்களது மதம்.

* ௧௧0. இது சமுச்சயவாதி பர்த்திருபிரபஞ்சத்தின் மதம்.

* ௧௧௧. இது சாங்கியர் நையாயிகர் முதலியோரது மதமாம்

* ௧௧உ. இது சாங்கியர் முதலிய பேதவாதிகளது மதமாம்.

* ௧௧௩. இது சித்தாந்த பக்ஷம்.

[௧] " அந்த அபரோக்ஷ ஞானத்தின் முக்கிய (சாக்ஷாத்) அந்தரங்க சாதனம் கர்ம உபாசனைகளா ?

அல்லது விவேகமுதலிய நான்கா ?

அல்லது சிரவணாதி மூன்று ?

அல்லது பதார்த்த சோதனமா ?

அல்லது மகாவாக்கிய உபதேசமா ?

[௨] ஞானத்தின் பகிரங்கசாதனம் சிரவணாதிகளா ?

அல்லது விவேக முதலியனவா ?

அல்லது கர்ம முதலியனவா ?

இவை முதலியன வாகிய சம்சயங்கள் ஞானசாதனத்தின் நிர்ணயத்தில் இருக்கின்றன. அவை சாதனவடிவப் பிரமேயகதசம்சயமாம்.

(ச) அபரோக்ஷஞானத்தின் முக்கிய அந்தரங்க சாதனம் மகாவாக்கியத்தின் உபதேசமெனவும் விவேகாதி எட்டினையும் அமுக்கிய (பரம்பரை) அந்தரங்க சாதனமெனவும் எஞ்ஞாதி கர்மங்கள் பகிரங்க சாதனமெனவும் கொள்ளின்,

[க] "அந்தஞானத்தின் விஷயம் * ககச. பேதமா? அல்லது * ககரு. அபேதமா?

[உ] அபேத மெனின், ஆத்மா விற்கும் பிரஹ்மத்திற்கும்? ககசு. அபேதமா?

அல்லது அந்தக் கரணவிசிஷ்ட சேதன வடிவ ஜீவனுக்கும் விராட்டு அல்லது இரணிய கர்ப்பன் அல்லது அந்தரியாமி என்னும் ஈசுவரனுக்கும் * ககஎ. அபேதமா?

இவைமுதலிய சம்சயங்கள் ஞானத்தின் விஷயத்திலுள. அவையும் பிரமேயகதசம் சயமாம்.

(உ) ஆத்மா விற்கும் பிரஹ்மத்திற்கு முள்ள அபேதமே ஞானத்தின் விஷயமெனக் கொள்ளின்,

[க] முற்கூறிய ஆத்மா ஸ்தூலதேகத்தி

---

* ககச. இது சாங்கியர் நையாயிகர் முதலிய பேத வாதிகளின் மதம்.

* ககரு. இது வேதாந்தத்தின் சித்தாந்தம்.

* ககசு. இது உபநிடதங்களின் சித்தாந்தம்.

* ககஎ. இது அகங்கிரக உபாசகர்களின் மதம்.

னும் * ௧௧௮ பின்னமா? அல்லது * ௧௧௯. அபின்னமா?

[௨] பின்னமாயினும்,

அது * ௧௨௦. ஜடமா?

அல்லது * ௧௨௧ சேதனமா?

அல்லது * ௧௨௨. ஜடசேதன மென்னும் இருவடிவமா?

[௩] சேதனமெனினும்,

அது * ௧௨௩. கர்த்தா போக்தாவா?

அல்லது * ௧௨௪. அகர்த்தா அபோக்தாவா?

[௪] அகர்த்தா அபோக்தாவெனினும்,

---

* ௧௧௮. இது சகல ஆஸ்திகர்களது மதம்.

* ௧௧௯. இது சார்வாகலோகாயதர் (தேகாத்மவாதி)களது மதம்.

* ௧௨௦. இது நையாயிகர் பிரபாகரர்களது மதம்.

* ௧௨௧. இது சித்தாந்த பக்ஷமும் சாங்கிய மதமும் யோகமதமுமாம்.

* ௧௨௨. இது பட்டர் மதம்.

* ௧௨௩. இது நியாயமதம்.

* ௧௨௪. இது சாங்கிய வேதாந்தங்களின் மதம்.

அது தேகாதிகளில் அகந்தை மமதை வடிவ * ௧௨௫. சங்கமுடையதா ?

அல்லது * ௧௨௬. அசங்கமா ?

[௫] அசங்கமாயினும்,

அது * ௧௨௭. அணுபரிமாணமா ? (ரோமமத்தின் ஆயிரத்தொரு மடங்கு சூக்ஷமமா ?)

அல்லது. * ௧௨௮. மத்திமபரிமாணமா ? (தேகத்தினளவா ?)

அல்லது * ௧௨௯. மகத்பரிமாணமா (பரிபூரணமா) ?

[௬] மகத்பரிமாண முடையதாயினும்,

அதற்குத் தத்பதத்தின் அர்த்தத்தோடு * ௧௩௦. பேதமிருக்கிறதா ?

---

½ ௧௨௫. இது உபாசகர் முதலியோர்களது மதம்.

* ௧௨௬. இது சித்தாந்தி சாங்கியர்களின் மதம்.

* ௧௨௭. இது சில நையாயிக உபாசர்களது மதம்.

* ௧௨௮. இது நவீனநையாயிகர் திகம்பரர்களது மதம்.

* ௧௨௯. இது சித்தாந்தம், சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பிரபாகரம், பட்டம் என்பவற்றின் மதமாம்.

* ௧௩௦. இது நையாயிகர் முதலிய பேதவாதிகளின் மதம.

அல்லது * ௧௩௧. அபேதமிருக்கிறதா ?

இவைமுதலிய சம்சயங்கள் துவம்பதார்த் தத்திலுள. அவையும் பிரமேயகத சம்சயமாம்.

(௩௭) முற்கூறிய ஆத்மா தத் பதத்தின் அர்த்தத்தோடு அபின்னமாயினும்,

[௧] அவ்வாத்மா தத்பத வாச்சியார்த்த வடிவ * ௧௩௨. ஈசுவரனினும் அபின்னமா ?

அல்லது அந்த ஈசுவரபாவத்திற் கதிஷ்டானமான தத்பதத்தின் லக்ஷியார்த்தவடிவ * ௧௩௩. சுத்தப்பிரஹ்மத்தோடு அபின்னமா?

[௨] லக்ஷியார்த்தத்தோடு அபின்னமாயினும்,

ஜகத்துக்குக் காரணம் * ௧௩௪. பிரதானாதிகளா ?

அல்லது தத்பதத்தின் வாச்சியார்த்த மாகிய * ௧௩௫ ஈசுவரனா ?

---

* ௧௩௧. இது சித்தாந்த பக்ஷம்.

* ௧௩௨. இது அகங்கிரக உபாசர்களது மதம்.

* ௧௩௩. இது சித்தாந்த பக்ஷம்.

* ௧௩௪. இது சாங்கியர் முதலியோரது மதம்.

* ௧௩௫. இது வேதாந்திகள் நையாயிகர்களது மதம்.

[௩] ஈசுவரனாயினும்,

அவ்வீசுவரன் ஏகதேசத் திருப்பவரா யிருத்தலின் * ௧௩௬. பரிச்சின்னரா?

அல்லது * ௧௩௭. வியாபகரா?

[௪] வியாபகராயினும்,

கோலோக முதலியஇடங்களில் * ௧௩௮. லீலா விக்கிரகங் கொண்டவராய் வியாபகரா?

அல்லது * ௧௩௯. ஏகரச வியாபகரா?

[௫] ஏகரச வியாபகராயினும்,

அந்த ஜகத்திற்கு * ௧௪௦. உபாதான காரணரா?

---

* ௧௩௬. இது சில உபாசகர்களது மதம்.

* ௧௩௭. இது நியாய யோக வேதாந்தங்களின் மதம்.

*. ௧௩௮. இது வல்லபாசாரியின் மதம் வல்லப மதத்தில் ஈசுவரன் (அந்தரியாமி) நாநாவும் ஜீவனைப் போல ஸாதியும் (உற்பத்தியுடையதும்) பரிச்சின்ன (அணுவடிவ) முமாகக் கொண்டிருக்கின்றனர். என்னும் ஈண்டு ஈசுவரசப்தத்தினால் அவர்கள் கொண்டுள்ள பரப்பிரஹ்மம் (பூரண புருஷோத்தமன்) கொள்ளப்படும்.

* ௧௩௯. இது சித்தாந்த பக்ஷம்.

* ௧௪௦. இஃது ஓர் உபாசகர்களது மதம்

அல்லது * ௧௪௧. நிமித்த காரணரா?

அல்லது சிலந்திப்பூச்சியினைப் போலவும் சொப்பனத்திற்கு ஏதுவான சாக்ஷியினைப் போலவும் * ௧௪௨. அபின்ன நிமித்தோபாதான காரணரா?

[சூ] அபின்ன நிமித்தோபாதான காரணராயினும்,

அவர் ஜீவர்களது கர்மத்தின் அபேக்ஷையின்றியவராய்ச் சிருஷ்டியைச் *௧௪௩. செய்பவராயிருத்தலின் விஷமமாகச் செய்யுந்தன்மை முதலிய தோஷத்தோடு கூடியவரா?

அல்லது கர்மத்தின் அபேக்ஷையுடையவரா யிருத்தலின் சிருஷ்டியின் * ௧௪௪. கர்த்தா வாகுதலால் விஷமத்தன்மை தயாளமின்மை வடிவ தோஷங்களின்றியவரா யிருக்கின்றாரா?

---

* ௧௪௧. இது நியாயம் யோகம் முதலியவற்றின் மதம்.

* ௧௪௨. இது சித்தாந்தபக்ஷமும் வல்லபர் முதலியோர்கள் மதமுமாம்.

* ௧௪௩. இது பக்த ஜனங்களின் மதம்.

* ௧௪௪. இது வேதாந்திகளின் மதம்.

[எ] கர்மாபேக்ஷவடிவ கர்த்தாவா யிருத்தலின் விஷமமாகச் செய்யுந்தன்மைத் தோஷமின்றியவராயினும்,

அந்த ஈசுவரன் பரமார்த்தமாக மாயாசத்தி, அதன் தர்மங்களாகிய சர்வஞ்ஞத்தனமை முதலியன, கர்மமாகிய சிருஷ்டி முதலியன என்பவற்றின் * ௧௨௫. கற்பனைகளோடு கூடியவரா?

அல்லது * ௧௨௬. அக்கற்பனைகளின்றியவரா?

[அ] அவைகளின்றியவ ராயினும்,

அவர் முற்கூறிய ஆத்மாவினும் * ௧௨௭. பின்னரா? அல்லது * ௧௨௮. அபின்னரா?

இவை முதலிய விடிவினவாகிய சம்சயங்கள் தத்பதார்த்தத்திலுள.

அவையும் பிரமேயகத சம்சயமாம்.

(எ) எந்த தத்பதார்த்தத்தின் லக்ஷியார்த்தமாகிய சுத்தப்பிரஹ்மம் துவம்பதத்தின்

---

* ௧௨௫. இது உபாசகர் முதலியோர் மதம்.

* ௧௨௬. இது சித்தாந்த பக்ஷமும் யோக மதமுமாம்.

* ௧௨௭. இது யோகமதம்.

* ௧௨௮. இது சித்தாந்த பக்ஷம்.

லக்ஷியார்த்தமாகிய ஆத்மாவோடு அபின்னமாயினும்,

[௧] அந்தப் பிரஹ்மாத்மாவின் ஏகத்துவம் எதுவோ அது * ௧௪௯. மோக்ஷ காலத்திலிருப்பதா?

அல்லது * ௧௫௦. எப்போதும் இருக்கிறதா?

[௨] எப்போதும் ஏகத்துவமுளதாயினும், அவ்வேகத்துவம்சச்சிதாநந்தவடிவ*௧௫௧. ஐசுவரியமின்றியதா?

அல்லது * ௧௫௨. ஐசுவரியத்தோடு கூடியதா?

[௩] சச்சிதாநந்த ஐசுவரியத்தோடு கூடியதாயினும், அச்சச்சிதாநந்தமுதலியன *௧௫௩. குணவடிவமா?

---

* ௧௪௯. இது பர்த்திரு பிரபஞ்சத்தின் (பிராசீன விருத்திகாரரின்) மதம்.

* ௧௫௦. இது சித்தாந்தபக்ஷம்.

* ௧௫௧. இந்தப் பக்ஷம் எந்த அபேதவாதிக்கும் இஷ்டமுடையதன்று.

* ௧௫௨. இந்தப் பக்ஷம் சகல அபேதவாதி (வைதிகர்) களுக்கும் விருப்பமுடையதாம்.

* ௧௫௩. இது நையாயிகர்முதலிய ஆத்மாவின் ஜடத்தன்மை வாதிகள் மதம்.

அல்லது பிரஹ்மாத்மாவின் * கருசு. சொரூபமா?

[சு] சொரூபமாயினும், அவற்றிற்கொன்றற்கொன்று பேதஞ் சொல்லுவதுண்டாகின்றது.

அந்தப் பேதம் வாஸ்தவமா?

அல்லது கற்பிதமா?

இவை முதலியவடிவ சம்சயங்கள் தத்பதார்த்தத்திற் கபின்னமான துவம்பதார்த்தத்திலுள. அவையும் பிரமேயகதசம்சயமாம்.

இவ்வாற்றுல் சிரவண மனனங்களால் கிரமமாக நிவிருத்திக்கத்தக்கனவாகிய பிரமாணகத பிரமேயகத சம்சயங்களெவையோ அவையாவும் பிரஹ்மசாக்ஷாத்காரமாகவே க்ஷீணமாகின்றன.

முற்கூறிய இருவகைச் சம்சயமும் சிரவண மனனங்களால் ஒழிதலின் ஞானத்தால் அவற்றின் நிவிருத்தி சம்பவியாதெனினும், சிரவண மனனங்களால் நீங்கிய சம்சயங்களுக்கு அவித்தை வடிவ காரண மிருத்தலான் மீண்டும் அவை உற்பத்தியாகின்றன. ஞானம் உண்டா

* கருசு. இது சித்தாந்திமுதலியோர் பக்ஷம்.

கியபின் அவித்தை நாசமாதலால் அச்சம்சயங்கள் மீண்டும் உற்பத்தியாகிறதில்லை. ஆதலால் ஞானத்தினாலும் சம்சயங்களின் நிவிருத்தி கூறுதல் சம்பவிக்கின்றது. சம்சயங்களின் நிவிருத்தியில் உபயோகியான அநேக சாஸ்திரங்களின் வாக்கியமாகிய பிரமாணங்களும் யுக்திகளும் உள. அவை சம்சயசுதரிசனமென்னும் நூலில் எழுதப்படும். அவை சிரவண மனனத்திற் சகாயமாம் விரிவஞ்சி இங்கு எழுதப்படவில்லை.

எனது ஜந்மமுதலிய துக்கத்திற்குக் காரணமான கர்மங்கள் எவையோ அவை முழுவதும் ஞானக்கினியால் நஷ்டமாயின.

௩௰ இது தாற்பரியம்:—(௧) சஞ்சிதம் (௨) பிராரப்தம் (௩) ஆகாமி என்னும் பேதத்தால் கர்மம் மூன்றுவகைத்தாம்.

[௧] பயிர்த்தொழில் செய்வோர் முதல் வருஷத்தில் விளைந்த தானியத்தைக் களஞ்சியத்தில் சேர்த்து வைப்பார்

[௨] அதினின்றும் உணவின்பொருட்டுச் சொற்பத் தானியங் கொண்டு குதிரில் வைப்பார். அக்குதிரிலுள்ள தானியத்தைப்புசிப்பர். வயலிலும் விதைப்பர்.

[௩] மீண்டும் வயலில் விளைந்த தானியத்தைக் களஞ்சியத்தில் போடுவர்.

[க] அங்ஙனமே ஜன்மாந்தரங்களின் ஆகாமிய கர்மங்கள் எவையோ அவை அந்தக்கரண உபகிதசாக்ஷியின் கண்ணுள்ள அஞ்ஞானத்தின் ஆவரணசக்தி வடிவக் களஞ்சியத்திலிருக்கின்றன. அக்கர்மங்கள் சஞ்சிதமெனப்படுகின்றன.

[உ] அவற்றினின்றும் சமயபேதத்தால் பரிபக்குவமாகிய ஒருகர்மம் ஈசுவரனது இச்சையினால் இந்த வர்த்தமான சரீரத்தின் ஆரம்பகமாய்த் தன்னாலாகிய சுகதுக்கங்களினால் போகவடிவ பலத்தைத் தருகின்றது. அஞ்ஞானத்தின் விக்ஷேபசக்தி வடிவ ஆசிரயத்திலிருக்கின்றது. அந்தக் கர்மம் பிராரப்தமெனப்படுகின்றது.

[௩] பிராரப்த கர்மத்தினாலாகிய போகத்தை அநுபவித்துக்கொண்டு நிகழ்கால வருங்கால போகங்களைச் சம்பாதித்தற் பொருட்டு இவ்வர்த்தமான தேகத்தில் எந்தக் கர்மம் உண்டாகின்றதோ,

அன்றியும் பிராரப்த வடிவ சம்ஸ்காரம் அல்லது ராகத்துவேஷாதி சுபாசுபவாசனை

வடிவ சம்ஸ்காரம் எதன் உற்பத்தியில் நிமித்த மோ,

(அ) பிரமஜதாதாத்மியம் (அகங்காரத்திற் குச் சாக்ஷியினேடுள்ள தாதாத்மியம்),

(ஆ) சகஜதாதாத்மியம் (அகங்காரத்திற் குச் சிதாபாசனேடுள்ள தாதாத்மியம்),

(இ) கர்மஜதாதாத்மியம் (அகங்காரத்தி ற்கு ஸ்தூல தேகத்தோடுள்ள தாதாத்மியம்) என்னும் பேதத்தால் அகங்காரத்தின் தாதாத் மியம் மூன்றுவகையாம். அவற்றிலுள்ள முதல் பிரமஜதாதாத்மியம் எதுவோ அதனிடத்தில் (அதன் ஆசிரிதமாய்) எது நிலைத்திருக்கின்ற தோ, அத்தன்மைய கர்மம் ஆகாமி யெனப் படுகின்றது.

முற்கூறிய மூவகைக் கர்மங்களுள் ஞான வான்களுக்கு,

[க] சகலசஞ்சித கர்மங்களும் ஞானக்கினி யினல் நாசமாகின்றன. ஏனெனின், தனது ஆசிரயமாகிய அஞ்ஞானத்தின் ஆவரணசக்தி எதுவோ அது நாசமாயிற்று. ஆதலால் ஆசி ரயமில்லாமையால் சகல சஞ்சித கர்மங்களுக் கும் நாசமுண்டாகின்றது.

[௨] பிராரப்த போகம் முடியவே (இந்த வர்த்தமான சரீரத்திற்கு முடிவுண்டாகவே), விதேகமோக்ஷத்தின் ஆரம்பகாலத்தில் ஸ்தூல சூக்ஷ்ம சரீரவடிவமாகப் பரிணாமத்தை யடைந்திருந்ததும் தத்துவ ஞானத்தால் முன் (ஜீவன் முக்திதசையில்) பாதிக்கப்பட்டு (மித்தியாத்துவ நிச்சயவடிவப் பாதத்தின் விஷயமாய்) இருந்ததுமான அஞ்ஞானத்தின் விக்ஷேபசக்தி (அவித்தியாலேசம்) எதுவோ அது தத்துவ ஞானத்தால் அல்லது மரண சம்பந்தியான மூர்ச்சை யுண்டாகத் தத்துவஞானத்தின் சம்ஸ்காரத்தால் நாசமாயிற்று. அதாவது காய்ச்சிய இரும்பில் நீர்த்துளி ஒடுங்குவது போல சேதனத்தில் ஒடுங்கியது.

அந்தத் தனது ஆசிரயத்தின் நாசத்தினால் ஈச்வர சங்கற்பத்திற்கு விஷயமாகிய அதன் ஆசிரிதமான பிராரத்தகர்மம் நாசமாகின்றது.

[௩] அகங்காரத்திற்குச் சாக்ஷி சேதனத்தோடுள்ள தாதாத்மிய (பேதமிருக்கவும் அபேதம் தோற்றுதல்) வடிவ பிரமஜ (முன் முன் அத்தியாசவடிவ பிராந்தியின் சம்ஸ்காரத்தினாலாகிய) தாதாத்மியம் எதுவோ அவ்வடிவ இருதயக்கிரந்தி நாசமாக, அதன் ஆசிரிதமான ஞானத்திற்கு முன்னாவது பின்னு

வது இந்த வர்த்தமான ஜன்மத்திற் செய்யப் படும் ஆகாமிய கர்மங்களைவையோ, அவை ஜலத்தாற் பற்றப்படாத தாமரையிலையினைப் போல வித்வானைப் பற்றுகிறதில்லை. ஆனால் வித்வானது சுபாசுப கர்மங்களுக்குப் பக்தரும் நிந்தகரும் கிரமமாகப் * கருச. பங்குடைய வராகின்றனர்.

ஆதலால் ஈண்டு முன் " ஞானக்கினியினால் சகல கர்மங்களும் நாசமாகின்றன " என்று சொல்லப்பட்டது.

---

* கருச. ஈண்டு இது விவேகமாம்:—ஞானியின் திரவியம், வீடு, அல்லது மடம், புஸ்தகங்கள் என்பவற்றிற்குப் புத்திரனும் சிஷ்யனும் பங்குடையவராவர். அவனது ஞானத்திற்கு ஜிஞ்ஞாசுக்கள் பங்குடையவராவர். அவனுடைய சுபகர்மத்திற்குச் சகாமபக்தர் பங்குடையவராவர் அவனுடைய அசுப கர்மத்திற்கு நிந்தகர் பங்குடையவராவர். அவனது நல்லொழுக்கத்திற்குப் புண்ணியவான்களாகிய உதாசீனர் பங்குடையவராவர். அவருடைய பாவத்தை நிவர்த்திக்கும் சுத்த திருஷ்டியின் வீழ்ச்சிக்குப் பாபமுடைய உதாசீனர் (ஞானியினிடத்து ராகத்துவேஷமின்றியபாபிகள்) பங்குடையவராவர். அதாவது அவனது நல்லொழுக்கத்தினால் புண்ணியமுடைய உதாசீனர் கண்டு நல்லொழுக்கத்தைச் செய்கின்றார்கள்; பாபமுடைய உதாசீனர் பாபமின்றியவராகின்றார்கள்.

ஆண்டுச் சர்வகர்மமென்னும் சப்தத்தினல் அநேகவித ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்ட அபக்குவமான சஞ்சிதகர்மங்களே கொள்ளப் படும். அதனுல்

“ பி⁴த்³யதே ஹ்ருத³யக்³ரந்தி²ஶ்சி²த்³யந்தே ஸர்வ ஸம்ஶயா: । க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்³ருஷ்டே பராவரே ॥

அந்தப் பராவர (எல்லாவற்றினும் மேலான பிரஹ்ம)த்தைக் காணவே (அபரோக்ஷஞ் செய்யவே) இந்த ஞானியின் இருதயக்கிரந்தி (அகங்காரக்கிரந்தி) பேதிக்கப்படுகின்றது. இவனது சகல சம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன. இவனது சகல கர்மங்களும் கெடுகின்றன.” என்னும் சுருதியின் அர்த்தத்தைச் சிஷ்யன் கூறினன்.

௮௭. இப்போது சிஷ்யன்

“ ஶ்ரியாஶேஷோ ஜக³ந்நீரம் வக்ஷ்யேऽஶேஷ யதா² ததா² । விசாரஶாஸ்த்ரஸாரம் ஹி ஸுதா⁴ வா ஶாஸ இதி ஶ்ருதி: ”

என்னும் பஞ்சதசியின் கூடஸ்ததீபத்திலுள்ள சுலோகத்திற் கூறப்பட்ட வித்வான்

களது ஜீவன்முக்தி தசையிலுள்ள ஸ்திதியி னைத் தனது சித்தத்திற் கொண்டுவந்து கூறு கின்றான்:—

ஐயனே! ஞானத்தால் பாதிக்கப்பட்ட மாயையாகிய மேகம் தனது விக்ஷேப சக்தி யால் உண்டாகிய ஜகத்துவடிவ ஜலத்தை எல்லா விதத்தாலும் (வேண்டியவாறே) பெய்க. ஆனால் எதனால் நான் இதற்கு ஆதார (அதிஷ்டான) சிதாகாசவடிவமா யிருக்கின்றேனோ, அக்காரணத்தினால் இச்சகத்தால் எனக்கு ஓர் லாபமும் நஷ்டமுமில்லை.

௮௮. இப்போது சிஷ்யன்,

“ தாலூா஽நிவ௰ுவநீயாவ வாஹுவீவெத௵ ஸௗதிீயா | ஜெஜூயாாயாதி ஹிவெ௰ுாவெஃ ஶுளதயெளக்ஷிகூஸௗக்ஷிவெகூஃ ||

௧. சிரௌதம் (இந்தப் பிரஹ்மத்தில் நாநா என்பது சிறிதுமில்லை; இங்ஙனமன்று இங்ஙன மன்று என்றல் முதலிய சுருதி வாக்கியங்க ளால் உண்டாகிய முக்காலத்தின்மையின் நிச் சயவடிவ வித்வான்களது சித்தத்தில் ஆரூட மானது),

உ. யௌக்திகம் (ரஜ்ஜுசர்ப்பம் சுக்திரஜதம் சொப்பனஜகத்து முதலிய திருஷ்டாந்த வடிவமும் அநுமானாதி வடிவமுமான யுக்திகளாலாகிய வேதாந்த யுக்திகளிற் சமர்த்தராகிய பண்டிதர்களது சித்தத்தில் ஆரூடமானது),

௩. லௌகிகம் (விசாரமின்றிய பாமரவிஷயிகளது சித்தத்தில் இயல்பாய்ப் பெறப்பட்டுள்ளது) என்னும் பேதத்தால் மூன்றுவகையாகும். அவற்றால் இந்த ஜகத்தாகிய காரியத்தோடுகூடிய மாயையானது,

க. துச்சை,

உ. அநிர்வசநீயை (சத்தசத்து விலக்ஷணமாயிருத்தலால் பாதயோக்கிய சொரூபமுடையது),

௩. வாஸ்தவி (சத்தியமானது) என்னும் பேதத்தால் மூன்று வகையாக அறியத்தக்கதாம்" என்னும் பஞ்சதசியின் சித்திரதீபத்துள்ள வாக்கியத்தினால் கூறப்பட்ட மாயையினது மூவகைத் தன்மையின விபரீதக் கிரமமாகத் தனது சித்தத்தில் உதித்த சுவாநுபவத்தைக் கூறுகின்றான்:—

வேதாந்த சாஸ்திரங்களின் அப்பியாசத்திற்கு முன் அஞ்ஞானவடிவ காரணத்தோடு ஜகத்து சத்திய மென்றறிந்தேன். அது வேதாந்தசாஸ்திரத்தின் அப்பியாசத்தினால் (சிரவண மனனங்களால்) சொப்பன ஜகத்திற்குச் சமானமென்று விசாரித்து மித்தையாக (அநிர்வசநீயமாக)ச் சித்திக்கச் செய்தேன். அது இப்போது அபரோக்ஷஞான முண்டாக நிஷேதமுக சுருதியின் அநுசாரமாக முயற்கோட்டைப்போல அசாரமா யிருத்தலின் அசத்து (துச்சம்) எனச் சித்தித்தது.

இவ்வர்த்தம் வேறு சாஸ்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது:—

[illegible]
[illegible] ॥

பாரமார்த்திகம், வியாவகாரிகம், பிராதிபாஸிகம் என்னும் பேதத்தால் ஜகத்தின் மூவகைத் தோற்றமுண்டு. அவற்றுள்,

க. "வேதாந்த சாஸ்திரத்தின் அப்பியாசத்தினால் காரியத்தோடு கூடிய மாயையில்

முன் அஞ்ஞானகாலத்திலிருந்த பரமார்த்த புத்தி (சத்தியத்தன்மையின் ஞானம்) எதுவோ அது நஷ்டமாகின்றது.

௨. இந்த அநிர்வசநீயமா யிருத்தலின் வியாவகாரிகமாய் அறியப்பட்டிருந்த மாயையில் * கருரு. காரியத்தை உண்டு பண்ணுவதில் சாமர்த்திய முடையதா மென்றிருந்த புத்தி எதுவோ அது அத்வைததத்துவத்தின் அபரோக்ஷ ஞானத்தால் நஷ்டமாகின்றது.

௩. ஞாதமாகிய கண்ணுடியிலுள்ள பிரதிபிம்பம் பாதிதாநுவிருத்தியினுல் தோற்றுவது போல இந்தக் காரியத்தோடுகூடிய மாயை (தேகம் விழும்வரையிலும் ஞானிக்கு) தோற்றுகின்றது.

---

* கருரு. நித்திரையினின்றும் விழித்தற்குமுன் சொப்பன திருஷ்டாவிற்குக் கடமுதலிய பதார்த்தங்களில் ஸபலக்கிரியையை யுண்டு பண்ணுந்தன்மை தோற்றுவதுபோல அபரோக்ஷஞானத்திற்குமுன் சாஸ்திரத்தினுல் மித்தையென்றறிந்த பதார்த்தங்களிலும் "மித்தையாகிய கடத்தினுல் மித்தியா ஜலத்தைக் கொண்டு வருதலும் மித்தையாகிய புண்ணிய பாவங்களால் மித்தையாகிய சுவர்க்க நாகங்களுமுண்டாகின்றன" என்றிவ்வாறு எந்த ஸபலக்கிரியையை யுண்டு பண்ணுந்தன்மை தோற்றுகிறதோ அது காரியத்தை யுண்டுபண்ணுவதிற் சாமர்த்தியமாம்.

அது பிராரப்தம் நாசமாகவே நஷ்டமாகின்றது.

இப்படிக் கிரமமாக ஆத்மாவின் மாயை (அஞ்ஞானம்) நாசமாகின்றது. இது சாஸ்திராந்தர வசனத்தால் சொல்லப்பட்ட பொருளாம்.

௮௯. இப்போது சிஷ்யன்,

"ந நிரோதோ நசோத்பத்திர் ந பத்தோ ந ச ஸாதக: | ந முமுக்ஷுர் நவை முக்த இத்யேஷா பரமார்த்ததா ||"

என்னும் மாண்டூக்கிய உபநிஷத்திற்குக் கௌடபாதாசாரியராற் செய்யப்பட்ட காரிகையின் அர்த்தத்தைச் சித்தத்தில் ஆரூடஞ்செய்து பரமார்த்தத்தன்மையைக் கூறுகின்றான்:—

ஐயனே! ஜகத்திற்குத் தனது காரணமாகிய அஞ்ஞானத்தில் திரோபாவவடிவ நிரோத (பிரளய) மு மில்லை. தனது உபாதானமாகிய அஞ்ஞானத்தி னின்றும் ஆவிற்பவித்தலாகிய உற்பத்தி (சிருஷ்டி)யு மில்லை. பத்த (சம்சாரி ஜீவ)னு மில்லை. சாதக (மோக்ஷ சாதனங்களோடு கூடியவனுமில்லை. முமுக்ஷுவு (பந்

தத்தினின்றும் விடுபட விரும்புவோனு) மில்லை முக்த (பந்தத்தினின்றும்விடுபட்டவ) னு மில்லை.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:—எதனால் சகல இந்த லௌகிக வைதிக வியவகாரங்களும் காமாலை தோஷத்தோடு கூடிய திருஷ்டிக்கு விஷயமாம் சங்கின் பீதத்தன்மையினைப்போலவும், நித்திரை தோஷத்தோடு கூடிய திருஷ்டிக்கு விஷயமாம் சொப்பனத்தைப்போலவும் அவித்தையின் (அவித்தையோடு கூடிய திருஷ்டிக்கு) விஷயமாமோ அதனால் உற்பத்திப் பிரளயங்களின் அபாவத்தால் பத்தர் முதலியோரில்லை. ஆனால் இத்தோற்றுகின்ற துவைதம் மித்தையாம். ஆத்மா ஒன்றே பரமார்த்தமாகச் சத்தாம். இது பரமார்த்தத்தன்மையாம் (வித்தையோடு கூடிய திருஷ்டிக்கு விஷயமாகும் வாஸ்தவ தத்துவமாம்). ஆதலால் அந்தப் பரமார்த்த வடிவம் யானாகின்றேன். இதனை யான் தமதுகிருபையினால் நிச்சயஞ்செய்தேன்.

௬௦. இப்போது பதார்த்தங்களின் பரஸ்பர விலக்ஷணத்தன்மையோடுகூடிய ஜாக்கிரத்தில் காணப்படுகின்ற பதார்த்தங்கள் ஆதியிலும் அந்தத்திலு மில்லாமையால் அவற்றிற்கு மித்தியாத்தன்மையுண்டு என்று சிஷ்யன்,

“ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமாநேபி தத்ததா ॥ விததை: ஸத்ருசா: ஸந்தோऽவிததா இவ லக்ஷிதா: ॥”

என்னும் கௌடபாதாசாரியாது வாக்கியத்தை அநுசரித்துக் கூறுகின்றான் :—

கானற்சல முதலிய வஸ்து ஆதியிலும் (காலையிலும்) அந்தத்திலும் (சாயங்காலத்திலும்) இல்லை. அது மத்தியில் (மத்தியான வடிவ வர்த்தமானகாலத்தில்) தோற்றினும் ஒருபோதுமில்லை. இது உலகத்தில் நிச்சயிக்கப்பட்டதாம் அங்ஙனமே இந்த ஜகத்தும் தனது உற்பத்திக்கு முன்னும் நிமித்தத்தின் நாசத்தினால் தான் நாசமாகிய பின்னும் அல்லது ஞானத்தினால் தனது உபாதானம் கெடுதலால் பாதத்தை யடைந்த பின்னுமில்லை.

ஆதலால் இந்த ஜகத்தானது கானற்சலத்தைப்போல மூன்று காலத்திலுமில்லை.

௯௧, இப்போது சிஷ்யன்,

“ஆத்மாநம் சேத் விஜாநீயாத் அயமஸ்மீதி பூருஷ: ॥ கிமிச்சந் கஸ்ய காமாய சரீரமநுஸஞ்ஜ்வரேத் ॥”

புருஷன் (சாபாஸ அந்தக்கரண விசிஷ்ட சேதனவடிவ ஜீவன்), எப்போது (விசாரதசையில்) இது சொப்பிரகாசமாயிருத்தலால் நித்திய அபரோக்ஷமாகிய பிரஹ்மவடிவ ஆத்மாவானக விருக்கின்றேன் என்று ஆத்மாவை அறிகின்றானோ, அப்போது எதனை (எந்தப் போக்கிய பதார்த்தங்களை) இச்சிக்கின்றவனாய், எவனுடைய (எந்தப்போக்தாவினது) காம (போக) த்தின் பொருட்டுச் சுபாவமாக முறையே ரோகமுதலியனவும் காமகுரோத முதலியனவும் சாந்திமுதலியனவும் அவ்விரண்டின் சம்ஸ்காரவடிவினவுமாகிய தாபங்களோடு கூடிய மூவகைச் சரீரங்களைப் பின்பற்றித் தபிக்கின்றவனுவன்.,, என்னும் பஞ்சதசியின் திருப்திதீபத்தில் வியாக்கியானஞ் செய்யப்பட்டுள்ள பிருகதாரணிய'சுருதி வசனத்தின் அர்த்தத்தைச் சித்தத்திற்கொண்டு கூறுகின்றான்.

க. ஐயனே! ஆகாய முதலிய சகல ஜகத்தும் அசத்தாயிருந்து தோற்றிக்கொண்டிருத்தலால் சொப்பனயானை முதலியவற்றைப்போல் மித்தையாயிருத்தலின், அதனுள்ளடங்கியனவாகிய இகலோக பரலோக சம்பந்தமுள்ள மாலை சந்தனம் ஸ்திரீ அமிருதபானம் அப்

ஸரை (தெய்வப்பெண்) முதலிய விஷயவடிவ போக்கிய (போகத்தின் சாதன)ங்களும்.

௨. ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளின் அபிமானத்தால் விசுவன் தைஜசன் பிராஞ்ஞனென்னும் பெயரை யடைந்த அந்தக்கரணத்தில் சேதனத்தின் பிரதிபிம்பமயமான சிதாபாச வடிவ போக்தாவும் இவ்விரண்டும் எதனால் மித்தையோ, அதனால் அந்தப்போக்கியத்தின் நிமித்தமாகிய போக்தாவினாற் செய்யப்பட்ட புண்ணிய பாவங்களும் மித்தையாம், இதனானே அப்புண்ணிய பாவங்களின் பலவடிவ சுகதுக்கங்களும் மித்தையாம்.

ஆதலால் நான்சேதன சொரூப ஆத்மாவை யறிந்து, எந்தப் போக்கியத்தின் இச்சையால் எந்தப் போக்தாவினது போகத்தின் பொருட்டு ஜ்வர (தாப) முடைய சரீரத்தைப் பின்பற்றி வீணாகத் தபிப்பேன்.

அதாவது அபரோக்ஷ ஞானத்தினால் பாதிக்கப்பட்ட (மித்தையாகத் தோற்றப்பட்ட) போக்கிய போக்தா போகங்களுக்கு நிமித்தமாவதாகிய பிரபல இச்சையின்மையினாலும், வறுத்த விதையினைப்போல பிராரத்தத்தினாலுண்டாகிய பாதிக்கப்பட்ட இச்சை யிருந்

தலாலும் அந்த இச்சைவடிவ நிமித்தத்தால் நான் தபியேன்.

௩௨. இப்போது சிஷ்யன்,

"அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணம் ச
ப்ருதக்விதம் | விவிதாஶ்ச ப்ருதக் சேஷ்டா
தைவம் சைவாத்ர பஞ்சமம் || க ||

ஶரீரவாங்மநோபிர்யத்கர்ம ப்ராரபதே
நர: | ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சை
தே தஸ்ய ஹேதவ: || உ ||

தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம்
து ய: | பஶ்யத்யக்ருதபுத்தித்வாந்ந ஸ
பஶ்யதி துர்மதி: || ங ||

ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மா
ணி ஸர்வஶ: | அஹங்காரவிமூடாத்மா கர்த்தா
ஹமிதி மந்யதே || ச ||

தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபா
கயோ: | குணா குணேஷு வர்த்தந்த இதி
மத்வா ந ஸஜ்ஜதே || ரு ||

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே | ஹத்வாऽபி ஸ இமாம்ல்லோகாந்ந ஹந்தி ந நிபத்யதே ||"

அதிஷ்டானம் (சரீரம்), அங்ஙனமே கர்த்தா (அந்தக்கரணம்), வெவ்வேறு கரணங்கள் (தசேந்திரியங்கள்), அநேகவிதமான பின்ன சேஷ்டைகள் (பஞ்சப்பிராணன்), ஐந்தாவது தெய்வம் (பிரேரகனாகிய ஈசுவரன், அல்லது பிராரப்தம்) அல்லது இந்திரியங்களின் தேவதை) என்பவையிருக்கின்றன (க). சரீரம் வாக்கு மனது என்பவற்றினால் எந்த நியாயமாகிய (சுப) அல்லது விபரீத (அசுப) மான காமத்தை நரன் தொடங்குகின்றானோ, அதற்கு இச் சரீரமுதலிய ஐந்தும் ஏதுக்களாம் (உ). ஆண்டு இவ்வாறு கிரியைக்கு வேறு ஏதுக்கள் உளவாகக் கேவல (அக்கிரிய) ஆத்மாவை எந்தப் புருஷன் கிருதார்த்த மின்றிய புத்தியுடையவனாயிருத்தலின் கர்த்தாவெனக் காண்கின்றானோ அந்தத் துர்புத்தி யுடையவன் காணான் (ஆத்மாவை யதார்த்தமாக அறியான்) (ந). சரீரம் இந்திரியம் முதலிய வடிவமாகப் பரிணாமத்தை யடைந்தபிரகிருதி (மாயை) யின் சத்துவ முதலிய குணங்களால் செய்யப்படுகின்றனவாம் சகல கர்மங்களும். அவற்றிற்கு அகங்

காரத்தினால் (அகங்காரத்தின் தாதாத்மியத்தினால்) எவனுடைய ஆத்மா விமூடமாய் (வேற்றுத்தன்மையை யடைந்து) இருக்கின்றதோ, அத்தன்மைய புருஷன் நான் கர்த்தாவெனக் கொள்ளுகின்றான் (௪). மகாபாகுவே குண கர்மங்களினது விபாகத்தின் தத்துவத்தை உணர்ந்தவனே குணங்கள் (இந்திரியங்கள்) குண (விஷய)ங்களிலிருக்கின்றன என்று மதித்துத் தான் சங்க முடையவனாகிறதில்லை (௫). எந்தப் புருஷனுக்குச் சரீரமுதலியவற்றாற் செய்யப்படும் கர்மத்தில் இக்கர்மத்தின் கர்த்தா யான் என்றிவ்வாறு அகங்காரத்தின் தன்மையில்லையோ, அன்றியும் இச்சுபா சுபகர்மங்களினது சுவர்க்க நரகாதிவடிவ பலத்தில் எந்தப் புருஷனது புத்தி நான் இதன் பலத்தை அநுபவிப்பவன் என்பதாகப் பற்றினை யடைகிறதில்லையோ அந்தப் புருஷன் இவ்வுலகங்களைக் கொல்லுகின்றவனாயினும் உலக திருஷ்டியாற் கொல்லுதலைச் செய்கின்றான்; சாஸ்திர திருஷ்டியாகக் கொல்லுகிறதில்லை. அதன்பயனை யடைதலாகிய பந்தனத்தையும் அடைகிறதில்லை (௬). இவை முதலிய ஆத்மாவின் அகர்த்திருத் தன்மை அபோக்திருத் தன்மை அங்ஙனமே ஆதமாவின் ஞானம் என்

யவற்றின் மாகாத்மியத்தைப் பிரதிபாதிக்கும் கீதையின் வாக்கியங்களுள. அவற்றின் பொருளை அநுபவ கோசரமாக்கிச் சிஷ்யன் கூறுகின்றான்:—

யான் சரீரம், வாக்கு, மனம் என்பவற்றாற் செய்யப்பட்ட கிரியைகளின் அநாசிரய (சம்பந்த மில்லாதவ) னாயிருத்தலால் அக்கிரியனு (அகர்த்தாவா) யிருக்கின்றேன்.

எது கிரியையின் ஆசிரய வடிவமாய்க் கிரியையுடையதா யிருக்கின்றதோ அது கர்த்தா வெனப்படும். அது முற்கூறிய சரீர முதலிய சாமக்கிரிகளோடுகூடிய அந்தக்கரண வடிவ கர்த்தாவைப் போலவாம். எதனால் நான் கிரியையின் ஆசிரயவடிவமான கிரியையுடையவனல்லனோ அதனால் கர்த்தாவு மல்லன்.

எது கர்த்தாவாகின்றதோ அதுவே போக்தாவாமென்பது உலகத்திற் பிரசித்தம். எங்ஙனம்; அந்தக்கரணம் கர்மத்திற்குக் கர்த்தாவாயிருக்கின்றது. ஆதலால் அது கர்மத்தின் பல சொரூபமான தனது பரிணமவடிவ சுகதுக்கங்களின் போக்தாவா யிருக்கின்றது. எதனால் நான் முற்கூறியபடி கர்மத்திற்குக் கர்த்

தா வல்லனோ அதனால் அதன் பலத்தினது போக்தாவு மல்லன்.

எதனால் நான் கர்மபலத்தின் போக்தா வல்லனோ அதனால் யான் பற்றின்றியவனா யிருக்கின்றேன்.

பிராரத்த கர்மவடிவ நிமித்தத்தால் அஞ்ஞானத்தின் விக்ஷேப சக்தியினால் ஆக்கப்பட்ட லிங்கதேகத்தோடுகூடிய ஸ்தூலதேகம் எதுவோ அது இதன் பிராரத்தத்தின்படி மேல் கதியாகவும் கீழ்கதியாகவும் காற்றினாற் பறக்கும் அரசிலை அல்லது துரும்பு முதலியவற்றைப்போல் அலைக, பிராரத்த பரியந்தமிருக்குக, அதனால் ஆத்மாவாகிய எனக்கு ஓர் லாபமும் நஷ்டமுமில்லை. இவ்வர்த்தம் ஸ்ரீபஞ்சதசியின் திருப்தி தீபத்திலும்,

“ வ்யவஹாரோ லௌகிகோ வா ஶாஸ்த்ரீயோ

வாऽந்யதா பி வா । மமாऽகர்துரலேபஸ்ய

யதாऽऽரப்தம் ப்ரவர்ததாம் ॥

அகர்த்தாவும் அபோக்தாவுமாகிய என்னுடைய பிராரப்தம் எவ்வாறுளதோ, அவ்வாறு இலௌகிக அல்லது சாஸ்திரீய அல்லது இவ்

விரண்டினும் வேறான வியவகாரம் பிரவர்த்தி க்குக என்று சொல்லப்பட்டிருக்கிறது.

௩௭௰ இது சங்கையாம்:— ஞானிக்குச் சர்வஞ்ஞ யிருத்தலால் விதிநிஷேதவடிவ சாஸ்திரத்தின் ஆணை (தடை) இல்லாமையின் எப்போது சுதந்திரத்தன்மையுண்டோ அப்போது அவனுக்கு யதேஷ்டாசரணம் (இஷ்டப்படி நடத்தல்) வாய்க்கும். அது லோகநிந்தையினையும் சிஷ்டநிந்தையினையும் அந்தக்கரணத்திலுள்ள காமாதி தோஷங்கள் அதிகரித்தல் வாயிலாகச் சித்தம் வெளிமுகமாதலையும் உண்டுபண்ணுவதா யிருத்தலால் விக்ஷேபத்திற்கு ஏதுவாகும்; ஜீவன் முக்தியின் ஆநந்தத்திற்கு ஏதுவன்று.

ஆதலால் இந்த ஞானிக்கு "வட்டிக்காசைப்பட்டு முதலையிழந்தான்" என்னும் நியாயத்தால் பரமாநந்தம் பெற விரும்பி ஞானத்திற் பிரவிருத்தித்த புருடனுக்கு மாறான விக்ஷேப வடிவ அநர்த்தம் வளர்ந்ததே? என்னும் சங்கைக்கு இது சமாதானமாம்:—

சக்கரவர்த்தியாகிய ராஜா தனது புத்திரனைக் கொல்லுக; அல்லது தனது நகரத்தை யாவது தேசத்தையாவது எரிக்குக; அல்லது

மலத்தையுண்க; அல்லது தனது கீர்த்தியைச் செய்பவர்களும் ஆசீர்வாதம் செய்பவர்களும் ராஜ்ஜிய காரியத்தைச் செய்பவர்களுமாகிய சூதர் (பௌராணிகர்) மாதகர் (வம்சத்தைச் சொல்லுவோர்) சீக்கிர கவிகள் வேதத்தை யுணர்ந்த வித்துவான்கள் தனது வேலைக்காரர் முதலியோர்களுக்குப் பணம் முதலிய பதார்த்தங்களைக் கொடாது, அவற்றை மாறுப் கொள்ளை யடிக்க இவ்வெல்லாக் காரியங்களிலும் அவனுக்குச் சுவதந்திரத்தன்மை யுண்டு என்றாலும் தர்மத்தை யுணர்ந்தவனும் லௌகிக வியவகாரத்தின் நீதியில் நிபுணனுமா யிருந்தவின் அந்த ராஜா அவ்வாறு செய்கிறதில்லை.

அவ்வாறே ஞானி விதிநிஷேதங்களின்மையால் சுவதந்திரனா யிருக்கினும்,

க. எதனால் எல்லாவற்றையும் * கரு. தானாக அறிகின்றானோ,

---

* கரு. இதனால் ஞானிக்குச் சர்வாத்மத்தன்மையின் ஞானத்தால் தன்னிடத்திலும் பிறரிடத்திலும் பேத ஞானத்தின் அபேக்ஷையுடையனவாகிய அநுகூலத் தன்மை பிரதிகூலத் தன்மைகளின் ஞானத்தை முன்னிட்ட ராகத்துவேஷங்களுக்கு இடத்தன்மையின்மையால் ராகத்துவேஷங்களினாற் றோன்றும்

௨. சாஸ்திரத்திற் கூறிய * ௧௫௬. விவேகத்தோடு கூடியவனா யிருக்கின்றானே,

௩. குழந்தைகளிடத்துப் பிதாவைப்போல சகல * ௧௫௭. ஜனங்களுக்கும் இதத்தைச் செய்பவனா யிருக்கின்றானே,

---

(நிஷித்தபோகமும் இம்சைவடிவமுமான) யதேஷ்டாசரணத்தின் அபாவம் சொல்லப்பட்டது.

* ௧௫௬. இங்ஙனம் கூறுதலால் ஞானிக்குப் பாதிதாநுவிருத்தியினால் பசி, தாகம், விஷம், சர்க்கரையன்னம், மல முதலியவற்றின் விவேகத்தைப்போலச் செய்யத்தக்கனவும் செய்யத்தகாதனவுமாகிய காரியங்களின் விவேகமுண்டு. ஆதலால் அவற்றின் அவிவேகத்தாற் றோன்றும் யதேஷ்டாசரணம் சம்பவியாதென்பது அறிவிக்கப்பட்டது.

* ௧௫௭. இங்ஙனம் கூறுதலால் ஞானியின் இரக்கமுடைமை அறிவிக்கப்பட்டதாகலின் தனது நிஷித்த ஆசரணத்தை (விலக்கொழுக்கத்தை)க்கண்டு அவ்வாறு செய்கின்ற ஜனங்களுக்கும் அல்லது தன்னை நிந்திக்கின்ற ஜனங்களுக்கும் நரகமுதலிய துன்பம் உண்டாகும் என்னும் கருணையினாலும் ஞானிக்கு யதேஷ்டாசரணத்தில் பிரவிருத்தி யுண்டாகாதென்று அறிவிக்கப்பட்டது.

௪. சகல விக்ஷேபங்களையும் ஒழித்துப் பரமாநந்த * ௩௫௮. அநுபவத்தில் பற்றுடையவனாயிருக்கின்றானே,

அதனால் அவன் யதேஷ்டாசரணம் செய்கிறதில்லை, ஆனால் "மந்திர முணர்ந்த ஓர் புருடனுக்கு முட்படுக்கையும் துன்பத்தைத் தராதெனின், புஷ்பப்படுக்கை அவனுக்கு எங்ஙனம் துன்பத்தைத் தருவதாகும்." என்னும் நியாயத்தால் உலக சம்ரக்ஷணையின் பொருட்டு மாறான சாஸ்திரத்திற் கூறிய மார்க்கத்தில் மனோவாக்குக் காயங்களைச் செலுத்துகின்றான். உள்ளே அவற்றின் அபிமானத்தைச் செய்கிறதில்லை.

அல்லது வைராக்கிய முதலிய சுபசாதனங்களின் சம்ஸ்காரவடிவமும் பூர்வ புண்ணியத்தின் சம்ஸ்கார வடிவுமாகிய சுபாவத்தினாலும் அவன் வெறிகொண்ட வைஷ்ணவனைப் போலாவது பிராஹ்மணர் முதலியோரது குழந்தைகளைப் போலாவது நிஷித்தாசரணத்தி

* ௩௫௮. இங்ஙனம் கூறுதலால் பகிர்முகமாதற் கேதுவாயிருத்தலின், ஜீவன்முக்தி விலக்ஷணாநந்தத்தின் அநுபவத்திற்கு விரோதியாகிய யதேஷ்டாசரணத்தில் ஞானிக்குப் பிரவிருத்தி சம்பவியாது.

(விலக்கான நடையி)ல் இரான்; நல்லொழுக்கத் திலேயே இருப்பன்.

ஆண்டு இது வித்துவான்களது யதேஷ்டா சரணத்தை நிஷேதிக்கும் யுக்தியோடு கூடிய சாஸ்திர வசனமாம்:—

அதர்மாஜ்ஜாயதே(அ)ஜ்ஞாநம் யதேஷ்டாசர
ணம் தத꞉ | தர்மகார்யே கதம் தஸ்மாத்
த் அதர்மோ விநஶ்யதி ||

இதன் பொருள்:—தீயொழுக்கத்தாலுண்டாகிய சம்ஸ்காரமய பாபவடிவ அதர்மத்தினுல் அறியாமையுண்டாகின்றது. அதாவது காரியாகாரியங்களின் பேதஞானமாகிய விவேகத்தின் அபாவவடிவ அங்குர (முளை) வாயிலாக உற்பத்தியாகிய அவசியம் செய்யத்தக்க காரியத்தை மறத்தல் வடிவினது அல்லது விஷய பரவசத்தன்மை வடிவினது என்னும் பிரமாதம் உண்டாகிறது. அதனுல் யதேஷ்டாசரணம் உண்டாகின்றது ஞானவடிவமான தர்ம காரியம் உளதாக அந்த அதர்மத்தின் காரியமாகிய யதேஷ்டாசரணம் எவ்வாறுளதாகும்? ஆண்டு ஞானத்திற்கு ஏதுவடிவ தர்மம் ஞானவடிவ பலத்தின் திரோதானத்தால் விநாசத்தையடைகின்றது. ஆதலால் ஞானவான்

களுக்கு யதேஷ்டாசரணத்தில் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

அன்றியும் அர்ச்சுனனுக்குக் கொலை மிகுந்த யுத்தத்தில் பிரவிருத்தி யுண்டாகியது எதுவோ அது யதேஷ்டாசரணமன்று; ஆனால் அது க்ஷத்திரியர்களது சுவதர்மமேயாம்.

இவ்வர்த்தத்தில் மற்றும் அநேக விசாரமுண்டு. அது பின் இயற்றப்படும் நூல்களில் எழுதப்படும். நூல் விரியுமென்னும் அச்சத்தால் இங்கு எழுதப்படவில்லை.

௯௩. “[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ”

என்னும் சம்க்ஷேப சாரீரக வாக்கியத்தின் அர்த்தத்தைச் சிஷ்யன் அநுபவ கோசரமாகக் கூறுகின்றான் :— நித்தியபோதவடிவ சேதனத்தில் காரணத்தோடுகூடிய ஜகத்து பாதிதமேயாம்; அதாவது நித்திய நிவிருத்தமேயாம். அங்ஙனமாயினும் மகாவாக்கியத்தினாற் றோன்றும் “யான் பிரஹ்ம”மென்னும் ஞானத்தினால் தோற்றிக்கொண்டிருக்கும் பிரமம் (சத்

தியத்தன்மையின் விளக்கவடிவ வேற்றுத்தன்மை) எதுவோ அது நாசமாகின்றது.

கிருஷ்ணனால் முன்னமே கொல்லப்பட்ட கௌரவகுலம் பின்னர் அர்ச்சுனனாலும் நாசமடைந்தது. அங்ஙனமே குருவின் திருஷ்டியினால் நித்திய நிவிருத்தமாகிய ஜகதது மீண்டும் சிஷ்யனது ஞானவடிவ திருஷ்டியினால் நிவிருத்தியாகின்றது.

கூச. [illegible] ||

என்னும் அபரோக்ஷாநுபூதியினது வாக்கியத்தின் அர்த்தத்தை அநுபவத்தின் விஷயமாக்கிச் சிஷ்யன் கூறுகின்றான்:-என்னால் தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் விவேசனகாலத்தில் ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்திற்கு விரோதமுள்ள தர்மங்களோடு கூடிய உபாதியாகிய வாச்சியபாகத்தை விட்டு அவிரோதியாகிய சேதனவடிவ வாச்சிய பாகத்தைக் கொள்ளுதலாகிய பாகத்தியாகலக்ஷணையினால் ஜடசேதனங்களின் பேதம் (விவேகம்) செய்யப்பட்டது. அதனை இப்போது வீணாய்ச்

செய்யப்பட்டதென்று அறிகின்றேன். கடம் மண்ணின்வடிவமேயாம். அங்ஙனமே எதனால் இந்தத் தேகமுதலிய பிரபஞ்சம் எனக்குச் சித்ரூபமாகவே தோற்றியதோ, அதனால் எனக்கு எதன் கிரகணமும் எதன் நீக்கமும் இல்லை. இதனாலே முன் ஜிஞ்ஞாஸை (ஞான விருப்ப) காலத்தில் ஐந்தாவது உபதேசத்திற் கூறிய தேக ஆத்மாக்களின் பிரமவடிவ முக்கிய அபேதத்தை நீக்குதற்பொருட்டுச் செய்யப்பட்ட ஜடசேதனங்களின் விவேகம் எதுவோ, அது இப்போது ஜடப் பிரபஞ்சத்தின் பாதத்தால் அபேதம்(நித்திய நிவிர்த்தி) தோற்றுதலால் வியர்த்தமாக்கப்பட்டதென்று தோற்றுகிறதென்பது தாற்பரியம்;

௬௫. க. இப்போது சிஷ்யன் முற்கூறிய அர்த்தத்தைச் சுருக்கமாக அநுவதித்துத் தனது ஸ்திதியைக் கூறுகின்றான்:—ஆத்மா நிரவயவமும் நிராகாரமுமா யிருத்தலால் தள்ளுதலில்லாத தாயும் கொள்ளுத லில்லாததாயுமிருக்கின்றது.

௨. மீண்டும் ஆத்மா ஜனனமரணமுதலிய பந்தம் மித்தையாயிருத்தலாலும் தான் (ஆத்மா) நித்தியமுக்தமா யிருத்தலாலும் பந்த மோக்ஷங்க ளில்லாததாயிருக்கிறது.

௩. மீண்டும் ஆத்மா சித்தாம். ஏனெனின்

(௧) ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளும், அவ்வவஸ்தைகளையுடைய எல்லா நாட்களும், அந்த நாட்களையுடைய சித்திரை முதலிய மாதங்களும், அம்மாதங்களையுடைய விபவாதி வருஷங்களும், அவ்வருஷங்களையுடைய சத்திபாதி (கிரேதாதி)யுகங்களும், அந்தயுகங்களையுடைய சுவாயம்புவாதி மநுவந்தரங்களும், அந்த மநுவந்தரங்களையுடைய பிரஹ்மாவின் நாளும், அந்தப் பிரஹ்மாவின் நாட்களையுடைய மாச முதலியவற்றினோடுகூடிய பரார்த்த (பிரஹ்மாவின் ௱ வருஷ) மும்; அங்ஙனமே அவ்விரண்டு பரார்த்தங்களையுடைய வாராக முதலிய கற்பங்களும். அக்கற்பங்களையுடைய இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் காலங்களும், அக்காலத்தில் ஆகாயமுதலிய ஆசிரயத்தோடு கூடிய ஒன்றற்கொன்று விலக்ஷணமான சப்த முதலிய எல்லா விஷயங்களையும் அந்தந்த விலக்ஷண காலங்களையும் எதனால் ஆத்மா பிரகாசிப்பிப்பதாயிருக்கின்றதோ, அதனால் ஆத்மா சுயம்பிரகாசமாம். எதனால் ஆத்மா சுயம்பிரகாசமோ அதனால் ஆத்மாசித்தாம்.

(உ) அல்லது கட மட முதலிய வொன்றற்கொன்று பின்னமான உபாதிகளிலுள்ளதும் ஆகாசம் ஆகாசம் என்று ஒருவடிவமாகத் தோற்றுகின்றதுமாகிய ஒரு ஆகாசம் எதுவோ அதனைப்போலச் சப்தத்தின் ஞானம் ஸ்பரிசத்தின் ஞானம் என்றல் முதலிய வியவகாரத்தில் ஞானம் ஞானம் என்று ஒருவடிவமாகத் தோற்றுகின்ற ஓரே ஞானவடிவஸ்புரண மிருக்கின்றது. சம்வித்வடிவ ஞானம் ஜாக்கிர முதலிய மூன்றவஸ்தை முதலிய எல்லாக் காலங்களிலும் ஒன்றற்கொன்று விலக்ஷணமான எல்லாவிஷயங்களையும் ஒன்றேயாய்ப் பிரகாசிப்பிப்பதா யிருக்கின்றது. அவ்வடிவமாயிருத்தலாலும் ஆத்மா சித்தாம்

(ங) அல்லது, ஆத்மா எதனால் தனது தாதாத்மிய சம்பந்தத்தால் எல்லாவற்றையும் விளக்குவதா யிருத்தலின் எல்லாவற்றிற்கும் சாதகமாயிருக்கின்றதோ, அதனாலும் ஆத்மா சித்தாம்.

௪. மீண்டும் ஆத்மா இந்த (கூறிய) எல்லாக்காலங்களிலும் பரமப் பிரேமைக்கு விஷயமாயும் துக்கசம்பந்த மில்லாததாயு மிருத்தலால் ஆநந்தரூபமாம்.

௫. மீண்டும் ஆத்மா சத்தாம். எதற்குப் பிறப்பிறப்புகளில்லையோ, அது மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததா யிருத்தலின் சத்தெனப் படுகின்றது. ஆத்மாவிற்கு எதனால் ஜந்மநாசங்களில்லையோ, அதனால் மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததா (இருப்பதா) யிருத்தலின் ஆத்மாசத்தாம். அதனைக் காட்டுவாம்:—

சம்வித் (சேதன) வடிவ ஆத்மா.

(க) ஒன்றாயிருத்தலின் ஜடவஸ்துக்களால் அதற்கு ஜந்மநாசங்களின் ஞானம் பொருந்தாது.

(உ) தானாகிய சேதனத்தைத் தீபத்தைப் போலத் தனது சமகாலத்தில் பிரகாசிப்பிப்பதாயிருத்தலாலும், தனது உற்பத்தி நாசகாலங்களில் தனது இன்மை யுண்டாகுதலாலும் ஆத்மாவின் உற்பத்தி நாசங்களின் ஞானம் ஆத்மாவினாலும் பொருந்தாது.

(ங) "அதனைப் பிரகாசிப்பிப்பது வேறு, அதனைப் பிரகாசிப்பிப்பது வேறு" என்பதாக அநவஸ்தைவடிவ தோஷம் வாய்த்தலால் ஆத்மாவையும் அதன் ஜன்ம நாசங்களையும் விளக்

குவதாகிய வேறு சம்வித் (ஞான) வடிவ ஆத்மா சித்திக்கிறதில்லை.

(ச) ஜடவஸ்து விளக்குவ தாகாமையின் ஆத்மாவின் ஜந்மநாசங்களை விளக்குவது ஜடவஸ்து என்பதும் சித்திக்கிறதில்லை. ஆதலால் ஆத்மாவினது ஜன்ம நாசங்களின் அநுபவமில்லை.

(ரு) சுருதிமுதலிய பிரமாணங்களாலும் ஆத்மாவின் ஜன்மநாசங்களின் அபாவம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஆத்மா ஒரே சொப்பிரகாசவடிவமா யிருத்தலால், அதற்கு ஜந்ம நாசங்களில்லை.

[க] எதனால் ஆத்மாவிற்கு ஜந்மநாசங்களில்லையோ, அதனால் பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களின்மையின் முற்கூறிய சிதாநந்த வடிவ ஆத்மா எப்போதும் இருப்பதாயிருக்கின்றது.

[உ] எதனால் ஆத்மா எப்போதும் இருப்பதா யிருக்கின்றதோ அதனால் நித்தியமாம்.

[ங] எதனால் நித்தியமோ அதனால் ஆத்மா சத்தாம்.

(௩) மீண்டும் ஆத்மா வாக்கிற்கும் அத
ால் அறிவிக்கப்பட்ட மனமுதலிய சகல இந்
திரியங்களுக்கும் விஷயமாகாததாம்;

இத்தன்மைய பிரஹ்மத்தினும் வேறாகாத
ஆத்மா எதுவோ அது எனது சொரூபமாம்,
இந்த நிலையினையே யான் சம்பாதித்திருக்கின்
றேன்.

௬௯. [illegible]
[illegible]
[illegible]
[illegible] ||

என்னும் சாஸ்திர வசனத்தின் அர்த்
தத்தை ஸ்மரித்து இப்போது சிஷ்யன் கூறு
கின்றான்:—குரு சாஸ்திரங்களின் உபதேசத்
திற்கு முன் நிஜரூபப் பிரஹ்மம் மிகத் தூர
மாய்த் தோற்றிக் கொண்டிருந்தது. அந்த உவ
மையின்றிய நிஜரூபம் இப்போது குரு சாஸ்
திரங்களின் உபதேசமாகியபின் சமீபத்தி
லிருப்பதாயிற்று.

அப்போது அது அபரோக்ஷமாகுமோ? என்னும் சங்கை உண்டாக மீண்டும் பிரகட (அபரோக்ஷ) மாயிற்று என்று கூறுகின்றான்.

அங்ஙனமாயினும் அது சரீரத்தின் வெளியில் எதிரிடத்தில் அபரோக்ஷமா யிருக்குமே என்னும் சங்கை யுண்டாக அங்குக் கூறுகின்றான்:—

தனது சரீரத்தினுள்ளேயே அபரோக்ஷமாயிற்று. ஏனெனின்,

க. பிரமாதா சேதனத்திற் (சாக்ஷிக்) கும் விஷய சேதன (பிரஹ்ம) த்திற்கும் சரீரத்தினுள் அந்தக்கரண தேசத்திலேயே அபேத முண்டாகுதலாலும்,

உ. பிரமாதாசேதனத்திற்கு விஷய சேதனத்தோடு விருத்தி வாயிலாகவாவது அல்லது நேராகவாவது உண்டாகும் அபேதமே அபரோக்ஷ ஞானத்தின் லக்ஷணமாம். அஃது உண்டாதலாலும்,

சரீரத்தின் உள்ளேயே பிரஹ்மத்தின் அபரோக்ஷஞானம் சொல்லப்பட்டது; அது நலமுடையதாம்.

சரீரத்தினுள் அபரோக்ஷ முண்டாகியும் அது இதுவென்னும் விருத்திக்கு விஷயமான சுகதுக்க முதலியவற்றைப் போலத் தன்னினும் வேறாகியதாய் அபரோக்ஷமா யிருக்குமோ? என்னும் சங்கை யுண்டாக, அதற்கு யான் என்னும் விருத்திக்கு விஷயமாகுதலால் தானேதானும் அபரோக்ஷ மாயிற்று என்று கூறினான்.

௩௭. இப்போது,

“உத்ர்யத்³வி³ வேகதரணேர் ... மாயா நிஶா ஸ்தம்ஹதா | ஜாதாஃப்ருக்த³ வொஸ்ரீஹாமோஹோஜா ஸஹாரீ நக்ஷ³
வராஃ || ஸூத்யாநீகஹாஸவத்³திரிய²
காரோஹபொஹஸ்வொ ஸ்ரீநா ஜந்நியதாஸகா
மதாவஃ க்ஷீணொஜநத்ஸா ரோஃ ||”

என்னும் குவலயாநந்த அலங்கார நூலிற் கூறிய அர்த்தத்தை மனதிற்கொண்டு இட அபரோக்ஷ ஞானத்தைச் சூரியனாக உருவகஞ் செய்து சிஷ்யன் வர்ணிக்கின்றான்.

ச. நிதித்தியாஸனவடிவ அருணோதயத்திற்குப் பின்,

உ. இட அபரோக்ஷஞானவடிவ சூரியோதயத்தினல்,

௩. மாயையில்(தனது அந்தக்கரணதேசத்தில்) உள்ள அஞ்ஞானம்சவடிவ இரவு நாசமாயிற்று.

இதனுனே காரியத்தோடுசமஷ்டியஞ்ஞானவடிவ மாயையின் மித்தியாத்துவம் தோற்றுதலால் பொருளால் அதற்கும் நாசமுண்டாயிற்று என்பது சித்திக்கின்றது.

௪. சித்தென்னும் திருஷ்டாவாகிய சேதனமும் ஜடமென்னும் திருசியப் பிரபஞ்சமுமாகிய அவற்றின் "சத்து சத்தேயாம் அசத்து அசத்தேயாம்" என்னும் இருளுமொளியும் போன்ற பேத (மிக்க விவேக) வடிவ விடியல் உண்டாயிற்று.

௫. தோற்றுகின்ற அசத்துவாதிவடிவநிசாசரர் (பேய் முதலியன) மலத்தைப் புசிக்கின்றனர். (முமுக்ஷுக்களுக்கு கூச்சலிடுவித்தலின்மையால் கூச்சலிடுவதாகிய மலத்தைப் புசிக்கின்றார்கள்.) ஆனல் அவர்களை ஞானத்தினின்றும் ஏமாற்றிக்கொண்டுபோதலாகிய உபாயம் இல்லை.

௬. அஞ்ஞானவடிவ இரவில் முமுக்ஷுக்களாகிய பிரஜைகளை மதாந்திரவடிவ திருடர் முதலியோரி னின்றும் இரக்ஷிப்பவர்களாகிய சுருதி ஸ்மிருதிவடிவ பாதுகாப்பாளர் உறங்கினர்.

அதாவது மீண்டும் இந்த ஞானத்தை இரக்ஷித்தலில் அவர்களது உபயோகமில்லை.

௭. அஞ்ஞானவடிவ இரவில் மிக்க வலிவுடையோராய்ச் சஞ்சரிக்கும் காமாதி சோரர்கள் ஞானமாகிய சூரியன் உதயமாகவே ஓடுங்கினர் (ஒளிந்தனர்).

௮. அஞ்ஞானவடிவ இரவில் விஷயங்களில் வலியப்பிரவிருத்தித்தலாகிய தேஜசுடைய இந்திரியமெனனும் நக்ஷத்திரங்கள் ஞானமுதயமாகவே ஒளிமழுங்கின.

௯. அஞ்ஞானகாலத்தில் காமாதிவிருத்திவடிவ கிரணங்களால் பிரகாசிப்பதும் விஷயங்களில் இராகவடிவ அமுதத்தால் நிறைந்திருத்தலால் பிரமாதியு (சோர்வுடையது) மாகிய மனமென்னும் சந்திரன் ஞானமென்னும் சூரியன் உதிக்கவே மந்தமாயிற்று.

௩௮. இப்போது

"[illegible] ॥"

என்னும் சாஸ்திர வாக்கியத்திற்கூறிய ஈசுவனோடு ஜீவனுக்குண்டாகிய சம்வாதத்தை மனதிற்கொண்டு சிஷ்யன் கூறுகின்றான் :—

௧. பிரஹ்மமாகிய தந்தைக்கும்,

௨. மாயையாகிய தாய்க்கும்,

௩. சிதாபாசமய ஜீவனும் ஈசுவரனுமாகிய இரண்டு புத்திரர்கள் உண்டு அவர்களுள்,

௪. ஈசுவரனாகிய ஜேஷ்ட புத்திரன் பரப்பிரஹ்மமாகிய பிதாவின் சுகவடிவ ராஜ்யாதி தனநிதியை அநுபவிக்கின்றான். சர்வஞ்ஞத் தன்மை முதலியனவாகிய மாயையின் தனத்தைச் சுவாதீனமாக்குதலால் பிரபுவா [ஈசுவர (சமர்த்த) னா] யிருக்கின்றான். என் பொருட்டுக் கர்மாநுசாரமாக நிர்வாகத்திற்கு உபயோகமுள்ள மாயையின் தனத்தினின்றும் விபாகஞ்செய்து,

ரு. "பத்ரம் புஷ்பம் ஃபலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி | ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னாமி ப்ரயதாத்மந: ||

என்பொருட்டு எவன் பத்திரம் புஷ்பம், பலம், ஜலம் என்பவற்றைப் பக்தியினால் கொடுக்கின்றானோ, அந்த நியமிக்கப்பட்ட மனத்தையுடைய பக்தன் பக்தியினாற் கொடுத்த வஸ்துவினை யான் அங்கீகரிக்கின்றேன்" என்றல்முதலிய கீதை முதலியவற்றின் வாக்கியங்களால் என்னிடத்தினின்றும் பிக்ஷை வாங்குகின்றவனாய்,

சா. வேலைக்காரனைப்போல விதி நிஷேதமாகிய சிக்ஷையைச் செய்பவனாயிருக்கின்றான்,

எ. இப்போது நான் குருவென்னும் வக்கீலாகிய தம்மால்,

அ. பாகத்தியாக லக்ஷணையினால் எனது நிஜ வடிவ கூடஸ்த (சாக்ஷியி)னோடு அவரது நிஜவடிவமாகிய பிரஹ்மத்தின் ஒருமைவடிவ நியாயத்தால்,

கூ. ஜயித்தேன் (அபேதபாவமாகிய தோற்றத்தால், பரசுகநிதியின் போக்தாவாய்ச் சுவாதீனஞ் செய்தேன்). சிலவிடத்து வியவகார

காலத்தில் பேதத்தைக் கூறுதல் உண்டாயிருந்தும் லோகதிருஷ்டியினால் லஜ்ஜையுடையவர்களாய், ஒருவருக்கொருவர் சிநேகமுடைய ஸ்திரீ புருஷர்களைப்போல உள்ளே பேதத்தோற்றம் ஒருபோதும் உண்டாகிறதில்லை; அதன் அபேதமே பசி பார முதலிய தோஷமின்றிய புசித்த அன்னத்தினைப்போல பரமாநந்தத்திற் கேதுவாயிருத்தலின்.

அபேதத்தோற்றம் சுகத்தை யுண்டுபண்ணுவதாம், பேதத்தோற்றம் துக்கத்தை யுண்டுபண்ணுவதாம் என்பதில்

“𑌜𑌾𑌤𑍇 𑌸𑌮𑌰𑌸𑌾𑌨𑌨𑍍𑌦𑍇 𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌪𑍍𑌯𑌮𑍃𑌤𑍋𑌪𑌮𑌮𑍍 । 𑌸𑍁𑌹𑍃𑌦𑍋𑌰𑌿𑌵 𑌦𑌮𑍍𑌪𑌤𑍍𑌯𑍋𑌰𑍍𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌃 ॥ 𑌦𑍁𑌃𑌖𑌾𑌯 𑌦𑍍𑌵𑍈𑌤𑌭𑌾𑌵𑍋 𑌹𑌿 𑌸𑍁𑌖𑌾𑌯𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌭𑌾𑌵𑌨𑌾 । 𑌸𑌾𑌰𑌾𑌯𑌾𑌣𑌂 𑌵𑍍𑌯𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌸𑌾𑌕𑍍𑌷𑍇𑌣𑌂 𑌸𑌾𑌵𑌧𑌾𑌨𑌂 ॥

ஜீவாத்ம பரமாத்மாக்களின் சமரசாநந்தமுண்டாகவே, (வியவகார காலத்திற் சொல்மாத்திரமான) துவைதமும் அமுதத்திற்குச் சமானமாம். சிநேகமுள்ள ஸ்திரீ புருஷர்களைப் போல துவைதத்தன்மை துக்கத்தின் பொருட்

டாம்; அத்வைத பாவனை சுகத்தின் பொருட்டாம். எங்ஙனம்; சரீரத்திற்கு வேறாக எடுக்கப்பட்ட அன்னம் எதுவோ அது பாரத்தின் பொருட்டாம். புசித்த (போஜன வாயிலாகச் சரீரத்தோடு அபின்னமாகிய) அன்னம் எதுவோ அது சுகத்தின் பொருட்டாம்." என்னும் யுக்தியோடு கூடிய வேறு சாஸ்திரத்தின் வசனமும் பிரமாணமாம்

௬௬. "ஊஹொஸஹஷிதியாஸிஃ வஃஸர் ஜோவஸீஜநாஜஞெ । ஊகோரொவஹநு தெஷந ஜெரஉிவஹாஉஹாரிணா ॥"

என்னும் மதுசூதன சரஸ்வதிகளாற் சொல்லப்பட்ட வாக்கியார்த்தத்தினை அனுபவத்திலேற்றிச் சிஷ்யன் கூறுகின்றான்:—

ஒருவன் வீட்டில் நிதியானது கல்லினால் மறைக்கப்பட்டுளதாயின், அந்நிதியைச் சித்தர்களது மையினால் அறிந்து அந்தக் கல்லை நீக்க வெளிப்படுகின்றது அப்போது அவனுக்குத் தரித்திரத்தன்மை நீங்கிச் செல்வமுடைமை கிடைக்கின்றது ஆனால் அதன் விசேஷ சுகம் உபயோகத்தினால் உண்டாகின்றது.

அங்ஙனமே ஹரியாகிய பரமேசுவரனிடத்து எனக்கு முன் அஞ்ஞானதசையிலிருந்த உபாசனகாலத்தில் அநாதி (வெகுகாலத்து) "தாஸோஹம் (தாஸன் யான்)" என்னும் புத்தி யுண்டாயிருந்தது. அது கோபிகளினது வஸ்திரத்தைத் திருடுகின்றவராகிய விஷ்ணுவால் கருணையினாலே குரு சாஸ்திர சமாகமத்தை அடைவித்துத் தேகாபிமானத்தைக்குறிப்பிக்கும் * கடுக. "தா" என்னும் கல்லை நீக்குதல் வாயிலாகக் கவரப்பட்டது ஏதனால் இப்போது எனக்கு அநாதிகாலத்தைய ஜீவத்தன்மை வடிவத தரித்திரத்தன்மை நீங்கித் தனது தேகமாகிய வீட்டில் முன்னமே நிலைத்திருந்த ஆத்மாவின் பிரஹ்மத்தன்மைவடிவ தனமுடைமை கிடைத்ததோ; அதனால் இப்பெரிய லாபம் உண்டாயிற்று ஆனால் இதன் விசேஷங்கம் எனக்கு ஞானமுண்டாகியபின் பிரஹ்ம விசாரத்தினால் அந்தர்முகமா (உட்பார்வையா) ய் நிலைத்தலால் உண்டாகும்.

௬௨௦. ஜைஹாஸிரோநோமிநேதோஜ்ஞா நேயாரோத்நிய து ய து ரோநா யாதி கது கது ஸோயம் ||

---

* கடுக. தாஸோஹம் என்பதிலுள்ளது தா, அது நீங்கவே எஞ்சி நிற்பது ஸோஹம் என்பதாம்

தேகாபிமானம் கரைந்து பரமாத்மா விசேஷமாய் அறியப்படவே, எங்கெங்கு மனம்செல்கின்றதோ, அங்கங்கு (சின்மாத்திர வாசனையின் இருப்பால் ஆகாசவடிவ இலக்ஷியத்தில் எறியப்பட்ட பாணத்தைப்போலத் தனது சொரூபம் விளங்குதலால்) சமாதிகளாம். இச்சுலோகத்திற்கு இது இரண்டாவது பொருளாம்:—தேகாபிமானம் கரையாது பரமாத்மாவும் விசேஷமாய் அறியப்படாததாகவே எங்கெங்கு மனம் செல்லுகின்றதோ அங்கங்கு நல்ல ஆதி (மனோதுக்கங்)கள் உள."

இவ்வர்த்தத்தினையே மனதிற் கொண்டு சிஷ்யன் கூறுகின்றான்:—ஸ்தூல தேகத்தில் அகந்தையின் அத்தியாசத்தை முன்னிட்டு இந்திரியம் பிராணன் மனம் முதலியவற்றில் அகந்தையின் அத்தியாசம் உண்டாகின்றது. அகந்தையின் அத்தியாசத்தை முன்னிட்டு இதந்தையின் அத்தியாசம் உண்டாகின்றது. அதன்கண்ணும் பெயரின் அத்தியாசத்தை முன்னிட்டு வடிவத்தின் அத்தியாசம் உண்டாகின்றது. இது அநுபவ சித்தமாம். எதனால் வித்துவானாகிய எனக்குத் தேகத்தில் யான் என்னும் அபிமான வடிவ அகந்தையின் அத்தியாசம் நீங்கியதோ, அதனால் இந்திரிய முதலிய

சங்காதத்தில் அகந்தையும் வெளிஜக (நாமரூப) த்தில் இதந்தையுமாகிய இவற்றின் அத்தியாசம் நீங்கியது. இதனாலேயே அதன் கண்ணடங்கிய வீடு முதலியவற்றில் எனதெனுந் தன்மை முதலியவற்றின் அத்தியாசமும் நீங்கியது [அறியப்பட்ட கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பம் பிம்பத்தின் சந்நிதியாகிய உபாதியின் பலத்தால் விளங்குவதுபோல பிராரத்தமாகிய உபாதியின் பலத்தால் பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் பான (விளக்க) மும் உண்டாகின்றது. அதனால் அதில் சத்தியத்தன்மையின் புத்தி உண்டாகிறதில்லை] சத்தையின் விளக்கத்தால் பிரஹ்மம் நிஜரூபமாக விளங்குகின்றது. ஆதலால் அப்பிரமாதியா (சோர்வின்றியவனா) கிய வித்வானுக்கு வியவகாரத்திலும் எப்போதும் சமாதி யிருக்கின்றது. அவனினும் மாறுபட்ட அவித்வானுக்கு அத்தியாசத்தோடு நிஜரூபப் பிரஹ்மம் விளங்காமையால் எப்போதும் விக்ஷேபவடிவ் ஆதி (மனோதுக்கம்) இருக்கின்றது.

க௦க. ஸஹங்காரவியோகம் ஸுத்ருசோ

ஸர்வம் த்ருச்யம் | உத்பத்திஸ்தரேந

நேதம் நாஹம் நசைதன்யம் ||

என்னும் சுலோகத்தின் அர்த்தத்தை மன திற்கொண்டு சிஷ்யன் கூறுகின்றான்:—ஆத்மா வாகிய பதிக்குப் புத்தியென்பது பத்தினி யாம். அந்த ஆத்மா அஞ்ஞானமாகிய நித் திரையில் அநாதிகாலமாகத் தூங்கிக்கொண்டி ருக்கின்றது. புத்தியானது அகங்கார (தேகா பிமான) வடிவ ஜார (வியபிசார)த்தினால் கெட் டது. அதனால் ஜகத்துவடிவ புத்திரனைப் பெற் றாள். பின்னர் எப்போது புத்தியானவள் சத் சங்கமென்னும் தோழிகளின் உபதேசத்தால் ஆத்மாவை விழிப்பிக் (அதன் ஞானத்தைச் சம்பாதிக்) கின்றாளோ, அப்போது புத்தியை நோக்கி அகங்காரமானது "தூங்குகின்றவனை எழுப்பாதே. ஏனெனின், இப்பரமாநந்த வடி வம் விழிக்கவே நீ இருக்கமாட்டாய்; நானும் இருக்கமாட்டேன்; ஜகத்துமிராது. எல்லா வற்றிற்கும் அஞ்ஞானவடிவ மூலத்தோடு நீங் குதல்வடிவ பாதமுண்டாகும்" என்று கூறி யது. என்றாலும் நற்குலத்துப் பெண்ணைப் போல் உத்தம சம்ஸ்காரமுடையவளாகிய புத் தி பாதவடிவப் பிராயச்சித்தத்தின் பொருட்டு அவனை எழுப்புகிறாள் என்பதாம்.

௯0௨. இப்போது ஆத்மாவாகிய ராஜா சம்சாரமாகிய தேசாந்தரத்தில் போகுதல் வரு

தலாகிய யாத்திரைச் சமயத்தில் புத்திவடிவ தாசியோடு தாதாத்மிய அத்தியாசவடிவப் பிரீதியைச் செய்து, அவளை மகாராணியென்று கற்பித்துச் சரீரவடிவ தனது நகரத்தின் இருதயவடிவ அந்தப்புரத்தில் ஸ்தாபித்தார். ஆனால் ஆண்டு அவள் சோகமுடையவளானாள். அவளது சோகநீக்கத்தின் பொருட்டு அநேக விதமான மதவாதிக்குருக்களாகிய வைத்தியர்களைக் கேட்டான். என்றாலும் அவர்கள் அவளது வெளிவிருத்தியாகிய நாடியில் ரோகத்தைக் காணுமையால் சோகத்தைக் கெடுக்கும் உபதேசவடிவ ஔஷதத்தைக் கொடுக்கவில்லை. இவ்வாறு செய்துகொண்டிருக்க எப்போது பிரஹ்மநிஷ்ட குருவாகிய ஓர் சாமர்த்திய வைத்தியர் கிடைத்தாரோ, அப்போது அவளை வினவுதல்வாயிலாக ஜகத்துவடிவ சுவர்ணகாரனை தனது பிரியதமன் (அதிப்பிரியன்) விரும்பியபடி கிடையாமையாகிய வியோகத்தாற் பிறந்த சோகமாகிய நிமித்தத்தையறிந்து, அவளை அத்தியாரோபவாயிலாகச் சமீபத்திற் கொண்டுவந்து பேதஞானமாகிய விவேககாலத்தில் இரண்டாவது வடிவத்தன்மையாக ஆத்மாவாகிய ராஜாவினிடத்தில் ஸ்தாபித்தார். பின் அவளுக்குச் சோபனுத்

தியாச (இரமணீயத்தன்மை) வடிவ இரக்தத்தைக்கெடுக்கும் தோஷதிருஷ்டியாகிய இரசத்தை நாடோறும் பருகுவித்து, அதில் விரசத்தன்மைவடிவ விரூபத்தன்மையைச் சம்பாதித்தல்வாயிலாகப் புத்தியாகிய தாசிக்கு வைராக்கியத்தைச் சம்பாதித்து ஆத்மாவாகிய ராஜாவினிடத்துப் பிரீதியைப் பெருகச் செய்தார். அப்போது மித்தியாத்தன்மை யுணர்ச்சிவடிவத் திட வைராக்கியத்தை யுண்டுபண்ணும் அதன் (ஜகத்துவடிவ சுவர்ணகாரனது) நாசம் (பாதம்) உண்டாயிற்று. இவ்வாறு புத்திவடிவ தாசியானவள் நாநா விஷயமயமான ஜகத்தென்னும் சுவர்ணகாரனிடத்தில் (கலத்தலைச் செய்தற்குக் கூடாத தனது வியபிசாரமுள்ள அன்பனிடத்தில்) தோஷதிருஷ்டியினுற் றோன்றியதும் மித்தியாத்தன்மையுணர்ச்சியாற் றோன்றியதுமான வைராக்கியத்தைச் சம்பாதித்து, நித்தியப் பிராப்தமான ஆத்மாவென்னும் ராஜாவினிடத்துப் • பரம (தடையின்றிய) பிரீதியைச் செய்து, சர்வ சோகங்களின் நிவிருத்தி பூர்வகமான பரமாநந்தத்தை யடைந்தாள். அதனுல் அவளது அத்தியாசத்தால் சோகமுடையவனைப் போனிருந்த ஆத்மாவாகிய ராஜாவும் சோகமின்

றியவனும் ஆநந்தவடிவனுமாய் எப்படியோ அப்படியே தோற்றினன்'' என்னும் உருவகத்தைச் சிஷ்யன் ஸ்மரித்துச் சொன்னன்.

௧௦௩. நிர்தோஷோ நிஶ்சலோ நாத: ஸதோஷா சஞ்சலா ப்ரியா | [illegible] நூநம் ரஸவத்தா பவிஷ்யதி ||௧|| [illegible] ||௨.||

என்னும் இரண்டு சுலோகங்களின் அர்த்தத்தைப் புத்தியிற்கொண்டு சிஷ்யன் கூறுகின்றான்:— ஆத்மாவாகிய நாதன் (பதி) நிர்த்தோஷமும்(அவ்வியபிசாரியும்)நிச்சலமுமா (அவிகாரியுமா)யிருக்கின்ருன். புத்தியென்னும் ஸ்திரீயானவள் வியபிசாராதிதோஷமுடையவளும் விகாரியுமாயிருக்கின்ருள். இந்தத் தம்பதி (ஸ்திரீ புருஷர்)களின் நிச்சயம் ரசபங்கமாகும்; வெளிப்பார்வையினை யுடைய புத்தியாகிய ஸ்திரீக்கு ஆத்மாவினிடத்துப் பிரியமின்மையால். ஆனல் எப்படியோ அப்படி (விக்ஷேபத்தோடு) வியவகாரம் நடந்துகொண் டிருந்தது. எப்போது குருவாகிய பரமமித்திரன் வாயிலாக அந்த ஸ்திரீயை ஆத்மாவி (தன்னி)

னும் வேற்றுத்தன்மையினலும் திருசியத்தன்மையாகிய ஜடமெனும் அநித்தியத்தன்மை வடிவ தோஷத்தோடுகூடிய தன்மையினலும் அறிந்தானே, அப்போது அவள் கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மை முதலிய தனது தர்மமான தன்மைகளோடு தாதாத்மிய அத்தியாசமாகிய தனது முகத்தைக் காட்டுகிறதில்லை. யாதொரு அந்தப் புத்தியுண்டோ அவள் மிக உத்தம சம்ஸ்காரமாகிய லஜ்ஜையோடுகூடியவளாகுங் காலத்து நிர்விகற்பசமாதியாகிய ஆநந்தசாகரத்தில் மூழ்கி இறக்கவும் செய்கின்றாள்.

௧௦௪. யெநவெதயதெவிஶ்வம் விஶ்வம்வெதயதெநயம் | யொஜாமதி-ஃ ஶயாநெநஃவஸீ ஞாயம் தம் வெஷ வெஷ வஸ: ||

என்னும் ஸ்ரீமத் பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்திலுள்ள மநுஸ்துதியினது வாக்கியத்தின் பொருளைச் சிஷ்யன் அநுபவகோசரமாக்கிக் கூறுகின்றான்:—எதனால் (எந்தச் சேதனமாகிய பரமாத்மாவினால்) விசுவம் (ஜகத்து) சேதனத்தையடைகின்றதோ (சேஷ்டை செய்கின்றதோ), எதனை (எவ்வசலத்தை) விசுவம் சேதனத்தோடு (சேஷ்டையோடு) கூடிய

தாகச் செய்கிறதில்லையோ, இது (விசுவம்) தூங்க எது விழிக்கின்றதோ, அதனை இவன் (சங்காதவடிவ புருஷன்) அறிகிறதில்லை. அது [அவனை] அறிகின்றது.

௧௦௫ [illegible]
[illegible] ||
[illegible]
[illegible] ||

என்னும் சுலோகத்தின் அர்த்தத்தை மனதிற்கொண்டு சிஷ்யன் கூறுகின்றான்:-ஐயனே! சமாதியினின்றும் விழித்தகாலத்தில் பரப்பிரஹ்மமாகிய என்னிடத்தில் சொப்பனம் இந்திரஜாலம் கானற்சலம் என்பவற்றிற்குச் சமமாக அவபாசமுடைய மோக (அவிவேக) த்தாற் றோன்றிய லோகங்கள் (சராசரமாகிய ஜீவர்களும் அவற்றின் ஆசிரயமாகிய பதினான்கு புவனங்களும் அவற்றின் போக்கியமான அன்னாதிகளும் எல்லாவற்றிற்கும் காரணமான ஸ்தூலசூக்ஷ்ம பூதங்களும்) தோற்றுகின்றன. ஆனால் இந்தப் பரிபூரண விசித்திர (அலௌகிக) பிரத்தியக் (உள்) சுகத்தின் சமுத்திரமா

கிய பரமாமிர்தசம்பந்தமுள்ள சித்தவிருத்தி யில் (உள்நாட்டத்தில்) அவ்வுலகங்கள் இருப்ப தில்லை.

கoசுா. நிரதிஶயஸுகாப்தாவாத்மரூபே ஸமஸ்தே
பரிபஶ்யஸி | ஜகதிதமவிவேகாத்ருஜ்ஜுஸர்ப்பஸ்ரஜீவ ||
க்வ கதமிதி நாதமேதஜ்ஜாநாமி ஸம்ப்ரதியாதம்
வரபோதவிமலேப்யோ ஜாநாதி தந்தம் நஜாநே ||

நிரதிசய (எல்லாவற்றினும் அதிக) சுகசமுத்திரத்தில் இவ்வெல்லா ஜகத்தும் இரஜ்ஜுவில் மாலையையும் சர்ப்பத்தையும்போல அவிவேகத்தினால் எவ்வாறு உண்டாயிருக்கின்றது? இப்போது மேலாகிய விமலபோதம் உண்டாகவே அது எங்கு மறைந்தது? [அல்லது கேசிகராவது சுருதியாவது எங்கே போயிற்று?] என்பதை யான் அறியேன்.

கoஎ. "ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ | நத்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி ||"

சாத்துவீக விருத்திகளின் சமூகமாகிய பிரகாச (சத்துவகுண) த்தையும் ராஜச விரு

த்திகளின் சமூகமாகிய பிரவிருத்தியை (ரஜோ குணத்தை) யும் தாமச விருத்திகளின் சமூக மாகிய மோக (தமோகுண) த்தையும் (இவற்றி னுள்) செவ்வையாகப் பிரவிருத்தித்தவற்றின் (ரஜோதமோ பரிணாமங்களின்)கண் துவேஷஞ் செய்கிறதில்லை. நிவிருத்தியாகியவற்றின் (சத் துவகுண பரிணாமங்களின்) கண் விருப்பஞ் செய்கிறதில்லை. [இவை முதலிய லக்ஷணங்க ளோடு கூடியவன் எவனோ அவன் குணாதீத னெனப்படுகின்றான்.] என்னும் இவை முதலிய கீதையின் பதினான்காவது அத்தியாயத்திற் கூறிய குணாதீதனது லக்ஷணங்களைத் தன்னி டத்து நிகழச்செய்து இப்போது சிஷ்யன் கூறு கின்றான்:— பிரகாசம் பிரவிருத்தி, மோகமெனு குணங்கள் மூன்றும். அவற்றுள் பிரவிருத் தித்த காமக்குரோதாதி வடிவங்களும் நித்தி ரை சோம்பல் பிரமாதம்(சோர்வு)இடம்பம்முத லியனவுமாகிய ரஜோ தமோ குணங்களின் பரி ணாமங்களை நான் துவேஷிக்கிறதில்லை; அவற் றால் சாக்ஷியாகிய எனக்குக் கேடின்மையால் நிவிருத்தியாகிய சமதம முதலிய சத்துவகுண பரிணாமங்களின் இச்சையும் எனக்கில்லை; அவ ற்றால் சாக்ஷியாகிய எனக்கு இலாபமின்மை யால்.

க௦அ. பிராஹ்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், அதிசூத்திரன் முதலிய சகல ஜனங்களிடத்தும் தேகமுதலிய சங்காதங்களின் அபிமானமின்றி முன்னரே சாமானியமாக "அகம் (யான்)" என்னும் பிரத்தியயம் (சப்தமும் ஞானமும்) உண்டாகின்றது. அதற்கு விஷய மாகுதலாற் பெறப்பட்ட சித்து (சைதன்யம்) எதுவோ அது எவனுக்குப் பரோக்ஷமாகும்? ஒருவனுக்கும் ஆகாது. எல்லோருக்கும் எப்போதும் அபரோக்ஷமேயாம். ஆதலால் அறியப்படாத (எந்த ஞானத்திற்கும் விஷயமாகாத) தன்மையினதாயிருக்கினும் அபரோக்ஷமாயிருத்தலால் சுவப்பிரகாசமா யிருக்கின்றது. இதனுனே நான் "அறியப்படாத தன்மையினதாய் நித்திய அபரோக்ஷமாம்" என்னும் லக்ஷணமுடைய சுயம்பிரகாசனாயிருக்கின்றேன் என்று நான் தமது கிருபையினுல் நிச்சயஞ் செய்தேன்.

க௦௯. ஓர் ராஜாவினிடத்து நித்தியம் கதைசெய்யும் அஞ்ஞானியாகிய பண்டிதரை மந்திரியின் பிரேரணையால் இராஜ சபையில் வந்த ஓர் பண்டிதர் க. பரமேசுவரன் எங்கிருக்கின்றார்? உ. பரமேசுவரன் என்ன செய்கின்றார்? ௩. பரமேசுவரன் என்ன புசிக்கின்றார்.

௪. பரமேசுவரனது முகம் எந்தத் திசையை நோக்கி இருக்கின்றது? என்று நான்கு பிரசினஞ் செய்தார்.

அப்போது அப்பண்டிதர் உத்தரம் கொடுக்கவில்லை. ஆனால் "இங்கு கதையின் தொடர்பு ஆகவேண்டி யிருக்கின்றது. ஆதலால் இப்போது உத்தரம் கொடுக்கவேண்டிய அவசரமில்லை. நாளை ஒருமணி முன்னமே வந்து இவற்றிற்கு விடை கொடுப்பாம்" என்றுகூறிக்கதையைச் செய்து வீட்டிற்குச் சென்று தனது புத்திரனை நோக்கி "அப்பண்டிதாற் செய்யப்பட்ட பிரசினங்களுக்கு உத்தரம் என்னால் கொடுக்கப்படமாட்டாது உத்தரம் கொடாவிட்டால் எனது பிரதிஷ்டைக்குப் பங்கமுண்டாகும். ஆதலால் ஒரு ரூபாய்க்கு அபினி மருந்து வாங்கிவா. நான் அதனைத் தின்று இறக்கின்றேன்" என்று சொன்னான். இதனைக் கேட்டு ஞானநிஷ்டனாகிய அவனது புத்திரன் "இவற்றிற்கு உத்திரமோ தங்கள் பாலகனாகிய யான் சொல்லக்கூடும்" என, அப்போது அவன் இறக்கவில்லை. பின்னர் மறுநாளில் அப்பண்டிதரும் இப்பண்டிதரும் கதைக்கு ஒருமணி நேரம் முன் சிவிகையில் உட்கார்ந்து இராஜாவினிடத்து வந்தார்கள்.

அப்போது இராஜாவின் பண்டிதர் "இப் பிரசினங்களுக்கு விடை என் குமாரனும் கொடுக்கக்கூடும்" என்றுசொல்ல, அதனைக்கேட்டு ராஜா பல்லக்கனுப்பி அவரதுபுத்திரனை அழைபித்து உத்தமாசனத்தில் உட்கார வைத்துக் கேட்டார். அப்போது அவன் சொன்னது:—

க. ஒரு ஜலநிரப்பிய குடத்தை அழைப்பியுங்கள் என அதை அழைப்பித்தான். அதில் ஒருசேர் கற்கண்டைப் போடுங்களெனப் போட்டான் கற்கண்டு கரைய இந்த ஜலத்தில் கற்கண்டு எங்கே இருக்கின்றதென்று கேட்டான், அப்போது இராஜா எல்லாவிடத்துமிருக்கின்றதென்றான். பண்டிதரின் புத்திரர் இவ்வாறு பரமேசுவரன் சகல ஜகத்திலும் எங்குமாயிருக்கின்றார் என்றார். இது முதற் பிரசினத்திற்குத்தரமாயிற்று.

உ. (க) பின் பண்டிதரின் புத்திரர் "அரசனே தாம் ஒரு கடிகை நேரம் ராஜ்ஜியாதிகாரத்தைவிட்டு என்னிடம் கொடுங்கள்" என்றார், அதனைக்கேட்டு ராஜா அப்படியே செய்தார் அப்போது பண்டிதரின் புத்திரர் தாம் ராஜசிங்காசனத்தில் ஏறி ராஜாவைச் சிறைப் படுத்தினர். சிறைப்படுத்தி "எப்படி வேலைக் காரனாகிய யான் ஒரு கணத்தில் ராஜாவா

னேறே, ராஜாவாகியதாம் ஒரு கணத்தில் அடிமையானீரோ, அதுபோலச் சகுண வடிவத்தாற் பரமேசுவரன் கணத்தில் ஏழையை ராஜாவாகவேனும் ஸ்ரீமானுகவேனும் செய்கின்றார். இராஜாவையாயினும் ஸ்ரீமானையாயினும் ஏழையாக்குகின்றார்." என்று கூறி மீண்டும் இராஜாவைத் தனது பதத்தில் நிறுத்தினார்.

(உ) அல்லது எங்ஙனம் ராஜாதான் அகர்த்தாவாயிருக்க, அவர்மந்திரி முதலியோர் யுத்தமும் பிரஜையைப் பாதுகாத்தல் முதலியனவுமாகிய காரியங்களைச் செய்தபோதிலும் எல்லாச் செய்கைகளின் ஆரோபமும்இராவினிடத்துண்டாகின்றதோ, அங்ஙனமே நிர்க்குண வடிவமாகப் பரமேசுவரன் தான் உற்பத்திமுதலிய காரியங்களைச் செய்யாதவராயினும் மாயை முதலியவற்றாற் செய்யப்படும் உற்பத்தி முதயலிய காரியங்களின் ஆரோபம் அவரிடத்திற் செய்யப்படுகின்றது.

(௩) ராஜாவோ தான் செய்கிறதில்லை. ஆனால் சேவகர்களைக்கொண்டு கிரியைகளைச் செய்விக்கின்றார் இதனால் விகாரியாவரென்னும் அருசியினால் வேறு திருஷ்டாந்தம் சொல்லப் படுகின்றது :—

அல்லது எங்ஙனம் பாதரால் இராஜ்ஜியபரி பாலனுதிகாரியங்கள் செய்யப்படினும், "இராமர் பாதுகை இராஜ்ஜியாதிகளைச் செய்கின்றது" என்று இராமர் பாதுகையில் ஆரோபம் உண்டாயினதோ, அங்ஙனமே மாயை (பிரகிருதி) யினுல் சிருஷ்டி முதலிய காரியமுண்டாகியும் பிரஹ்மத்தில் அதன் ஆரோபமுண்டாகின்றது, அல்லது * சமகத்தைப்போலச் செய்கின்றது. இவ்வாறு நிர்க்குண வடிவத்தாற் பரமேசுவரன் செய்கின்றுர் என்பது உபசாரமாத்திரமாம். இது இரணடாவது பிரசினத்தின் உத்தரம்.

௩. எங்ஙனம் சோபாதிக (கட்டை முதலிய உபாதிகளில் ஏறியுள்ள) அக்கினி ஓமிக்கப்பட்ட (ஓமம் செய்யப்பட்ட) திரவிய முதலியவற்றை புசிப்பதாயினும் நிருபாதிக (மகாதேயு) வடிவத்தால் அக்கினி அபோக்தாவாகின்றதோ, அங்ஙனமே சந்நியாசி சாது பிராஹ்மணன் பசியால் வருந்துவோன் என்பவரிடத்து ஈசுவரார்ப்பண புத்தியாகக் கொடுக்கப்பட்ட போஜனத்தை விராட்டு முதலிய சோபாதிக (சகுண) வடிவத்தாற் பரமேசுவரன் புசிக்கின்றுர். நிருபாதிக (நிர்க்குண) வடிவத்தால்

அவர் அபோக்தாவா யிருக்கின்றார். இது மூன்றாவது பிரசினத்தின் உத்தரம்.

௪. தீவர்த்தி செய்வித்து அதனைக் கொளுத்தச் செய்து பண்டிதரின் புத்திரர் "இதன் (தீவர்த்தியின்) முகம் எந்தத்திசையை நோக்கி இருக்கின்றது" என்று கேட்டார். அப்போது எல்லோரும் எல்லாத் திசையையும் நோக்கி இருக்கின்றதெனப் பண்டித புத்திரர் "அங்ஙனமே பரமேசுவரனும் எல்லாத் திக்கினையும் நோக்கி யிருக்கின்றனர். உண்மையில் முகமின்றியவராவர்" என்றார். இது நான்காவது பிரசினத்தின் உத்தரம்.

இப்பிரசங்கத்தை மனதிற்கொண்டு சிஷ்யன் மேற்கூறிய லக்ஷணமுடைய பரமேசுவரன் யான் என்றான்.

௧௧௦. ஶூ௨ள ஓ௨ஹூ௨ந~பெ௦யவிஒொக்ஷ ௨ஸ௨ஷீ: ஒ௨ஷூ௨தெ௦வாஉ௨நா ஹ~வ௨நாஹியா ௨நா | ஊ௨த௮௨ாஷிகா ஷூிதிஸிய௦ஷி ஒஷா ஷூ திஷ்௦ ஸூவ௮ாயிகா ஶ~ஹ௨ஶெ௨ஜ௨ொநாஷீ ௨தவ ||

என்னும் வாசிஷ்ட சுலோகத்தின் அபிப்பிராயத்தைச் சிஷ்யன் மனதிற்கொண்டு கூறு

கின்றான் :—ஆதியில் மனம் (எழும்புதல்) உண்டாயிற்று. அதன் பின் பந்தமோக்ஷங்களின் திருஷ்டி உண்டாயிற்று. பின்னர்ப் பந்ததிருஷ்டியிலடங்கிய பதினான்குபுவனமென்னும் பிரபஞ்ச சிருஷ்டி யுண்டாயிற்று. இவை முதலிய சிருஷ்டியின் ஸ்திதி நல்ல குழந்தைகளின் பொருட்டுத் தாதி சொன்ன கதையினைப்போலப் பிரதிஷ்டையை (கேட்போனது சித்தத்திற் பதிவை) அடைந்திருக்கின்றது. எங்ஙனம் ஓர் தாதியானவள் அழுகின்ற குழந்தைக்கு விநோதமாக அப்பா யானுனக்கு ஓர்கதை சொல்லுகின்றேன் கேள்:— " ஒரு சூநியநகரமிருந்தது. அதில் மூன்று அழகிய ராஜ குமாரர்கள் இருந்தார்கள். அவர்களில் இருவர் பிறப்பையடையவில்லை. ஒருவனோ கர்ப்பத்திலும் வரவில்லை. அவ்விராஜ குமாரர்கள் வேட்டையாடினார்கள். ஆகாயத்தில் பழுத்தவிருக்ஷங்களைக் கண்டு அவற்றின் கீழ் உட்கார்ந்தார்கள். அவ் விருக்ஷங்கள் எப்படிப்பட்டவையெனின், இரண்டோ முளைக்கவுமில்லை. ஒன்றற்கு வித்துமில்லாதிருந்தது. சுவர்க்கபரியந்தம் உயர்ந்துள்ளனவாம்" என்று இவ்வாறு சொன்னாள். (வாசிஷ்டத்திற்கூறிய) இவை முதலிய கதையைக்கேட்டு அந்தப்பாலன் விசாரமின்றிய புத்

தியினால் நிச்சயத்தை யடைந்தான். அங்ஙனமே சுருதியானது இவ்வஞ்ஞானிகளுக்கு விஷய நோக்காகிய அழுதலை ஒழித்தற்பொருட்டு முற்கூறிய (மனமுதலிய) ஆகாயாதி சிருஷ்டி அஞ்ஞானியுடைய சித்தத்தில் முற்கூறிய இராஜகுமாரர்களது கதையைப் போலப் பிராந்தியினால் தோற்றுகின்றது. அதன் கிரமத்தைக் கூறு (அநுவதிக்) கின்றது அதனைக் கேட்டு இவ்வஞ்ஞானிகள் சத்தியமாக நிச்சயம் பெறுகின்றார்கள். ஆனால் அந்தச் சுருதிக்குச் சிருஷ்டியைக் கூறுதலில் தாற்பரியமில்லை; இவனது சித்தத்திலுள்ள ஜகத்தின் சத்தியத் தன்மையை நிவிருத்தித்தற் பொருட்டு எந்தெந்தவிதமாக வேனும், சிருஷ்டியை ஆரோபித்து அதன் அர்த்தத்தை விசாரித்தலால் சகஜமாய் அபவாதம் செய்வித்தலால் அத்வைத தத்துவத்தை அறிவித்தலில் தாற்பரியமாம்.

௧௧௫. இப்போது ஸ்ரீ பஞ்சதசியின் கூடஸ்ததீபத்திற் கூறிய தேகத்தினுள் கூடஸ்த சிதாபாசர்களின் பேதத்தையறிந்து, கூடஸ்த (சாக்ஷி) சொரூபத்தின் போதம் தனக்குச் சித்தித்ததென்று சூசிப்பித்தற் பொருட்டுச் சிஷ்யன் இவை கூறுகின்றான்:—

ஆகாயத்துள்ள சூரியனால் பிரகாசிக்கப்பட்ட சுவரில் எங்ஙனம் கண்ணாடியின் சூரியனொளி (வெயிலில் வைக்கப்பட்ட கண்ணாடியிலுள்ள சூரியனது பிரதிபிம்பத்தின் பிரகாசம்) உண்டாகின்றதோ, அங்ஙனமே சாக்ஷியினால் (கூடஸ்த சேதனத்தால்) பிரகாசிக்கப்பட்ட தேகத்தின் புத்தியிலுள்ள சிதாபாசனால் விசேஷப் பிரகாசம் உண்டாகின்றது. அநேக கண்ணாடியிலுள்ள சூரியனது சுவரின்கண்படும் அநேக ஒளிகளின், சந்தியிலும் சகல கண்ணாடிகளின் அபாவகாலத்திலும் ஆகாயத்துள்ள சூரியனது சாமானியப் பிரகாசம் உண்டாகின்றது. அதுபோல ஜாக்கிர சொப்பனங்களில் விருத்திகளின் சந்திகளிலும் சுழுத்தியில் சகல விருத்திகளின் இன்மையிலும் இடைவிடாது கூடஸ்தனாகிய எனது சாமானியப் பிரகாசம் இருக்கின்றது.

இப்போது கூடஸ்ததீபத்திற் கூறியதாகிய தேகத்தின் வெளியில் சிதாபாச பிரஹ்மசேதனங்களின் விவேகமும் எனக்குச் சித்தித்தது என்பதைச் சூசிப்பித்தற் பொருட்டுச் சிஷ்யன் கூறுகின்றான்:-கடாகாரமாகிய புத்தியில் உள்ள சிதாபாசன் கடத்தினையே அவபாசம் (இது குடமென்று பிரகாசம்) செய்கின்றான். கடத்

தின் ஞாதத்தன்மையினையும் அஞ்ஞாதத்தன்மையினையுமே பிரஹ்மம் (வெளிசேதனம்) பிரகாசிக்கின்றது.

அதாவது கடவடிவபுத்தி உதிக்குங்காலத்துப் புத்தியிலுள்ள சிதாபாசன் (கற்பிதவிசேஷ சைதன்யம்) இது கடம் என்று கடமாத்திரத்தைப் பிரகாசிக் (அறி) கின்றது.

கடாகாரபுத்தி உதயமாவதற்கு முன் கடத்திலிருந்த "கடத்தை நான் அறியேன்" என்னும் அநுபவத்திற்கு விஷயமாகும் அஞ்ஞாதத்தன்மையை அஞ்ஞானவடிவ விசேஷணத்தோடு "கடத்தை யான் அறியேன்" என்பதாகவே பிரஹ்ம சைதன்யம் பிரகாசிக்கின்றது.

கடாகாரபுத்தி உதயமாகியபின் கடத்தில் "கடத்தை யான் அறிகின்றேன்" என்னும் அநுபவத்திற்கு விஷயமான எந்த ஞாதத்தன்மை உண்டாயிருக்கின்றதோ, அதனோடு கடவடிவ ஞேயத்தினையும், யான் என்னும் சொல்லிற்குப் பொருளாகிய புத்தியிலுள்ள சிதாபாசவடிவ ஞாதாவையும், அதன் ஞானவடிவ விசேஷணத்தையும் "கடத்தை யான் அறிகின்றேன்" என்பதாகவே பிரஹ்மசேத

னம் பிரகாசிக்கின்றது. கடாகார விருத்தியி லுள்ள சேதனம் சாக்ஷியாம். அதனால் திரிபுடியின் (ஞாதா ஞான ஞேயங்களின்) பிரகாசம் சம்பவிக்கின்றது. என்றாலும் வெண்மையான ககரமென்னும் எழுத்து வெண்மைக் காகிதத்தில் சொன்மாத்திரம் பேதமா யிருப்பது போலச் சாக்ஷிக்கும் பிரஹ்மத்திற்கும் சொன்மாத்திரம் பேதமாம். ஆதலால் இங்குச் சாக்ஷியே பிரஹ்மசப்தத்தாற் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனாலே அந்தச் சாமானியசேதனவடிவப் பிரஹ்மம் கடாகாசத்தினும் மகாகாசம் பின்னமாகாதது போலச் சாமானிய சேதனவடிவமேயான; கூடஸ்தனாகிய என்னினும் வேறன்று. ஆதலால் "யான் பிரஹ்மம்" என்பது அவ்வாறு சொல்லுதலின் இரகசிய அபிப்பிராயமாம்.

௧௧௨. மீண்டும் பிரகாசவடிவத் தன்மையாக ஆத்மாவின் சொரூபத்தைச் சிஷ்யன் கூறுகின்றான்:-சரீரமாகிய நிருத்தியசாலையில் சிதாபாசவடிவ ஜீவன் இராஜன் அவனிடத்து மனமென்பது மந்திரி. பஞ்சப்பிராணன்கள் வேலையாட்கள். சப்தமுதலிய ஐந்து விஷயங்களும் சபையினர். சுரோத்திர முதலிய பத்து இந்திரியங்களும் வாத்தியகாரர். புத்தி கூத்தா

டிச்சி. சாக்ஷி (பிரத்தியகாத்மா) தீபம். அவை யாவும் இதன் சந்நிதியிலிருக்கின்றன. மீண்டும் அது ஜாக்கிர சொப்பனங்களில் இவை யாவும் இருக்கினும் அப்போதும் பிரகாசிக்கின்றது. சுழுத்தியில் இவை யாவும் இல்லையாயின், அப்போது அதனை (இன்மையை) யும் இருந்தபடியே பிரகாசிக்கின்றது. அதுதான் யான். இது ஸ்ரீ பஞ்சதசியின் நாடகதீபத்திற் கூறிய உருவகமாம்.

பல துளைகளோடுகூடிய கடத்தின் உள்ளிருக்கும் தீபத்தினைப்போல விசேஷமாகப் பிரகாசிக்கின்ற எதன் ஞானம் இந்திரியவடிவ வெகு துளைகளால் வெளியில் விளங்குகின்றதோ. [அறிகின்றேன் என்று அதன் விளக்கமுண்டாகியபின்னர் இந்தச் சகல ஜகத்தும் விளங்குகின்றதோ] அந்த விளக்கம் (பிரகாசவடிவ சேதனம்) யான். இது தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்திற் சொல்லப்பட்ட அர்த்தம் சொல்லப்பட்டது.

சிநேகம் (தைலம்) தசை (வர்த்தி) பாத்திரம் (ஆதாரம்) இவையின்றி ஓர் (மனோவாக்குகளுக்கு விஷயமாகாத) பிரஹ்மமாகிய தீபம் விளங்குகின்றது. இந்தத் தீபம் மூன்று உலக

மாகிய ஓர் (அநிர்வசநீய) மடமை (கருப்பை) விவேகித்துக் காட்டுகின்றது. அதுவே யான். இந்த அர்த்தம்

"தீவ꞉ கொஃஷி ஸுகிம்யெஷெஹ உஸா யாஙஹீந ஜேஷூம஦꞉ । தஞ்வரிகிஜேஷி தவிஷூம் லைதொக்ஷூ ஜேஷாவிவிஷ்ாஞய ஸ்ஃயதி ॥

என்னும் சித்தாந்த சந்திரிகோத்காரநூலின் வாக்கியத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

௧௧௩. இப்போது ஆத்மாவின் பரமாநந்தத் தன்மையினைச் சிஷ்யன் அநுபவ கோசரமாக்கிக் கூறுகின்றான். "படிக்கின்ற அநேகம் பிள்ளைகளின் இடையிலுள்ள ஒருவனது புத்திரன் குரல் சாமாநியமாக அவன் பிதாவிற்குக் கேட்கப்படினும், அநேகரோடு படித்தலாகிய பிரதிபந்தத்தால் 'இது என் புத்திரனது சப்தம்' என்று விசேஷமாகப் பானமா (விளங்கு)கிறதில்லை. அதுபோலப் பரமாநந்தனாகிய யான் சாமாநியமாகப் பரமப் பிரீதிக்கு விஷயமாயிருத்தலால் விளங்கினும், இல்லை தோற்றவில்லையென்னும் ஆவரணமாகிய பிரதிபந்தத்தால் 'நானே பரமாநந்தவடிவன்' என்று

விசேஷமாகத் தோற்றுகிறதில்லை என்று விசாரித்து 'சாமாநியமாக விளங்குகின்ற பரமாநந்தம் எதுவோ அது நான்' என்று சாஸ்திரம், குரு, தனது அநுபவம் என்பவற்றின் கிருபையால் அச்சுக'வடிவத்தை விசேஷமாக அறிந்தேன்." இவ்வர்த்தம் ஸ்ரீ பஞ்சதசியின் பிரத்தியக்தத்துவவிவேகமென்னும் முதற்பிரகரணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

௧௧௪. இப்போது சிஷ்யன் அநேக மதங்களின் அபவாதத்தோடு சுருதியிற் பெறப்பட்ட நிஜசொரூபத்தைக் கூறுகின்றான்:—ஸ்திரீ குழந்தை குருடன் ஜடன் என்பவர்களுக்குச் சமமான சார்வாகன் (௧), பிராணோபாசகன் (௨), இந்திரியாத்மவாதி (௩), க்ஷணிக விஞ்ஞானவாதி (௪), சூன்யவாதி முதலியோர் (நையாயிகர் முதலியோர்) (௫) என்னும் வாதிகள் யாண்டுப் பிராந்தர்களாய்க் கிரமமாகத் தேகம் (௧), பிராணன் (௨), இந்திரியம் (௩), புத்தி (௪), சூநியம் அஞ்ஞானமுதலியன (௫) என்பவற்றைத் தானெனச் செவ்வையாய் அறிகின்றார்களோ, அந்த அளவின்றியது (அணு, குறுமை, நெடுமை முதலிய பரிமாணமின்றியது) தானாகிய (ஆத்மாவாகிய) யானுயிருக்கின்றேன்.

௧௧௫. இப்போது சிஷ்யன் மாயையின் ஆச்சரியவடிவத்தன்மையைக் கூறுகின்றான்:—

ஓர் (அநிர்வசநீய) கருமை(மேகமுடல் வடிவினதாகிய மாயை)எப்போது சிதாகாசத்தில் புவன (பதினான்கு உலக) வடிவ ஜலத்தை (சிருஷ்டித்தலாகிய மழையை)ப் பொழிகின்றதோ, அப்போது பிரஹ்மா முதலிய ஜீவர்களாகிய துச்சமான தவளைகள் நாற்புறத்திலும் குதிக்கின்றன.

ஓர் (அநிர்வசநீயமான) கிழ (அநாதிகாலத்தைய) அசத்தானவள் (சத்திலும் விலக்ஷண மாயையாகிய வேசி) சங்கமின்றியே அசங்க பரம புருஷனது எல்லா உடைமையையும் (ஆத்மசொரூபமாகிய தனத்தினைக்) கவர்கின்றாள். ஐய! இவ்வுலகிலுள்ள துன்பத்தினை என்னென்று சொல்வது! ஒன்றும் சொல்ல முடியாது.

௧௧௬. இப்போது இந்திரஜாலவடிவத் தன்மையாக ஜகத்தின் மித்தியாத்தன்மையைக் கூறுகின்றான்:—

கர்ப்பத்திலிருந்த பிந்துவானது சாங்கோபாங்கமாய் (கை கால் தலை முதலிய அங்கங்

களும் விரல்முதலிய உபாங்கங்களுமுடையதா ய்)க் கர்ப்பத்தோடு கூடியதாயும் கிரமமாகச் சிசுத்தன்மை முதலிய அநேக வேஷங்களோடு கூடியதாயும் சிரவணாதிகளும் கமனாதிகளு (நடத்தல் முதலியனவு) மாகிய செய்கைகளைச் செய்கின்றது. இதைவிட வேறு இந்திரஜால மென்ன? ஒன்றுமில்லை. ஆனால் இவ்வாறு உண்டாகும் வடவிருக்ஷ முதலியவடிவினதா கிய இவ்வெல்லா ஜகத்துமே இந்திரஜாலமாம். ஆதலால் மித்தையாம்.

கக௭. இப்போது ஈசுவரன், குரு, ஆத் மா என்பவற்றிற்கு வாஸ்தவமாக ஏகரூபத்து வம் சொல்லுகின்றவனைச் சிஷ்யன் தனது ஆத்மாவிற்குத் தேகாபிமானத்தை விடுத லோடு அது நான் என்னும் சிந்தனைவடிவ நமஸ் காரத்தைச் செய்கின்றான்:—

ஈசுவரன், குரு, ஆத்மா என்று வடிவத் தால் பேதமாய் ஒன்றாய் விளங்குகின்ற பரமா கிய எனக்கு அநேக முறை நமஸ்காரம். இது

"ஈஶ்வரோ குருராத்மேதி மூர்த்திபேதவிபாகிநே । வ்யோமவத்வ்யாப்ததேஹாய தக்ஷிணாமூர்த்தயே நம: ||

ஈசுவரன், குரு, ஆத்மாவென்று மூர்த்தி பேதத்தால் வியாபகத்தை யடைந்து ஆகாசத்தைப்போல எவருடைய தேகம் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்ட தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்'' என்னும் வார்த்திக காரரது வாக்கியத்தின் பொருளே சொல்லப் பட்டது.

௧௧அ. இவ்வாறு ஸ்ரீ குருவின் பிரார்த்தனை பூர்வகமாகத் தனது ஆத்மாவை நமஸ்கரித்து, இப்போது தனது இஷ்டமாகிய சிவன் முதலிய பெயரையுடைய ஈசுவரனிடத்துச் சிஷ்யன் அபேதத்தன்மையாகப் பிரார்த்திக்கின்றான்:—

சிவனே! தாம் எனது ஆத்மாவா யிருக்கின்றீர். மதி (புத்தி) சிவை (பார்வதி) யாம். ஐந்து பிராணன்களும் நந்திகேசுவரர் முதலிய பரிவாரங்களாவர். சரீரம்வீடாம். சாஸ்திர விரோதமின்றிய பிராரத்தத்தின் பலமாகிய சப்தாதி விஷயங்களின் போகம் அர்ச்சனையாம். நித்திரையும் நடத்தலும் கிரமமாகத் தியானமும் (சமாதியும்) பிரதக்ஷிணமுமாம்.

ஈண்டு இது இரகசியம்:—எங்ஙனம் சமாதியில் அஞ்ஞான முதலிய பிரபஞ்சத்தின் அபா

வமுண்டாய் நிஷ்பிரபஞ்ச சுவசொரூபமே மிஞ்சுகின்றதோ, அங்ஙனமே ஞானிக்குத் தத்துவஞானத்தால் எஞ்சுதலின்றிய அஞ்ஞானம் (ஆவரணம்) கெடுதலால் அவனுக்குச் சுழுத்தியிலும் அஞ்ஞானமும் ஸ்தூல சூக்ஷமப் பிரபஞ்சங்களும் இல்லாதனவாகச் சித்திக்கின்றன. அவ்வின்மை சித்திக்கவே நிஷ்பிரபஞ்ச சுவசொரூபமே மிஞ்சுகின்றது. ஆதலால் ஞானியின் நித்திரையும் சமாதிக்குச் சமானமாயிருத்தலால் அதனைச் சமாதி என்றார். ஞானி தனது ஆத்மாவாகிய சிவனை எங்கும் உள்ளதாக (வியாபகமாக) அறிகின்றான். ஆதலால் அவனது அங்குமிங்கும் நடத்தலானது அந்தச் சிவனது பிரதக்ஷிணத்திற்குச் சமானமாம். அவன் உச்சரிக்கின்ற சகல வாக்கியங்களும் ஸ்துதியாம்.

இதன் இரகசியம் இதுவாம்:—கடமுதலிய சகல சப்தங்களின் வாச்சியார்த்தம் அந்தந்த ஆகாரத்தோடுகூடிய அஸ்திபாதிப் பிரிய வடிவ பிரஹ்மமாம். அந்தந்த ஆகாரத்தன்மையை விட்டு எஞ்சிநின்ற அஸ்திபாதிப் பிரியவடிவப் பிரஹ்மம் அச்சப்தங்களின் லக்ஷியார்த்தமாம். ஆதலால் லக்ஷணாவிருத்தியி

னுல் சகல வசனங்களும் பிரஹ்மத்தையே (ஆத்மாவினையே) விஷயஞ் செய்கின்றன.

அல்லது, ஞானியின் சகல வசனங்களும் லக்ஷணை செய்தலின்றியே சக்திவிருத்தியினுலேயே சுத்தப்பிரஹ்மத்தை (ஆத்மாவை) விஷயஞ்செய்கின்றன; அவனுக்குச் சர்வ ஜகத்தும் பிரஹ்மவடிவமாகத் தோற்றுதலால்.

இவ்வாற்ருல் நான் எந்தெந்தக் கர்மங்களைச் செய்கின்றேனே, அவை சிவனே! தம்முடைய ஆராதனமாம் என்பது

ஆத்மா த்வம் கி3ரிஜா மதி: ஸஹசரா: ப்ராணா: ஶரீரம் க்3ருஹம் பூஜா தே விஷயோபபோ4க3ரசநா நித்3ரா ஸமாதி4ஸ்தி2தி: | ஸஞ்சார: பத3யோ: ப்ரத3க்ஷிணவிதி4: ஸ்தோத்ராணி ஸர்வா கி3ரோ யத்3யத்கர்ம கரோமி தத்தத3கி2லம் ஶம்போ4 தவாராத4நம் ||

என்னும் சுலோகத்தின் அர்த்தமாம்.

மதிர்கி3ரிதநயா மநோऽம்ப3ரோவா ஸமி
ஷ்டிஶ்ரீதநுவா மநீ ஸர்வாணாம் | த்ரி ம
ரெசெதாரதிவெஷிதொதாऽஸி ஶம்போ4 ஆஆ
ஸ்ருஷ்டிவிஶ த்ரிதாவதவெ ||

'என்னும் அப்பயதீக்ஷிதபண்டிதரது வாக்கியத்தின் அர்த்தத்தை அநுவாதஞ் செய்கின்றவனுய்ச் சிஷ்யன் தனது இஷ்டதெய்வமாகிய சிவனைப் பிரார்த்தனை செய்கின்றான்:—

சம்புவே! பனிமலை புதல்வி (பார்வதி), சந்திரன், சீதலமான தேவநதி (ஜடையிலுள்ள கங்கை) என்னும் மூன்றும் சீதளமாம். இம் மூன்றினுலும் தாம் மிக நடுக்குற்றிருத்தலால் பிரியமுண்டாகும் வண்ணமாக எனது இருதயத்தில் பிரவேசியும் பிரவேசித்தால் தம்முடைய மூன்று சீதளங்களும் போகும். எனது மூன்று தாபங்களும் ஒழியும்.

ஈண்டு இஃது இரகசியமாம்:—சிவனது மூர்த்தித்தன்மையின் திருஷ்டியை விடுதலின்றி அதனது மூன்று சீதளங்களின் மித்தியாத்தன்மை நிச்சயவடிவ அபரோக்ஷபாதம் சம்பவியாது. தனது தேகபாவத்தின் திருஷ்டியை விடுதலின்றி மூவகைத் தாபத்தின் மித்தியாத்தன்மை நிச்சயவடிவ அபரோக்ஷபாதம் சம்பவியாது. சிவனுக்கும் தனக்குமுள்ள உபாதி திருஷ்டியை விடுதலால் நிருபாதிகமாகிய பரமசிவனுக்கும் ஆத்மாவிற்குமுள்ள ஏகத்தன்மையின் ஞானமின்றி வேறுவகையான பிரவேசம் உள்ளத்திற் சம்பவியாது. ஆதலால் சிவ

னே! தாம் நிரந்தரம் என்னோடு அபேத நிச்சயமாகிய தத்துவஞானத்திற்கு விஷயமாவீராக என்பது இரகசியமான அபிப்பிராயம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தை அநுவதித்துச் சிஷ்யன் கூறுகின்றான் :— லோகநாதனே! தேக திருஷ்டியினால் தம்மையும் என்னையும் கணிக்குங் காலத்து யான் ஒரு கொசுகினும் சிறிய கொசுகிற்குச் சமானமாயிருத்தலின் சமானமின்றியவனாயிருக்கின்றேன். தமக்கும் எனக்கும் சத்து சித்து ஆனந்தமென்னும் வடிவத்தால் பூர்ணத்தன்மை சமமேயாம்.

இப்போது அஞ்ஞானதசையில் பேததிருஷ்டியினாற் செய்த தீர்த்த யாத்திரை முதலிய கர்மங்களையும் அபராத வடிவமென்றெண்ணி

“ [illegible]
[illegible]
[illegible]
[illegible] ||

என்னும் இச்சுலோகத்தின் அர்த்தத்தை அநுவதித்துச் சிஷ்யன் மன்னிப்புக் கேட்கின்ருன்:— தேவனே! யாத்திரையினுல் தமது பூரணத்தன்மையைக் கெடுத்தேன். தியானத்தினுல் தமது மனதிற்கு விஷயமாகாமையைக் கெடுத்தேன். ஸ்துதியினுல் தமது வாக்கிற்கு விஷயமாகாமையைக் கெடுத்தேன். இம்மூன்று அபராதங்களும் என்னுற் செய்யப்பட்டன. பகவானே! அதனைத் தாம் பொறுத்தருளல் வேண்டும். புத்திரன் முன் அறியாமையுடைய பாலப் பருவத்திற் செய்த அபராதங்களைப் பிதாவானவன் பொறுப்பதுபோல அஞ்ஞான தசையிற் செய்யப்பட்ட பக்தனுகிய எனது அபராதங்களைத் தாம் பொறுத்தருளல்வேண்டும்.

கககூ. ஆற்றில் மூழ்கிய புருஷனைக் கரையேற்றுவதில் க. கரையில் நிற்கின்ற எடுப்பவன் எடுக்கப்படுபவனென்னும் இருவருக்கும் போதிக்கும் புருஷனும், உ. எடுக்கும் புருஷனும், ங. எடுக்கப்படும் புருஷனுமாகிய மூவரது நன்மையும் வேண்டும்.

தராசில் பொன்னை நிறுத்தற்பொருட்டுப் பொன்னும் குன்றிமணி முதலியநிறையும்மேற்

பாகத்தில் சலாகையுமாகிய மூன்றன் சமத் தன்மையும்வேண்டும். அவை இருந்தால் அப் போது சுவர்ண முதலிய வஸ்துக்களின் பரி மாணத்தின் நிச்சயம் உண்டாகின்றது.

அங்ஙனமே திட அபரோக்ஷ ஞானத்தி லும் சாஸ்திரம் குரு தன் அநுபவம் என்னும் மூன்றன் சமத்தன்மையும் வேண்டும். அது எனக்குச் சித்தித்தது. ஆதலால் எனது நிச் சயம் திடமாம். இதனாலே எனக்கு முக்தியில் சம்சயமில்லை என்னும் அபிப்பிராயத்தினால் சிஷ்யன் கூறுகின்றான்:—

சாஸ்திர திருஷ்டியினாலும் குரு வாக்கியத் தினாலும் செவ்வையாய் உதித்திருக்கின்ற அப ரோக்ஷ ஞானத்தினாலும் தானேதானாக அறிந் தேன் இதுவே வேறு சாஸ்திரத்திலும்,

“ஶாஸ்த்ரத்ருஷ்டிர்குரோர்வாக்யம் த்ருதீய

ஸ்வாத்மநிஶ்சய: | த்ரிதைவ யோ விஜாநாதி

ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய: ||

சாஸ்திர திருஷ்டியும் குருவாக்கியமும் தனது அநுபவமுமாகிய மூன்று விதத்தினா லும் எவன் அறிகின்றானோ அவன் முக்தன்; இதிற் சம்சயமில்லை.” என்று சொல்லப்பட்டி ருக்கிறது.

கஉo. இப்போது எந்த ஹரி, குரு, சத்புருஷர்கள் என்பவர்களிடத்து முன் செய்த பக்தியினால் உண்டாகிய அவர்களது கிருபையினால் அபரோக்ஷஞானம் உண்டாயிற்றோ, அவர்களது பக்தியைவிடுதலால் செய்ந்நன்றி கொல்லுதலென்னும் தோஷமுண்டாகின்றது. அதன் நிவிருத்தியின் பொருட்டுச் சிஷ்யன் கூறுகின்றான் :— ஈசுவரன், குரு, சாதுக்கள் என்பவர்களுக்குத் தேகதிருஷ்டியினால் நான் தாசனாயிருக்கின்றேன். ஜீவ திருஷ்டியினால் அந்த ஈசுவர வடிவமாக மதிக்கப்பட்ட குரு முதலியோர்களின் அம்சமா யிருக்கின்றேன். ஆத்ம திருஷ்டியினால் அவர்களே யானாயிருக்கின்றேன். அது வேறு சாஸ்திரத்திலும் ஓர் பத்தரால்.

“தேஹபுத்த்யா து தாஸோஹம் ஜீவபுத்த்யா த்வதம்ஶக꞉ | ஆத்மபுத்த்யா த்வமேவாஹமிதி மே நிஶ்சிதா மதி꞉ ||

தேவனே! தேக புத்தியினாலோ யான் தமது தாசன். ஜீவபுத்தியினாலோ தமது அம்சன். ஆத்ம புத்தியினால் தாமே யான் என்பது எனது நிச்சலமானமதி என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளும் மற்ற ஜீவன்களின் உபதேசத்தின் பொருட்டுச் சிவஸ்துதியின் பிரசங்கத்தில் இவ்வாறு கூறியிருக்கின்றனர்:—

𑌦𑌾𑌸𑍋𑌽𑌹𑌂 𑌦𑍇𑌹𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌿 𑌶𑌂
𑌭𑍋 𑌜𑌾𑌤𑌸𑍍𑌤𑍇𑌽𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌤𑍍𑌰𑌿
𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 । 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌤𑍍𑌵
𑌮𑍇𑌵𑍇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌮𑍇 𑌧𑍀𑌰𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾
𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 ॥

சம்புவே! தேகதிருஷ்டியினால் நான் உன்னுடைய தாசன். திரியம்பகரே (முக்கண்ணரே)! ஜீவ (உபாதியோடுகூடிய சேதன) திருஷ்டியினால் நான் தங்களுடைய அம்சமாயிருக்கின்றேன். எல்லாவற்றின் ஆத்மாவே! ஆத்ம திருஷ்டியினால் தாமே நான் என்னும் இத்தன்மைய எனது புத்தி சாவசாஸ்திரங்களாலும் நிச்சயத்தை யடைந்திருக்கின்றது.

## நூலாசிரியரின் வாக்கியம்.

௧௨௧. சிஷ்யனானவன் முற்கூறிய வண்ணம் தானே தன்னையறிந்து கிருதார்த்தனானான். பின்னர்க் குருவின் பாதகமலங்களில் நமஸ்கரித்துக் குருவின் ஆணையாகிய வாக்கியத்தால் வீட்டிற்குப்போனான்.

ஒரு காலத்துக் * ககூ0. காகதாலீய நியாயத்தால் * ககூக. நிஷ்காம புண்ணிய (அசுக்ல கிருஷ்ணவடிவ யோகியின் கர்ம)மயமான உத்தம பிராரத்தகர்மத்தின் உற்பத்தியினால் முற்கூறிய சிஷ்யனாகிய ஞானியின் சித்தத்தில் காணப்படும் போகங்களில் திருஷ்ட மித்தியாத் தன்மை உணர்ச்சியால் தீவிரதர வைராக்கியம் உண்டாயிற்று. அதனால் ஜீவன் முக்தியின் அது விலக்ஷண சுகத்தைச் செவ்வையாய்ப் புசித்தற் பொருட்டு வீடு முதலியவற்றை விடுதலாகிய சந்நியாச ஆசிரமத்தைக் கொண்டான்.

ஈண்டு இது இரகசியமாம்:—க. உத்தமம், உ. மத்திமம், ங. கநிஷ்டம், ச. அதமதரம், ரு. அதமதமம் என்னும் பேதத்தால் பிராரத்த காமமாகிய பாக்கியம் எதுவோ அது ஐந்து வகையாம்.

---

* ககூ0. காகம் உட்காரப் பனம்பழம் விழுந்தது என்னும் நியாய (திருஷ்டாந்த) த்தால்.

* ககூக. சகாம புண்ணியம் எதுவோ அது சுக்கில கர்மமாம். பாவம் எதுவோ, அது கிருஷ்ணகர்மமாம். அவ்விரண்டினும் விலக்ஷணமான நிஷ்காம புண்ணியம் எதுவோ அது அசுக்ல கிருஷ்ணகர்மமாம்.

க. எப்போதும் நிவிருத்திக்கு ஏதுவாகிய பிராரத்தம் எதுவோ அது உத்தமமாம். அது சுகதேவர், வாமதேவர், சனகாதியர் முதலி யோரிடத்திருந்த பிராரத்தமாம். அது பிறப்பு முதல் சரீரம் இருந்தவரையில் நிவிருத்திக்கு ஏதுவாயிருந்தமையால் உத்தமமாம்.

உ. முதலில் பிரவிருத்திக்கு ஏதுவாயும் பின் நிவிருத்திக்கு ஏதுவாயுமுள்ள பிராரத் தம் மத்திமமாம். அது யாஞ்ஞவல்கியர் முதலி யோரிடத்திருந்த பிராரத்தமாம். அது கிர கஸ்தாசிரமத்தை அங்கீகரித்தலாகிய பிரவிரு த்திக்கு ஏதுவாயிருந்து பின் தீவிர வைராக்கி யத்தோடு வித்வத் சந்நியாசத்தை அங்கீகரித்த லாகிய நிவிருத்திக்கு ஏதுவா யிருந்தமையால் மத்திமமாம்

ங. எப்போதும் பிரவிருத்திக்கு ஏதுவா யுள்ள பிராரத்தம் கநிஷ்ட (அதம) மாம். அது ஜனகர் முதலியோருக்கு இருந்த பிராரத்த மாம். அது எப்போதும் இராஜ்ஜியபோகத்தை அங்கீகரித்தலாகிய பிரவிருத்திக்கு ஏதுவாயி ருந்தமையால் கநிஷ்டமாம்.

ச. முதலில் நிவிருத்திக்கு ஏதுவாயும் பின் பிரவிருத்திக்கு ஏதுவாயுமுள்ள * கசுஉ. பிராரத்தம் அதமதரமாம். அது சிகரத்துவஜன், அலர்க்கன், பிரியவிரதன் முதலியோருக்கிருந்த பிராரத்தமாம். அது முதலில் வைராக்கிய பூர்வகமாய் நிவிருத்திக்கு ஏதுவாயிருந்து, பின்னர்ப் போகஇச்சையை முன்னிட்ட ராஜ்யாதிகளை அங்கீகரித்தலாகிய பிரவிருத்திக்கு ஏதுவா யிருந்தமையால் அதமதரமாம்.

ரு. (க) இஷ்டப்படி ஒழுகுதல் (உ) இஷ்டப்படி பேசுதல் (ங) இஷ்டப்படி புசித்தல் என்னும் பிரமாதத்திற்கு ஏதுவாகிய பிராரத்தம் * கசுங. அதமதமமாம். அது கலியின் பிரமாதத்தால் சில ஆதுநிகர் (தற்காலத்தவர்) அநதிகாரிகளாய் மேல் வேதாந்தசிரவணமுதலிய சுகசாதனங்களிற் பிரவிருத்திக்கும் கள்ள ஞானி முதலியோரதாம். அது (க) இஷ்டப்படி நடத்தல் (உ) இஷ்டப்படி பேசுதல் (ங) இஷ்டப்படி புசித்தலென்னும் பிரமாதத்தை

---

* கசுஉ. அதமமாயுள்ள ஒன்றனைவிட அதமமாயுள்ளது அதமதரம் எனப்படும்.

* கசுங. அதமங்கள் எல்லாவற்றினும் அதமமானதை அதமதமமென்பர்.

அங்கீகரித்தற்கு ஏதுவாயிருத்தலின் அதமதமமாம். அவற்றுள்,

முற்கூறிய ஞானி புருஷனது பிராரத்தமாகிய பாக்கியம் முன்னர்க் கிருகஸ்த ஆசிரமத்தை அங்கீகரித்தலாகிய பிரவிருத்திக்கு ஏதுவும், பின்னர்த் தீவிர வைராக்கிய பூர்வகமாய் வீடுமுதலியவற்றை விடுதலாகிய நிவிருத்திக்கு ஏதுவுமாயிருத்தலால் யாஞ்ஞவல்கியர் முதலியோர்களுக்குப்போல மத்திமமாயிருக்கினும், அது தீவிர வைராக்கியத்திற்கு ஏதுவான நிஷ்காம புண்ணியவடிவமாயிருத்தலால் உத்தமமென்று சொல்லப்பட்டது.

இங்கு வீடு முதலியவற்றைவிடுதல் என்று சொல்லப்பட்டது. அதில் வீடு என்னுஞ் சொல்லால் அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட க்ஷேத்திரம் (நிலம்), பசு, தாசன், தாசி, தனம், தான்யம் முதலிய செல்வமாகிய பணத்தையும் அதன் உபயோகியான உழவு வியாபாரமுதலியவற்றில் பிரவிருத்தித்தலாகிய அதன் இச்சையையும் கொள்ளவேண்டும்.

முதலிய என்னும் சொல்லால் புத்திரஏஷணையும், அதன் உபயோகிகளான ஸ்திரீ விவாகம் முதலியவற்றின் ஏஷணையும், இவ்வுலகம்

துதிக்கத்தக்கதன்மையினையும் நிந்திக்கத்தக்க தன்மையினையும் சம்பாதிக்கும் இச்சை அல்லது லோகாந்தரத்தின் இச்சை என்னும் லோக ஏஷணையும், அதன் உபயோகியான யாகாதி கர்மங்களிற் பிரவிருத்திக்கும் ஏஷணையுமாகிய இவற்றைக் கொள்ளுதல் வேண்டும். ஆதலால் இம்மூன்று ஏஷணைகளினின்றும் எழுதலாகிய சந்நியாசமே வீடுமுதலியவற்றை விடுதலென்னும் வாக்கியத்திற்குப் பொருளாம்.

அச்சந்நியாசம் க. குடீசகம், உ. பகூதகம், ௩. ஹம்சம், ச. பரமஹம்சம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்தாம்.

க. யாத்திரைக்குச் சக்தியின்மையால் எங்கேனும் குடிசை ஏற்படுத்தி இருத்தல் குடீசகமாம்.

உ. சந்நியாச ஆசிரமத்தின் கர்மத்தைச் செய்துகொண்டு யாத்திரை செய்தல் பகூதகமாம்.

௩. அக்கினியாற் சாதிக்கப்படும் கர்மத்தினை விட்டுப் பிரணவஜபமுதலியவற்றை அநுஷ்டிப்பவனாதல் ஹம்ஸமாம்.

ச. பரமஹம்ஸ சந்நியாசமும் விவிதிஷை, வித்வத் என்னும் பேதத்தால் இருவகைத் தாம்.

(க) ஞானத்திற்குமுன் தோஷ திருஷ்டியி னால் உண்டாகும் தீவிரதர வைராக்கியத்தால் ஜிஞ்ஞாசுவினுற் செய்துகொள்ளப்படுவது விவி திஷா சந்நியாசமாம்.

(உ) ஞானத்திற்குப் பின் தோஷ திருஷ்டி மித்தியாத்துவ திருஷ்டிகளாற் றோன்றும் தீவி ரதரவைராக்கியத்தினுல் வித்வா (ஞானியி) னுல் செய்துகொள்ளப்படுவது வித்வத் சந்நி யாசமாம்.

அவற்றுள் இங்கு வித்வத் சந்நியாசம் கொ ள்ளப்படும்.

கஉஉ. இச் சிஷ்யன் சந்நியாச ஆசிரம த்தை அங்கீகரித்து விக்ஷேபநிவிருத்தியின் பொருட்டு எந்த வஸ்துக்களை விட்டுத் தேக யாத்திரை முதலியவற்றின்பொருட்டு எந்த வஸ்துக்களைவிடாது ஜகத்தில் சஞ்சரித்தான் ? என்னும் சங்கை யுண்டாக, ஆண்டு ஐந்தனை விட்டு ஐந்தனை விடாமல் அவன் ஜகத்தில் சஞ் சரித்தான் என்று சொல்லப்படுகின்றது:—

க. ஸ்திரீ, உ. பொன், மடம் முதலியனவாகிய தனத்தைக் கொள்ளுதல், ங. விஷயம் (சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம்.), ச. சபை (ஜனக்கூட்டம்), ரு. சன்மானம் என்னும் ஐந்தனையும்விட்டு [ஆண்டு ஐந்து விஷயங்களினுள் ஸ்பரிசத்தையும ரசத்தையும் பாதிவிடுதல்வேண்டும். ஏனெனின், அவற்றை முற்றும் விடுதலால் தேகயாத்திரை (தேகநிலைப்பு) சம்பவியாது. ஆதலால் வஸ்திரமாகிய ஸ்பரிசத்தினையும் பிக்ஷையாகிய ரசத்தினையும் விடலாகாது. அவற்றின் அதிகத்தை விடல்வேண்டும் என்பது விவஸ்தையாம்.] க. வஸ்திரம், உ, கயிற்றோடுகூடிய கமண்டலம், ங. ஏகாந்தம். ச. பிக்ஷை, ரு. தேகாதிகள் தோற்றிக்கொண்டிருக்கும்போது சுருதியாகிய சாஸ்திரம் என்னும்இவ்வைந்தனையும் விடாமல் சஞ்சரித்தான்.

கஉங. பின் அந்தஞானி மனோ (சித்த) நிரோதமாகிய ராஜயோகத்தின் பொருட்டு முதலிற் பிராண நிரோதமாகிய * கசுச. ஹட

* கசுச. ஹடயோகத்தால் இராஜயோகத்தைச் சாதிக்கும் வழிகள் யாவும் விஸ்தாரமாய் ஹடயோகப் பிரதீபிகையென்னும் நூலில்எழுதப்பட்டிருக்கின்றன ஈண்டு அதன் றன்மைமாத்திரம் சுருக்கமாய்க் காட்டப்படுகின்றது.

யோகத்தைச் செய்தான். அவ் வடயோகத்தால் பின் ராஜயோகத்தைச் சாதித்து அஷ்டாங்கங்களோடுகூடிய நிருவிகற்பவடிவ சிரேஷ்ட சமாதியைப் பெற்றான்.

அந்தச் சாதனவடிவ ஹடயோகம் அதன் பலவடிவ * கசரு ராஜயோகம் என்பவற்றின் சுருக்கமான தன்மையினைச் சாஸ்திர குரு கிருபையால் யாம் எழுதுவாம்.

அவற்றுள்,

க. ஹடயோகத்தின் தன்மை இதுவாம்:—

* கசசு. நேதி, * கசஎ. தோதி,

---

* கசரு. இங்கு ஹடயோகத்தின் பயனுயிருத்தலால் ஞானக்கிரியைகள் இரண்டினாலும் சாதிக்கப்படும் ராஜயோகம் கொள்ளப்படும்.

* கசசு. எலிவாலைப்போன்ற அநேக நூல்களால் ஆக்கப்பட்ட கயிற்றைக் கிரமமாக நாசியின் இரண்டு துவாரங்களிலும் போட்டு மேல்வாய்த் துவாரத்தின் வழியாய் வாயினின்றும் எடுத்தல் நேதியாம்.

* கசஎ. தோதி:— க. ஜலதோதி, உ. சூத்திரதோதி, ங. வஸ்திரதோதி, ச. பவனதோதி என்னும் பேதத்தால் தோதிக்கிரியை நான்குவகைத்தாம்.

க. மிளகைத்தின்று சிறிது உஷ்ணமான உழக்கு ஜலத்தைக் குடித்துப் பின் யுக்தியினால் அந்த ஜலத்தை வெளிப்படுத்துதல் ஜலதோதியாம்.

உ. நூலால் ஆக்கப்பட்ட ஒன்றேகால்முழமுள்ள கயிற்றை வாயின் வழியாய் வயிறுபரியந்தம் போட்டு அசைத்து வெளிப்படுத்துதல் சூத்திரதோதியாம்.

ந. நான்கு அல்லது ஆறங்குல அகலமும், எட்டு அல்லது பதினாறுமுழ நீளமுள்ள மல்மல் அல்லது ஜகன்னாதி என்னும் துணிப்பட்டியை ஜலத்தில் நனைத்து வாயால் விழுங்கி வயிற்றிற்போட்டுப் பின் வாய்க்கு வெளியில் வைக்கப்பட்ட நுனியினால் தைரியமாக இழுத்து வெளிப்படுத்துதல் எதுவோ அது வஸ்திர தோதியாம்.

ச. இரண்டு பாதங்களால் உட்கார்ந்து கழுத்தை உயர்த்திச் சிறிது திறந்தவாயால் காற்றை இழுத்து உள்ளே நிரப்பி மீண்டும் தைரியமாக விடுதல் பவன தோதியாம். (பவனம்=வாயு.)

* கசுஅ. முற்கூறிய ஜலதோதியாம்.

* கசுகூ. நீர்வண்டை (சுழல்வண்டை)ப்போல வலப்பாக இடப்பாகங்களால் வயிற்றைச் சுழற்றுதல் நௌலியாம்.

* கஎ0. பஸ்தி, * கஎக. திராடகம், * கஎஉ. கபாலபாதி (பஸ்ரை), * கஎங. வஜ்ரோலி, * கஎச. சங்கப்பிரக்ஷாளனம், * கஎரு. விபரீதகரணி என்னும் கிரியைகள் ரோகத்தையும், மேதசு கபம் பித்தமுதலிய மலங்களையும் நிவிருத்திக்கும்வாயிலாகச் சரீரகோஷ்டத்தைச் சோதித் (சுத்திசெய்) தற்பொருட்டு முதலில் சித்தமாக்கவேண்டும். அவற்றுள்;

---

* கஎ0. குதத்தின் வாயிலாக ஜலத்தை ஏற்றி மீண்டும் விடுதல் பஸ்தியாம்.

* கஎக. நேத்திரங்களால் புருவநடுவினையாவது அல்லது வேறு சமீபத்திலுள்ள பதார்த்தத்தினையாவது கண்ணீர் விழும்வரையில் பார்த்தல் திராடகமாம்.

* கஎஉ. கொல்லன் துருத்தியினைப்போல விரைவாய் ரேசகபூரகஞ் செய்தல் கபாலபாதியாம்.

* கஎங. குய்யேந்திரிய வாயிலாக ஜல முதலியவற்றை இழுத்துவிடுதல் வஜ்ரோலியாம். இதனையே வஜ்ரோலி முத்திரை யென்றுங் கூறுவர்.

* கஎச. வாயினால் ஜலத்தைக் குடித்து மூலத்துவாரத்தால் வெளிப்படுத்துதல் சங்கப்பிரக்ஷாளனமாம்.

* கஎரு. பூமியிற் றலையைவைத்து இரண்டு கைகளாலும் இடுப்பைப் பிடித்துக்கொண்டு பாதங்களை

நேதி முதலிய ஆறு கிரியைகளும் முதலில் உபயோகமாம். ஆனால் எவனது சரீரத்தில் மேதசும் கபமும் அதிகமா யில்லையோ, அவனுக்கு அந்தக்கிரியைகளின்றிக் கேவலப் பிராணாயாமத்தின் அப்பியாசத்தினாலேயே சரீர சோதனமும் நாடி சோதனமும் உண்டாம்.

சிலரோ நீரில் ஊறிய கடுக்காயைத் தின்று கழிதலால் சரீரசுத்தியைச் செய்பவர்களாய் * களசு. பிந்துதரிசன முதலிய அப்பியாச பூர்வகமாகப் பிராணாயாமத்தின் அப்பியாசத்தை

---

நிராதாரமாக வைத்தல் (தலை கீழாயிருத்தல்) விபரீதகாணியாம். இதனையே விபரீதகாணி முத்திரையென்றுங் கூறுவர்.

* களசு. பத்மாசனம் சேர்த்து ஷண்முகி முத்திரையினால் இரண்டு அங்குஷ்டங்களால் மூடப்பட்ட இரண்டு காதுகளாலும் பத்துவித நாதங்கள் கேட்கப்படுகின்றன. இரண்டு சுட்டு விரல்களாலும் மூடப்பட்ட நேத்திரங்களில் பிரகாசவடிவ பிந்துவின்தரிசனமுண்டாகின்றது. இரண்டு நடுவிரல்களால் நாசியும், இரண்டு மோதிர விரல்களாலும் இரண்டு சுண்டுவிரல்களாலும் வாயும், மூடப்படவே கும்பகம் உண்டாகின்றது. பின் இரண்டு கைகளையும் விடுதலால் நேத்திரத்திறகெதிரில் கண்ணீர் விழும்வரையில் பிந்து தரிசனத்தால் திராடகம் உண்டாகின்றது. இது பிந்து தரிசனாதி அப்பியாசமாம்.

ஆரம்பிக்கின்றனர். அவர்களும் சித்தியைப் பெறுகின்றனர்.

சிலரோ * கஎஎ. ஜாலந்திர பந்தத்தின் அப்பியாச மாத்திரத்தால் பிராணன் மேற் செல்லுதலாகிய சித்தியைப் பெறுகின்றனர்.

வீரியஸ்தானத்தைச் சோதித்தற் பொருட்டு வஜ்ரோலிக்கிரியையும் வேண்டியதாம்.

சமாதிகாலத்தில் சரீரத்தில் எஞ்சிநின்ற மலத்தை நீக்குதலால் வெகுகாலம்வரையில் சமாதி நிலைத்தற்பொருட்டுச் சங்கப்பிரக்ஷாளனக்கிரியையும் வேண்டும். கும்பகத்தினது விருத்தியின் பொருட்டுக் கபாலபாதியும் வேண்டும். வெகு அன்னத்தைப் பாகஞ்செய்யும் விபரீதகரணி தலையினின்றும் ஒழுகும் அமிர்தம்போன்ற ரசத்தைப் பானம் செய்தற் பொருட்டு வேண்டும்.

---

* கஎஎ. பத்மாசனம் சேர்த்துத் தாடையை மார்பிற்பொருத்தி, நாவைத்திருப்பி மேல்வாய்த் துவாரத்தோடு பொருந்தச் செய்து, வாயைப் பந்தித்தலால் சுவாசத்தின் நிரோதம் உண்டாகின்றது. இது ஜாலந்திரபந்தமாம்.

பிராணாயாமத்தில் உபயோகமுள்ள * களஅ. மூலபந்தம் * களகூ. உட்டியான பந்தம், * கஅ0. ஜாலந்தரபந்தம், * கஅக. ஜிஹ்வாபந்தம் என்பவற்றையும், * கஅஉ. சித்தம், * கஅ௩. பதுமம், * கஅச. மச்சேந்திரம்,

---

* களஅ. பாதத்தின் குதியை ஆசனத்தின் கீழ் அழுத்தி மூலத்துவாரத்தைநிரோதித்தல் மூலபந்தமாம்

* களகூ. நாபிவரையில் வயிற்றை உள் இழுத்தல் உட்டியானபந்தமாம்.

* கஅ0. இது முன் கூறப்பட்டது.

* கஅக. நாவைத்திருப்பி மேல்வாய்த் துவாரத்தோடு பொருத்துதல் ஜிஹ்வாபந்தமாம்.

* கஅஉ. இடது காற்குதியை ஆசனத்தின் கீழ் அழுத்தி வலதுகாற் குதியை இலிங்கத்தின்மேல் வைத்து உட்கார்ந்து சரீரத்தைத் தடிபோல் நிமிர்த்தி பார்வையைப் புருவநடுவில் வைத்தல் சித்தாசனமாம்.

* கஅ௩. வலதுபாதத்தின் குதியை இடது தொடையின் அடியில் வைத்து, அவ்வாறே இடது பாதத்தின் குதியை வலது தொடையின் அடியில் வைத்து இடது வலது கைகளால் இடவலப்பாதங்களின் பெருவிரலைப்பிடித்து பார்வையை நாசியின் நுனிப்பாகத்தில் நிறுத்துதல் பதுமாசனமாம். இவ்வாசனத்தை மாறியும் செய்யலாம்.

* கஅச, இடது தொடையின் அடியில் வைக்கப்பட்ட வலது பாதத்தின் குதியை இடது கையினாற்

* கஅரு. பச்சிமதானம், * கஅசு. மயூரம் என்றல் முதலிய ஆசனம் * கஅஎ. முத்திரை முதலியவற்றின் அப்பியாசத்தால் சித்தமாக்கல் வேண்டும்.

---

பிடித்து வலப்பாகத்தின் முழந்தாளில் வைக்கப்பட்ட இடது பாதத்தின் அங்குஷ்டத்தினை வலதுகையினுற் பிடித்துக்கொண்டு உட்காருதல் மச்சேந்திராசனமாம். இவ்வாசனம் கை கால்களை மாறிவைக்கும் கிரமத்தாலும் உண்டாம்.

* கஅரு. இரண்டு பாதங்களையும் தண்டம்போல் நீட்டி இரண்டு கைகளாலும் இரண்டு காற் பெருவிரல்களையும் பிடித்துக்கொண்டு நெற்றியை முழந்தாளின் பேரில் வைத்தல் பச்சிமதான ஆசனமாம்.

* கஅசு. இரண்டு கைகளையும் பூமியில்வைத்து இரண்டு முழங்கைகளையும் நாபியின் பக்கங்களிற் பொருத்திச் சரீரத்தை மயிலுக்குச் சமானமாய் நிராதாரமாய்த் தூக்குதல் (நிறுத்தல்) மயூராசனமாம்.

* கஅஎ. முத்திரை க. மகாமுத்திரை, உ. மகாபந்தம், ௩. மகாவேதம், ச. கேசரி, ரு. உட்டியானம், சு. மூலபந்தம், எ. ஜாலந்தரபந்தம், அ. விபரீதகரணி, கூ. வஜ்ரோலி, கO. சக்திசாலனம் என்னும் பத்தும் ஹடயோகத்தின் முத்திரைகளாம். இவற்றின் லக்ஷணம் யோகநூல்களிலும் (ஹடப்ரதீபிகை முதலியவற்றிலும்) பிரசித்தமாயுள்ளது. ஆதலால் விரிவஞ்சிஈண்டு எழுதப்படவில்லை.

கெட்ட அன்னம் அக்கினிசங்கம் ஸ்திரீசங்கம் வழிநடப்பு என்னும் நான்கினையும் ஹடயோகி விடவேண்டும். மதிலால் சூழப்பட்டதும் கிணறுள்ளதுமான வீட்டின் மத்தியிலுள்ள குகையில் யோகி வாசம்பண்ணவேண்டும்.

இயமம் நியமம் முற்கூறிய ஆசனம் என்னும் மூன்றன்சித்தி பூர்வகமாய்ப் பிராணுயாமம் செய்யவேண்டும்.

அகர்ப்பம் சகர்ப்பம் என்னும் பேதத்தால் பிராணுயாமம் இருவகைத்தாம்.

க. பிரணவத்தின் உச்சாரணமின்றிய பிராணுயாமம் அகர்ப்பமாம்.

உ. பிரணவத்தின் உச்சாரணத்தோடுகூடிய பிராணுயாமம் சகர்ப்பமாம்.

அவற்றில் சகர்ப்பப் பிராணுயாமம் சிரேஷ்டமாகலின் அதனையே செய்யவேண்டும்.

மீண்டும் அப்பிராணுயாமம் க. பூரகம் உ. கும்பகம் ங. ரேசகம் என்னும் பேதத்தால் மூவகைத்தாம்.

க. முதலில் சந்திரநாடியினுலும் பின் சூரியநாடியினுலும் சுவாசத்தை நிரப்புதல் பூரகமெனப்படும்.

உ. பூரித்த சுவாசத்தைத் நிறுத்துதல் கும்பக மெனப்படும்.

ந. நிறுத்திய சுவாசத்தைத் தைரியமாக விடுதல் ரேசகமெனப்படும்.

அவற்றில் மாத்திராவிசேஷத்தின் நியமமும் வேண்டும். * கஅஅ. பிரணவோச்சாரண முதலியகாலங்களினுள் ஒன்றன் காலத்திற்கு மாத்திரை என்று பெயர். எத்தனை மாத்திரையால் பூரகஞ் செய்யப்படுகின்றதோ, அதனினும் நான்கு மடங்கு மாத்திரையால் கும்பகம் செய்யவேண்டும் பூரகத்தின் மாத்திரையினும் இருமடங்கு மாத்திரையால் ரேசகஞ் செய்தல் வேண்டும்.

காலை, மத்தியானம், சாயங்காலம், மத்தியராத்திரி என்னும் நான்கு காலங்களிலும் முறையே அதிகமதிகமாய்ப் பிராணாயாமம் செய்யவேண்டும்.

---

* கஅஅ. ஒரு பிரணவத்தை உச்சரித்தலில் எவ்வளவு காலமாமோ அது ஒரு மாத்திரையாம். அங்ஙனமே முதலிய என்னுஞ் சொல்லால் கைநொடித்தல் அல்லது கையினால் முழந்தாளைச் சுற்றுதல் முதலிய காலங்களும் கொள்ளப்படும்.

இவ்வாறு தைரியமாக அப்பியாசம் செய்து கொண்டே இருக்க, எப்போது உத்தமப்பிராணாயாமத்தை யடைகின்ருனோ, அப்போது காலையில் அறுபது பிராணாயாமமும் மத்தியானத்தில் நாற்பது பிராணாயாமமும் சாயங்கால மத்திய ராத்திரிகளில் இருபது இருபது பிராணாயாமமும் செய்யவேண்டும்.

அல்லது எக்காலங்களிலும் சமானமாகவே (௮0) பிராணாயாம் செய்தல்வேண்டும். ஆனால் முதற் பக்ஷத்தின் கிரமம் உத்தமமாம் இவ்வாறு பூரண அப்பியாசம் உண்டாக எப்போது குண்டலினி விழிக்கின்றதோ, அதன் முகம் திறக்கப் பிராணன் மேற்செல்லுதலையடைந்து பின் கீட்சென்று பின் பிடரி வழியாய்ப் பிராணன் மேற்செல்லுதலைச் செய்கின்றதோ, அப்போது மூலபந்த ஜாலந்தரபந்த ஜிஹ்வாபந்தங்களைத் திடஞ்செய்தல் வேண்டும். நாவாகிய கபாடத்தைப் பொருத்தவேண்டும்.

இவ்வாறு எப்போது பூரண அப்பியாசம் உண்டாகின்றதோ அப்போது சமாதி சித்திக்கின்றது. பின் அப்பியாச திடத்தன்மையால் மனநிரோதமாகிய இராஜயோகம் சகஜமாய்ச் சித்திக்கின்றது. ஆனால் இதில் சமாதி சித்

தித்த குருவின் சந்நிதிவேண்டும் குருவின்றிச் சுதந்திரமாக இந்த யோகத்தைச் செய்யின் அவனுக்கு ரோகத்தாற் பெறப்படும் அல்லது மரணத்தை யுண்டுபண்ணும் துக்கமுண்டாகும்.

அங்ஙனமே சிரத்தையோடுகூடிய சாமர்த்தியமுள்ள சாதகனது அபேக்ஷையுமுண்டு. ஏனெனின் அவனையின்றி மற்றவனால் நிர்வாகமுண்டாகாது.

எவன் சித்தம் சாந்தமாகிய எருதைப்போலச் சஞ்சலமின்றியதாய்ச் சுவாதீனமாயிருக்கிறதோ, அவனுக்கு ஸ்ரீ அபரோக்ஷாநுபூதியென்னும்நூலிற் கூறியபடி நாள்தோறும் கடிகை முகூர்த்த ஜாமபரியந்த பிரஹ்மாப்பியாச மாத்திரத்தினாலேயே நிருவிகற்பசமாதியாகிய ராஜயோகத்தின் சித்தியுண்டாகின்றது.

எவனுடைய சித்தம் மதங்கொண்ட எருதினைப்போல மிகச் சஞ்சலமுடையதாய்ச் சுவாதீனமின்றி இருக்கிறதோ, அவனுக்குத் தண்டத்தால் பலமாக மதர்த்தஎருதினை வீட்டிற் பிரவேசிக்கச் செய்வதுபோல ராஜயோகமாகிய வீட்டில் வலிந்து நுழையச் செய்தற்பொருட்டுப் பிராண நிரோதமாகிய ஹடயோ

கம் வேண்டும். ஆதலால் ஸ்ரீ ஆதிநாதர் (ஸ்ரீமகாதேவர்) மச்சேந்திரநாதர் கோரக்கநாதர் முதலியோர் சுதந்திரமாக ஹடயோகத்தைப் பிரகடனஞ் செய்திருக்கின்றனர்.

இக்காலத்தில் அதிகாரிகளின்மையாலும் சம்பிரதாயத்தின் நழுவுதலாலும் இந்த ஹடயோகம் சாங்கோபாங்கமாய் அடைதற் கரியதாயினும், ஓர் விரக்த புருஷனுக்கே ஒவ்வொரு * கஅகூ. அங்கத்தின் சித்தி யுண்டாகின்றது. இது சம்க்ஷேபமாக ஹடயோகத்தின் றன்மை சொல்லப்பட்டது.

இதன் விசேஷக்கிரமம் ஹடப்பிரதீபிகை, யோகசிந்தாமணி, கோரக்கசதகம், யாஞ்ஞவல்கியம், தத்தாத்திரயயோகம், ஹடரத்நாவலி, ருத்திரயாமளம் முதலிய நூல்களில் எழுதப்பட்டிருக்கின்றது.

---

* கஅகூ. ஆறு கிரியை அநேக ஆசனம் முத்திரை என்னும் இவை முதலிய அங்கங்களுள் ஒவ்வோ ரங்கத்தின் சித்தியுண்டாகின்றது. அதனையே பூர்ணமாக அப்பியசித்தலால் முழுயோகமும் தானே சித்திக்கின்றது; இது "யோகத்திற்குக் குரு யோகமே" என்னும் பதஞ்சலி பகவானாற் செய்யப்பட்ட யோகசூத்திரத்தின் வியாசபாஷியத்திற் சொல்லப்பட்டிருத்தலால்.

௨. இப்போது ராஜயோகத்தைக் கூறுகின்றார்:— ௧. ஞானசாத்தியம். ௨. கிரியாசாத்தியம், ௩. ஞானக்கிரியா உபயசாத்தியம் என்னும் பேதத்தால் ராஜயோகம் மூவகைத்தாம். (சாத்தியம்—சாதிக்கப்படுவது.) (உபயம்-இரண்டு.)

௧. சுத்த சித்தமுடைய புருஷன் சாஸ்திரத்தினாலும் குருகிருபையினாலும் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயமாகிய தத்துவஞானத்தையடைந்து; ஜீவன்முக்திவிலக்ஷணாநந்தத்தினது அநுபவத்தின் பொருட்டுச் சகலப் பிரவிருத்திகளையும் விட்டு, ஏகாந்தமான இடத்தில் இருந்துகொண்டு பிரஹ்மாகார விருத்தியை அப்பியாசஞ் செய்தல் வேண்டும். அதனாற் சித்திக்கும் நிருவிகற்ப சமாதியை ஞானசாத்திய ராஜயோகமென்பர். இதனையே சகஜசமாதியென்றுங் கூறுவர். இது கீதையின் ஆறுவது அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானாலும் அபரோக்ஷாநுபூதியில் ஸ்ரீ சங்கராசாரியர்களாலும் நிருபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இதன் அங்கங்களும் ஆண்டு எழுதப்பட்டிருக்கின்றன.

இதன் விசேஷ அப்பியாசத்தால் ரஜோகுணதமோகுணங்களின் திரஸ்கார (நீக்க)முண்

டாய்ச் சத்துவகுணத்தின் ஆவிர்ப்பாவத்தால் ஐந்தாவது ஆறுவது ஏழாவது ஞானபூமிகள் பூர்வகமாக வாசனக்ஷயமும் மனோநாசமும் (ரஜோ தமோ குணங்களால் சத்துவகுணம் மறைதலாகிய மனதின் ஸ்தூலத்தன்மையின் நாசமும்) சித்திக்கின்றன.

௨ இப்போது கிரியாசாத்திய ராஜயோகத்தைக் கூறுகின்றார்:—பதினறு வருஷமுதல் இருபது வருஷவயதுடையவனும், தோஷமின்றிய மிருதுவான கேசங்களோடுகூடியவனும், மென்மையான சித்தத்தோடு கூடியவனும், சுத்த புத்தியுடையவனும் ஆசாரியனைவிட பலத்தினும் புத்தியினும் அதிகாரத்தினும் குறைந்தவனும் ரோகமின்றியவனுமாய் இவை போன்ற மற்றக்குணங்களும் பொருந்தியவன் உத்தம அதிகாரியாவன்.

அல்லது இருபத்தொரு வருஷமுதல் முப்பது வருஷ பரியந்தமான வயதுடையவனும், அதிக தோஷமில்லாத மத்திம கேசங்களையுடையவனும்,மத்திம சித்தத்தோடு கூடியவனும், மத்திம புத்தியுடையவனும்,ஆசாரியனைவிட வலியினும் புத்தியினும் அதிகாரத்தினும் சமானமுள்ளவனும், ரோகமில்லாதவனு

மாய் இவைபோன்ற வேறுகுணங்களையுமுடையவன் மத்திம அதிகாரியாவன்.

அல்லது முப்பத்தொரு வருஷமுதல் நாற்பதுவருஷ பரியந்தமான வயதுடையவனும், தோஷத்தோடுகூடிய கடினகேசங்களுடையவனும், கடின சித்தமுடையவனும், சுத்தியினாற் குறைந்த புத்தியுடையவனும், ஆசாரியனைவிட வலியினாலும் புத்தியினாலும் அதிகாரத்தினாலும் அதிகமானவனும், ரோகமின்றியவனுமாய் இவைபோன்ற மற்றக்குணங்களுமுடையவன் கனிஷ்ட அதிகாரியாவன்.

சங்கற்பத்தை யுண்டுபண்ணும் சகலப் பிரவிருத்திகளையும் விட்டுச் சொற்ப சாத்வீக ஆகாரமுடையவனாய் ஜிதேந்திரியனாய்ச் சப்த முதலிய தடைகளின்றியதும், கொசுகு முதலிய ஜந்துக்களில்லாததும், காற்றோட்ட முள்ளதுமான ஏகாந்த தேசத்தில் இலவம்பஞ்சு முதலியவற்றாலாகிய ஆசனம் விரித்துத் தெற்குத் திசையை நோக்கி உட்கார்ந்து, குரவனாற் சொல்லப்பட்ட நியமத்தில் நிற்பவனாய் முதலிற் சமாதி சித்தித்த குருவினது கைபின்றொழிலால் பிரேரிக்கப்பட்ட சக்தியினாலும், பின் அயஸ்காந்த முதலிய நிமித்தத்தாலும் எந்தச்

சமாதியைச் சித்திசெய்கின்றனரோ, அது கிரியாசாத்திய ராஜயோகமாம். பத்மபுராணத்துள்ள ஐந்து அத்தியாயவடிவ கபிலகீதையிற் கூறிய லக்ஷியயோகமும் இதனுள் அடங்கும்.

இதற்கு க. சொப்பனம், உ. சுழுத்தி, ௩. விரும்பப்பட்ட வஸ்து ஞானசாமர்த்தியமான ஆந்தரஜாக்கிரம் ச. துரியம் முதலியன பூமிகைகளாம். நான்காவது பூமியின் அடைவால் இந்தச் சமாதி யோக நித்திரை) சித்திக்கின்றது. இதில் ஹடயோகத்தைப்போலச் சரீரம் சவத்தை யொத்ததாகின்றது. ஆனால் ஹடசமாதியில் நாடியின விரிவு நீங்குகின்றது; பத்தாவது துவாரத்தில் பிராணன் ஸ்திரமாயிருத்தலால் இந்தச் சமாதியில் நாடியின் விரிவு இருக்கினறது. பிராணன் சூக்ஷ்மவடிவமாகப் பிரசித்தமா யிருத்தலால். இது அவற்றின் பேதமாம். இந்தச் சமாதி அஞ்ஞர் (அஞ்ஞானிகள்) தஞ்ஞர் (ஞானிகள்) இருவருக்கும் சித்திக்கும். இதனையும் அதிகமாய் அப்பியசித்தலால் சித்தம் அதிசய (மிக) சுத்தம் (சாத்வீகமுள்ளது) ஆகின்றது.

இதில் ஒருவருக்கொருவர் பழக்கமுடைய சித்தசாதகர்களது சகவாசம்வேண்டும். அஃதி

ல்லேயாயின் மகத்தான துக்கமேனும் அல்லது ஓர்கால் சரீரத்தினின்றும் பிராணன் வெளிப் படுதலேனும் உண்டாகும்.

சித்தியுள்ள குருவின் சந்நிதியின்றி இந்த ராஜயோகம் எதனால் சித்தியாதோ, செய்யத் தக்கது மன்றோ, அதனால் சாஸ்திரங்களில் இதனை ஸ்பஷ்டமாக எழுதவில்லே. இதனாலே யே யாமும் இதனை விஸ்தாரமாகச் சொல்ல வில்லே. சுருக்கமாய் அதன்றன்மை மாத்திரம் அறிவித்தாம்.

ந. இயமம், நியமம், ஆசனம், பிராணு யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சவிகற்பசமாதி என்னும் எட்டங்கங்களும் சித் தித்த பின்னர். லயம், விக்ஷேபம், கஷாயம, ரசாஸ்வாதம் என்னும் நான்கு விக்கினங்களே யும் விலக்கி எழும்பிய சம்ஸ்காரத்தைக் கெடு த்து நிரோத சம்ஸ்காரத்தை வெளிப்படுத்தலே முன்னிட்ட திரிபுடிபானமின்றிய பிரஹ்மா கார விருத்தியின் ஸ்திதியாகிய நிருவிகற்ப சமாதி ஞானக்கிரியா உபயசாத்திய ராஜயோ கமாம். இதன் விசேஷ நிரூபணம் பதஞ்சலி பகவானுற் செய்யப்பட்ட யோக சூத்திரம் ஸ்ரீயோகவாசிட்டம் முதலிய சமஸ்கிருத நூல்

களிலும், விசாரசாகரம், ஸ்ரீ பஞ்சதசியின் ஆறாவது பிரகரணத்தின் உரை முதலியவற்றி லும் எழுதப்பட்டிருக்கின்றது. அறியும் விருப்பமுடையார் ஆண்டுக் கண்டு கொள்க. இக்காலத்தைய மனிதர்களுக்கு இந்த ராஜ யோகம் மிகத் துர்லபமாயினும் புண்ணியந் திரண்ட பரிபாகமுடைய யோகப்பிரஷ்டன் எவனுக்காயினும் சிறிது உண்டாகும். இதை மிகவும் அப்பியசித்தலால் கிரமமாக ஐந்தாவது ஆறாவது ஏழாவது பூமிகளின் பிராப்தி உண் டாகின்றது.

ஜீவன்முக்தி விதேகமுக்திகளோ பிரஹ் மாத்மாக்களின் ஐக்கிய நிச்சயமாகிய தத்துவ ஞானத்தினாலேயே உண்டாகின்றன. ஆதலால் தத்துவ ஞானத்தின் பொருட்டேனும், ஜீவன் முக்தி விதேகமுக்தியின் பொருட்டேனும் வித் வானுக்குச் செய்யவேண்டியது ஒன்றில்லை. அங்ஙனமாயினும், வைராக்கியம் போதம் உப சமம் என்னும் மூன்றும் ஓரிடத்து இருத்தற்கு ஏதுவாகச் சொல்லப்பட்ட இவ்வப்பியாசம் எதுவோ, அது ஜீவன்முக்தி விலக்ஷணாநந்தத் தை விரும்பிய அகிருதோபாசனனை (ஞான த்திற்கு முன் பூரணமான சகுணநிர்க்குண உபாசனைகளின்றிய) வித்துவானுக்கு கர்த்தவ்

விய (செய்யவேண்டிய தென்னும்) புத்தியின்றியே தனது இச்சைப்படி செய்யத்தக்கதாம்.

ஜீவன்முக்தி விதேகமுக்திகளின் லக்ஷணம் ஸ்ரீயோகவாசிட்டத்தில் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றது. விசாரசாகரத்தின் ஏழாவது தரங்கத்திலும் வினவிடை வடிவமான விசாரசந்திரோதயத்திலும் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றது. ஜீவன்முக்தியின் * கக௦.

---

* கக௦. நிராவரணமாய்ப் பரிபூரணமாய் விருத்தியோடு கூடியதாய் உண்டாவது எதுவோ அது விலக்ஷணாநந்த மெனப்படும்.

சுழுத்தியில் உள்ள ஆநந்தம் ஆவரணத்தோடு கூடியதாயிருக்கின்றது விஷயத்திலுள்ள ஆநந்தம் நிராவரணமா யிருககின்றதாயினும், விஷயத்தின் பிராப்திக்ஷணத்தில் எப்போது அந்தர்முகவிருத்தி உண்டாகின்றதோ, அப்போது அதில் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விழுகின்றதாகலின் பரிபூரணமன்று. ஆனால் ஏகதேசத்திருப்பதா யிருத்தலின் பரிச்சின்னமாம். அங்ஙனமே பூரணாநந்தமோ அஞ்ஞானியின் சொரூபமுமாம். அங்ஙனமாயினும் அது நிராவரணமும் எதிர்முக விருத்தியோடுகூடியதுமன்று விதேகமுக்தியிலுள்ள நிராவரண பூரணாநந்தம் விருத்தியோடு கூடியதன்று; விருத்தியின்றியதாம். ஆதலால் நிராவரணமும் பரிபூரணமும் விருத்தியோடு கூடியதுமான ஆநந்தவடிவம் விலக்ஷணாநந்தத்தின் லக்ஷணமாம். இதில் ஓரிடத்தும் அதிவியாப்திமுதலிய தோஷமில்லை.

விலக்ஷணாநந்தத்தின் லக்ஷணம் ஸ்ரீ சுந்தரவிலாசத்தின் விபரியய அங்கத்தின் ரகஸ்யதீபிகை என்னும் உரையில் பரீக்ஷையோடு எழுதப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் கண்டுகொள்க.

கஉச. முற்கூறிய சிஷ்யனுக்கு ஹடயோக பூர்வகமாக ராஜயோகத்தைச் செய்தலால் என்ன பலனுண்டாயிற்று எனக் கூறப்படுகின்றது :—

முற்கூறிய சிஷ்யன் ஜீவித்திருக்கும் அவஸ்தையில் பிரியத்தோடு கூடிய ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்தத்தை அநுபவஞ்செய்தான்

மீண்டும் எப்போது பிராரத்த கர்மத்திற்கும் அந்தமுண்டாயிற்றோ, அப்போது சாஸ்திரத்திற் சொல்லியபடி கங்கை முதலிய தீர்த்தங்களின் தீரமாகிய பவித்திர தேசத்திலும் உத்தராயண முதலிய பவித்திர காலங்களிலும் பிரஹ்மத்தியான பூர்வகமாகத் தேகத்தைவிட்டான்

வித்வானுக்குத் தேகத்தை விடுதலில் ஓர் தேசகால முதலியவற்றின் அபேக்ஷை இல்லையாயினும் யோகாப்பியாசத்தின் பிரபலத்தன்மையினால் அவன் சாஸ்திரத்திற் கூறியபடி

தேகத்தை விட்டான்; கர்த்தவ்யபுத்தியினாலன்று.

௧௨௫. இப்போது நூலாசிரியர் கிரந்தத்தைச் சமாப்தி செய்கின்றவராய்க் கிரந்தத்தின் பலவடிவ மோக்ஷத்தைக் கூறுகின்றார்:— இந்த முற்கூறியவிதமான அத்வைத ரசத்தைப் பருகுவோனுக்குச் சுத்தப் பிரஹ்மத்தின் பிராப்தியாகிய சுந்தரமுக்தியுண்டாகும். பின்னர்த் தேகதாரணமாகிய ஜன்மம் உண்டாகாது ஏனெனின்,

எதனால் ஜன்மமாகிய கர்ப்பத்தினையுடைய அஞ்ஞான முதலிய ஜகத்தானது திருஷ்டியில் லேசமாத்திரமும் இல்லையோ, அதாவது ஞானபலத்தால் அத்தியந்தம் நிவிருத்தி யாகின்றதோ, அதனால் அந்த விதேகமுத்தியை யடைந்த வித்வானுக்கு மீண்டும் ஜன்மம் உண்டாகிறதில்லை. இது யுக்தமாம்

விதேக மோக்ஷத்தில் ஜன்மாதி விகார சூன்யமான வித்வானுக்குச் சொரூபம் யாது? எனக் கூறுகின்றார்:—விதேகமுக்தியை யடைந்த வித்வான் சுத்தசச்சிதாநந்தமய சொப்பிரகாச பிரஹ்மவடிவமாகின்றான்.

க. சங்கை:—விதேகமோக்ஷத்தை யடைந்த வித்வானுக்கு ஜந்மாதி விகாரத்தோடுகூடிய சுவசங்காதவடிவ ஜகத்து நிவிருத்தியாகின்றதாயினும், ஈசுவரபாவத்தின் உபாதியாகிய மாயையும் அதனால் உபலக்ஷிக்கப்பட்ட ஈசுவரத்தன்மையும் அவ்வீசுவரனால் ஆக்கப்பட்ட ஜகத்துமாகிய இம்மூன்றும் மோக்ஷகாலத்திலும் மிஞ்சுகின்றன. ஆதலால் வித்வானுக்கு ஜந்மாதிகளுக்குக் காரணமான மாயையும் ஈசுவரத்தன்மையும் ஜகத்தும் இருத்தலால் மீண்டும் ஜந்மமுதலியவற்றின் பிராப்தியுண்டாகுமாகலின் வரும் பிறப்பு முதலியவற்றின் அபாவவடிவ விதேகமோக்ஷம் சித்தியாது?

உ. வேறுசங்கை:-விதேகமோக்ஷகாலத்தில் சகல அநர்த்தங்களினது நிவிருத்தியின் முக்கிய சொரூபமாகவேனும், அல்லது அதிஷ்டானமா யிருத்தலால் பாதஞ்செய்து சொரூபமாகவேனுமுள்ள வித்வானது ஆத்மவடிவப் பிரஹ்மம் எதுவோ அது அறியபபடாததா? அல்லது அறியப்பட்டதா?

(க) அறியப்படாததெனக் கூறுவோமாயினும் விதேக மோக்ஷகாலத்திலும் பிரஹ்மத்

தில் அஞ்ஞானமிருக்க வித்வானுக்கு ஜன்ம முதலியவற்றின் அபாவம் சம்பவியாது.

(உ) அந்தப் பிரஹ்மம் அறியப்பட்டதென்னும் இரண்டாவது பக்ஷத்தைச் கூறுவோமாயின், எந்த வஸ்து அறியப்பட்டதோ அதில் கடத்தில் கடத்தன்மையினைப்போல ஞாதத்தன்மை வ்டிவ தர்மம் அவசியமிருக்கும். அந்த ஞாதத்தன்மைத் தர்மம் அந்தப் பிரஹ்மத்திற்கு விசேஷணமா அல்லது உபாதியாவென்று இரண்டு விகற்பங்களுள அவற்றில் ஞாதத்தன்மையினைப் பிரஹ்மத்தின் விசேஷணமாக வேணும உபாதியாகவேணும் கூறின் * ககக. விசேஷண மாவது * ககஉ. உபாதியாவது வர்த்தமானகாலத்தில் தான் இருந்துகொண்டு வேறுபிறித்தறிவிப்பதா யிருத்தலால், விதேக மோக்ஷகாலத்தில் அந்தக்கரணத்தின் விருத்தி

---

* ககக. விசேஷியத்தினது காரியத்தின் சம்பந்தியாய் வர்த்தமான வியாவர்த்தகம் எதுவோ அது விசேஷண மெனப்படுகின்றது. இது விசேஷணத்தின் லக்ஷணமாம்.

* ககஉ. உபகிதத்தினது காரியத்தின் சம்பந்த மில்லாததாய் வர்த்தமான வியாவர்த்தகமாவது எதுவோ அது உபாதி யெனப்படுகின்றது இது. உபாதியின் லக்ஷணமாம்.

யாகிய ஞானத்தின் அபாவத்தால் ஞாதத்தன்மை தான் இல்லாததாகப் பிரஹ்மம் அறியப்படாததே யாகும். ஆதலால் வித்வானுக்கு விதேகமோக்ஷகாலத்தில் ஜந்மாதிவிகாரமின்றிய அத்வைதப் பிரஹ்ம பாவத்தின் பிராப்தி சம்பவியாது?

இவை இரண்டு சங்கைகளாம். இவற்றின் சமாதானம் இதுவாம்:—மாயையும் அதனால் உபலக்ஷிக்கப்பட்ட ஈசுவரத்தன்மையும் ஈசுவரனால் ஆக்கப்பட்ட ஜகத்தும் மோக்ஷத்திற்கேதுவான ஞானமும் ஆகிய இவ்வெல்லாவற்றையும் விடுதலால் அந்த வித்துவான் உள்ளபடியே யாகின்றான். அதாவது ஜன்மாதி விகாரமின்றிய ஞாதத்தன்மையினால் உபலக்ஷிக்கப்படும் அத்வைதப் பிரஹ்ம வடிவமாய் நிலைக்கின்றான்

(க) ஈண்டு மாயை, ஈசுவரத்தன்மை, ஜகத்து என்பவற்றை விடுதலால் என்பதனால் முற்கூறிய சங்கைக்குச் சமாதானம் சொல்லப்பட்டது.

(உ) ஞானத்தை விடுதலால் என்பதனால் முற்கூறிய இரண்டாது சங்கைக்குச் சமாதானம் சொல்லப்பட்டது. அவற்றில்,

க. முதற் சங்கையினது சமாதானத்தின் இரகசியம் இதுவாம்:—

[க] பத்துப் புருஷர்களுக்கு இரஜ்ஜுவில் சர்ப்பத்தின் பிராந்தி யுண்டாகுமிடத்து எவனுக்கு இரஜ்ஜுவின் ஞானமுண்டாகின்றதோ அவனது திருஷ்டியினால் தனக்கும் பிறருக்கும் பிராந்திக்கு விஷயமாயுள்ள சர்ப்பம் அத்தியந்தம் நிவிருத்தமாகின்றது.

[உ] எவர்களுக்கு இரஜ்ஜுவின் ஞானம் உண்டாகிறதில்லையோ, அவர்களது திருஷ்டியால் பிராந்தியின் விஷயம் முழுவதும் இருந்தபடியே இருக்கிறது.

[க] அங்ஙனமே எவனுக்கு அதிஷ்டானப் பிரஹ்மத்தின் ஞானமுண்டாகின்றதோ, அவனது திருஷ்டியினால் தனக்கும் பிறருக்கும் பிராந்திக்கு விஷயமான மாயையும் ஈசுவரத் தன்மையும் ஜகத்தும் நீங்குகின்றன.

[உ] எவர்களுக்கு அதிஷ்டானப் பிரஹ்மத்தின் ஞானம் உண்டாகவில்லையோ, அவர்களது திருஷ்டியினால் மாயை ஈசுவரத்தன்மை ஜகத்து என்பன உள்ளபடியே அநாதிசித்தமாய் நிலைத்திருக்கின்றன.

இது முதற்சங்கையினது சமாதானத்தின் இரகசியம் சொல்லப்பட்டது.

உ. இரண்டாவது சங்கைக்கு முற்கூறிய சமாதானத்தின் இரகசியம் இதுவாம்:—

காகமுடைய தேவதத்தனது வீட்டிற்குக் காகபக்ஷி உபலக்ஷணமாம்.

வர்த்தமானகாலத்திலும் வருங்காலத்திலும் எது எதன் வியாவர்த்தகம் (பிறவற்றினின்றும் வேறு பிறித் தறிவிப்பது) ஆகுமோ அது அதன் உபலக்ஷணமாம்

காகம், வர்த்தமானகாலத்தில் தனது இருப்புடையதாய் வருங்காலத்தில் தனது இன்மையுடையதாயினும், இக் காகமுடைய வீடு என்பதாக அந்த தேவதத்தனது வீட்டை மற்றக் காகசம்பந்த மின்றிய வீடுகளினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. ஆதலால் அக் காகம தேவதத்தனது வீட்டின் உபலக்ஷணமெனப்படுகின்றது. அங்ஙனமே வித்துவானது சுவசொரூபப் பிரஹ்மம் ஞானத்திற்கு விஷயமாயிருத்தலால் ஞாதமாம். அந்த ஞாதமாகிய பிரஹ்மத்தில் ஞாதத்தன்மை வடிவ தர்மத்தின் கற்பனையுண்டாகின்றது; அந்த ஞாதத்தன்மை வடிவதர்மப் பிரஹ்மத்தின்

உபலக்ஷணமாம் என்று யாம் அங்கீகரித்திருக்கின்றோம்.

ஏதனால் ஞாதத்தன்மைவடிவ தர்மம் வர்த்தமான (ஜீவன் முக்தி) காலத்தில் தனது இருப்புடையதாய் வருங்காலத்தில் தனது இன்மையுடையதாயினும் இந்த வித்வானது சொரூபவடிவப் பிரஹ்மம் ஞாதமாம் (ஞாதத்தன்மை வடிவ தர்மமுடையதாம்).

இவ்வாற்றால் வித்வானது சொரூபவடிவப் பிரஹ்மத்தை அவித்வான்களது சொரூபவடிவ அஞ்ஞாத (அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட) பிரஹ்மத்தினின்றும் வேறுபிரித்தறிவிப்பதாயிருத்தலின் அந்த ஞாதத்தன்மைவடிவ தர்மம் வித்வான்களது சொரூபவடிவ பிரஹ்மத்தின் உபலக்ஷணமாம். அந்த ஞாதத்தன்மைவடிவ உபலக்ஷணத்தோடுகூடிய கற்பிதத்தின் நிவிருத்திவடிவ வித்வான்களது சொரூபமான பிரஹ்மம் எதுவோ அது ஞாதத்தன்மை யுபலக்ஷிதமெனப்படும்.

இவ்வாற்றால் விதேக மோக்ஷகாலத்தில் ஞாதத்தன்மைவடிவ தர்மத்தின் அபாவம் உளதாகியும் இந்த வித்வானது சொரூபவடி

வப்பிரஹ்மம் * ககூச. ஞாதமாம் என்று அந்நியர்களால் வியவகாரமும் செய்யப்படுகின்றது. வித்வான்களது விதேக மோக்ஷகாலத்தில் த்வைதத்தின் அடைவு மில்லை. ஆதலால் யாம் கூறியது முழுவதும் சிரேஷ்டமாம்.

---

* ககூச. சுகர் முதலிய மகாத்மாக்கள் பிரஹ்ம ஞானிகளானார்கள். இவ்வாறு அந்நியர்களிடத்தில் பிரசித்தியினால் ஞானிகளது சொரூப வடிவப் பிரஹ்மத்தினது ஞாதத்தன்மையின் வியவகாரம் உண்டாகின்றது.

ஒன்பதாவது உபதேசம் முடிந்தது.

ஸ்ரீபாலபோதம் முற்றிற்று.



ஓம்.

ஸ்ரீ பிரஹ்ம நிஷ்டபண்டித
ஸ்ரீமான் வே. குப்புஸ்வாமி ராஜு அவர்களால்
வெளிப்படுத்தப்பட்டவைகளில் இப்பொழுது
விற்பனைக்குத்தாயாராகவிருக்கும்
புத்தகங்கள்

ஸ்ரீ பஞ்சதசி.

(வித்தியாரண்ணிய சுவாமிகள் ஸ்ரீ
காயத்திரிதேவியின் வரத்தால் இயற்றியது.)
விலை ரூ 10—0—0

பலநாளும் பலரும்
வெளிவரவேண்டுமென்றெதிர்பார்த்ததும்,
இதுகாறும் வெளிவராததுமான
சிவயோகப்பிரதீபிகை.

ஸ்ரீ சதாசிவயோகீந்திரர் இயற்றியது

இதில் மந்திரயோகம், லயயோகம், ஹடயோகம், ராஜயோகம், பாகியசதுரங்கம், ஆப்பியந்தர சதுரங்கம், பாகிய சதுரங்கவிதானம், இயமம், நியமம், ஆத்ம சுத்தி, ஆசனம், மடலக்ஷணம், பிராணயாமம், பிராணயாமபேதம், பிராகிருத பிராணயாமம், வைகிருதபிராணயாமம், கேவலகும்பகம், நால்வகை யோகம், மூலபந்தம், ஒட்டியானபந்தம், ஜாலந்தரபந்தம், அந்தரங்கசதுரங்கவிதானம், பிரத்யாகாரம், தியானம், நவசக்கிரம், ஷோடசஆதாரம், தாரணை மூன்று, தியானம், பஞ்சதாரணை, சமாதி, ஞானஷ்டாங்கயோகம், தாரகயோகம், லக்ஷியத்திரயம், ஞானசிவபூஜை முதலியனவிருக்கின்றன. இந்நூல் சிவயோகிகளுக்கும், சைவர்களுக்கும் மிக முக்கியமானது. பொன்போற் போற்றத்தக்கது. ராபர் அணா 10. கலிகோ அணா 12.